# பழங்காலத் தமிழர் வாணிகம்

(சங்க காலம்)

மயிலை சீனி. வேங்கடசாமி




நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிட்.,
*41-பி, சிட்கோ இண்டஸ்ட்டிரியல் எஸ்டேட்,*
*சென்னை—600 098.*

# முகவுரை

'சங்க காலத் தமிழர் வாணிகம்' என்னும் இந்தப் புத்தகம் கடைச்சங்க காலத்தில் (அதாவது கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரையில்) தமிழர் நடத்திய வாணிகத்தைப் பற்றிக் கூறுகிறது. அந்தக் காலத்துப் பழந்தமிழர், பாரத தேசத்தின் வடக்கே கங்கைக்கரை (பாடலிபுரம்)முதலாகக் கிழக்குக்கரை மேற்குக்கரை நாடுகளில் நடத்திய வாணிகத்தைப் பற்றியும் தமிழகத்துக்கப்பால் கிழக்கே இலங்கை, சாவகநாடு (கிழக்கிந்தியத் தீவுகள்), மலேயா, பர்மா முதலான கடல் கடந்த நாடுகளோடு செய்த வாணிகத்தைப் பற்றியும், மேற்கே அரபுநாடு, அலக்சாந்திரியம் (எகிப்து), உரோம் சாம்ராச்சியம் (யவன தேசம்) ஆகிய நாடுகளுடனும் செய்த வாணிகத்தைப் பற்றியும் கூறுகிறது. அந்தப் பழங்காலத்து வாணிகச் செய்திகளைச் சங்ககாலத்து நூல்களை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது. மற்றும் தாலமி, பிளினி முதலான யவன ஆசிரியர் எழுதின குறிப்புகளிலிருந்தும் 'செங்கடல் வாணிகம்' என்னும் நூலிலிருந்தும், புதைபொருள் ஆய்வுகளிலிருந்தும் கிடைத்த செய்திகளிலிருந்தும் கிடைக்கும் சான்றுகளைக் கொண்டும் எழுதப்பட்டது.

அந்தப் பழங்கால வாணிகத்துக்கும் இக்காலத்து விஞ்ஞான உலக வாணிகத்துக்கும் பெருத்த வேறுபாடுகள் உள்ளன. ஆனல், அந்தப் பழங்காலத்தவர், அக்காலத்து இடம், பொருள், ஏவல்களுக்கும் சூழ்நிலைகளுக்கும் தக்கபடித் தரை வாணிகத்தையும் கடல் வாணிகத்தையும் நடத்தினார்கள். அவர்கள் கூட்டாகச் சேர்ந்து 'சாத்து' அமைத்துப் பெரிய வாணிகத்தை நடத்தினர்கள். தரை வாணிகஞ் செய்த வாணிகத் தலைவர் மாசாத்துவர் என்று பெயர் பெற்றனர். கடல் வாணிகத் தலைவர் மாநாய்கர் (மாநாவிகர்) என்று பெயர் கூறப்பட்டனர். அக்காலத் தமிழகத்திலே பல மாசாத்துவர்களும் பல மாநாய்கர்களும் இருந்தார்கள்.

சங்ககாலத்துத் தமிழரசர்கள் தங்களுடைய நாடுகளில் வணிகர்க்கு ஊக்கமளித்து வாணிகத்தை வளர்த்தார்கள்; அவர்கள் தங்களுடைய நாடுகளில் வாணிகக் கப்பல்கள் வந்துபோகவும் ஏற்றுமதி இறக்குமதி செய்யவும் துறைமுகப் பட்டினங்களை அமைத்தார்கள். இராக்காலத்தில் கடலில் வருகிற கப்பல்கள் திசை தப்பிப் போகாமலும், துறைமுகத்தைக் காட்டவும் கலங்கரை விளக்குகளை அமைத்தார்கள். துறைமுகங்களில் உள்ள வாணிகப் பொருள்கள் களவு போகாதபடி காவல் வைத்தனர். வாணிகஞ் செய்து பெரும் பொருள் ஈட்டின வணிகப் பெருமக்களுக்கு 'எட்டி' என்னும் சிறப்புப் பெயரும், 'எட்டிப்பூ' என்னும் பொற் பதக்கத்தையும் அளித்துச் சிறப்பினைச் செய்தார்கள். தரை வாணிகமும் கடல் வாணிகமும் பெருகவே, அவற்றைச் சார்ந்து பயிர்தொழில் வளர்ச்சியும் கைத்தொழில் வளர்ச்சியும் பெருகிப் பொருள் உற்பத்தி அதிகப்பட்டது. பொருள்களின் உற்பத்தியினாலும் வாணிகத்தினாலும் பொருளாதாரம் உயர்ந்து நாடு செழித்து மக்கள் நல்வாழ்வு வாழ்ந்தார்கள். நாட்டு மக்களின் நல்வாழ்வுக்கும் நாகரிக வாழ்க்கைக்கும் வாணிகம் முக்கிய காரணமாக இருந்தது.

நாட்டின் சரித்திரம் அந்நாட்டை அரசாண்ட அரசர்களுடைய வரலாறு மட்டும் அன்று, அந்நாட்டில் வாழ்ந்த குடிமக்களின் வாழ்க்கை வரலாறும் சேர்ந்ததே சரித்திரமாகும். சங்ககாலத்தில் வாழ்ந்த தமிழர்களின் வாழ்க்கை வரலாற்றில் ஒரு பகுதி வாணிகத்தைச் சார்ந்தது. அக்காலத்து வாணிகத்தைக் கூறுகிற இந்நூல் பழந்தமிழர் வரலாற்றின் ஒரு கூறாகும். தமிழரின் பழைய வரலாற்றை அறிய விரும்புவோர்க்கு இப்புத்தகம் நல்லதோர் துணையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

என்னை இந்த நூலை எழுத ஊக்குவித்தும் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டும் உதவிய **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் நிலையத்தாருக்கு** என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மயிலாப்பூர்-சென்னை
6-4-1974

**மயிலை சீனி. வேங்கடசாமி.**

# உள்ளடக்கம்

# 1. சங்க கால மக்கள் வாழ்க்கை

சங்க காலத்து வாணிகத்தைப் பற்றிப் பேசும் போது அக்காலத்து மக்களின் வாழ்க்கை நிலை எப்படி இருந்தது என்பதையும் அறியவேண்டும். சங்க காலம் என்பது கடைச் சங்க காலம். அது கி.பி.250-க்கு முற்பட்ட காலம். இக் காலத்துத் தமிழர் வாழ்க்கைக்கும் அக் காலத்துத் தமிழர் வாழ்க்கைக்கும் அதிக வேறுபாடு உண்டு. இப்போதுள்ள நாகரிகம் அக் காலத்தில் இல்லை. அக்காலத்தில் எல்லா நாடுகளிலும் மனித வாழ்க்கையும் நாகரிகமும், மட்டமாகவும் தாழ்ந்த நிலையிலும் இருந்தன. வாழ்ந்த இடத்துக்கும் சூழ்நிலைக்கும் தக்கபடி அவர்களுடைய நாகரிகமும், வாழ்க்கையும் உயர்ந்தும் தாழ்ந்தும் இருந்தன. அவர்கள் வாழ்ந்த இடங்களும் சூழ்நிலைகளும் ஒரே மாதிரி இல்லாமல் வெவ்வேறு வகையாக இருந்தபடியால் அவர்களுடைய வாழ்க்கை வெவ்வேறு விதமாகத் துன்பமாக அல்லது எளிதாக இருந்தது.

அந்தக் காலத்தில் மனிதர் எந்தெந்த இடங்களில் எவ்வெப்படி வாழ்ந்தார்கள் என்பதை அறிவதற்குச் சங்க இலக்கியங்கள் மிகவும் பயன்படுகின்றன. நிலத்தினுடைய இயற்கையமைப்புக்குத் தக்கபடி அக்காலத்து மக்கள் வாழ்க்கை ஐந்து விதமாக அமைந்திருந்தது. குறிஞ்சி நிலம், முல்லை நிலம், மருத நிலம், நெய்தல் நிலம், பாலை நிலம் என்னும் நிலப் பிரிவுப்படி அவர்களுடைய வாழ்க்கையும் ஐந்து வகையாக இருந்தது. மலையும் குன்றுகளும் உள்ள இடங்கள் குறிஞ்சி நிலம் என்று பெயர் பெற்றன. மேற்குத் தொடர்ச்சி மலைகளும் கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் தமிழ்

நாட்டில் அமைந்துள்ளன. மலைகளின் மேலும் மலைச்சாரல்களிலும் மக்கள் வாழ்ந்து வந்தார்கள்.

மலைகளுக்குக் கீழே இருந்த காடுகளும், காடு சார்ந்த இடங்களும் முல்லைநிலம் என்று பெயர் பெற்றன. இங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை, மலைகளில் வாழ்ந்தவர்களின் வாழ்க்கையைவிட வேறுவிதமாக இருந்தது. ஆறுகள் பாய்கிறதும் அல்லது ஏரி குளங்கள் உள்ளதுமான சமவெளிகள் மருதம் என்று பெயர் பெற்றன. இங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை, மற்றவர்களுடைய வாழ்க்கையைவிட மேலானதாக இருந்தது. கடற்கரையோரமாக இருந்த நிலங்கள் நெய்தல் நிலம் என்று பெயர் பெற்றன. சங்க காலத்தில் மிக நீண்ட கடற்கரை தமிழகத்துக்கு இருந்தது. அக்காலத்தில், மேற்குக் கடற்கரையையடுத்திருந்த சேர நாடும் (இப்போதைய மலையாள நாடு) துளு நாடும் (இப்போதைய தென் கன்னட வடகன்னட மாவட்டங்கள்) தமிழ் நாடாக இருந்தபடியால், பழந்தமிழகத்துக்கு மிக நீண்ட கடற்கரை இருந்தது. கடற்கரையான நெய்தல் நிலத்தில் வசித்தவர் வாழ்க்கை துன்பகரமான வாழ்க்கை. அவர்கள் நாள்தோறும் கடலில் வெகுதூரம் சென்று மீன்பிடித்து வந்து வாழ்க்கையை நடத்தினர்கள்.

இந்த நால்வகையான இயற்கை நிலம் அல்லாத வரண்ட பிரதேசம் பாலை நிலம் என்று பெயர் பெற்றது. இங்கு இயற்கையாக மக்கள் வாழவில்லை. யாரேனும் இங்கு வசித்தார்கள் என்றால் அவர்களுடைய வாழ்க்கை மிருக வாழ்க்கை போல இருந்தது. இவ்வாறு இயற்கையாக அமைந்த வெவ்வேறு சூழ்நிலைகளில் வசித்த அக்காலத்துத் தமிழ் மக்களுடைய வாழ்க்கை வெவ்வேறு வகையாக இருந்தது. அவர்களுடைய தொழிலும் உணவும் உடையும் பண்பாடும் வெவ்வேறு விதமாக இருந்தன. அவற்றைச் சுருக்கமாகக் கூறுவோம்.

## குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கை

மலைகளும் குன்றுகளும் அவற்றைச் சார்ந்த இடங்களும் குறிஞ்சி நிலம் என்று கூறினோம். இங்கு இருந்த ஊர்

களுக்குக் குறிஞ்சி என்றும் சிறுகுடி என்றும் பெயர். இங்கு வாழ்ந்த மக்கள் குறவர் என்றும் குன்றவர் என்றும் இறவுளர் என்றும் அழைக்கப்பட்டார்கள். இறவுளர் என்பவர் இக் காலத்தில் இருளர் என்று கூறப்படுகின்றனர். இங்குச் சுனை நீர் உண்டு. மலையருவிகளும் உண்டு. பொதுவாக அருவிகள் வேனில் காலத்தில் வறண்டுவிடும். எக்காலமும் ஓடிக் கொண்டிருக்கிற அருவிகள் மிகச் சிலவே. மலைப்பாறைகளுக்கிடையே செடி கொடி மரங்கள் உண்டு. குறிஞ்சிச் செடிகளும் காந்தள் செடிகளும் குறிப்பிடத்தக்கவை. மூங்கிற் புதர்கள் உண்டு. வேங்கை, திமிசு, தேக்கு, சந்தனம், அகில், கடம்பு, கருங்காலி முதலான மரங்கள் வளர்ந்தன. பறவைகளில் மயிலும் கிளியும் குறிப்பிடத்தக்கவை. புலி, யானை, சிறுத்தைப்புலி, கரடி, காட்டுப்பன்றி, குரங்கு முதலான மிருகங்கள் இருந்தன.

மலைகளிலும் மலைச் சாரல்களிலும் ஐவன நெல்லையும், தினை என்றும் அரிசியையும் பயிர் செய்தார்கள். மரம் செடி கொடிகளை வெட்டி அப்புறப்படுத்தி வேர்களைக் கிளறிக் கொத்தி நிலத்தைப் பண்படுத்தினார்கள். பண்படுத்திய நிலத்தை ஏரினால் உழாமல் மண்வெட்டியால் கொத்திக் கிளறி ஐவன நெல்லையும் தினையையும் பயிர் செய்தார்கள். இவை வானம் பார்த்த பயிர்கள். பெரும்பாலும் மழையை எதிர்பார்த்துப் பயிரிடப்பட்டவை.

மலையுச்சியிலுள்ள பாறைகளில் மலைத்தேன் கிடைத்தது. வள்ளிக் கிழங்கு பயிராயிற்று. பலா மரங்களிலே பலாப் பழங்கள் கிடைத்தன. யானைகளையும் காட்டுப்பன்றிகளையும் வேட்டையாடினார்கள். தேனை மூங்கிற் குழாய்களில் ஊற்றிப் பதப்படுத்தி ஒருவகை மதுவை உண்டாக்கினார்கள். தினையரிசியிலிருந்தும் மதுபானம் உண்டாக்கினார்கள். மிகத் தாழ்வான சிறிய குடில்களைக் கட்டி அதன் மேல் தினைத் தாளையும் ஐவன நெல்லின் தாளையும் கூரையாக வேய்ந்த குடில்களில் வசித்தார்கள். இவர்களுடைய வாழ்க்கை கடின வாழ்க்கையாக இருந்தது. இவர்களுடைய உணவு உற்பத்தி போதுமானவையன்று, பற்றாக்குறையாகவே இருந்தது. மலைத் தேன், யானைத் தந்தம், புலித்தோல், அகில், கட்டை,

சந்தனக் கட்டை ஆகியவற்றை விற்றார்கள். இவர்களுடைய வாணிகம் பண்டமாற்றாக இருந்தது. இவர்களுடைய இயற்கைச் சூழ்நிலை நாகரிகம் பெறுவதற்கு ஏற்றதாக இல்லை.

## முல்லை நிலத்து மக்கள் வாழ்க்கை

மலைகளின் அடிவாரத்தில் உள்ளது முல்லை நிலம். சிறு குன்றுகளும் காடுகளும் காட்டாறுகளும் இங்கே இருந்தன. முல்லைக் கொடிகளும் கொன்றை (சரக்கொன்றை), குருந்து முதலான மரங்களும் இங்கு உண்டு. கானக்கோழி, மயில், முயல், மான் முதலானவை இங்கு இருந்தன. இங்கு வாழ்ந்த மக்கள் இடையர், எயினர் (எயினர் - வேடர்.). இடையர் பசுக்களையும் ஆடுகளையும் எருமைகளையும் வளர்த்தார்கள். அவைகளைக் காடுகளிலும் புற்றரைகளிலும் ஓட்டி மேய்த்தார்கள். வரகு, கேழ்வரகு ஆகிய தானியங்களைப் பயிரிட்டார்கள். அவரை, துவரை போன்றவைகளையும் பயிரிட்டார்கள். குளங்களிலிருந்து நீர்ப் பாய்ச்சினார்கள். இவை வானம் பார்த்த பயிர்கள். மழையை எதிர்பார்த்தே பயிர் செய்தார்கள். வரகு, கேழ்வரகு இவற்றை உணவாக உண்டார்கள். பால் தயிர் நெய்களையும் உணவாக உண்டார்கள்.

இவர்கள் தங்கள் வீடுகளைக் குடில்களாகக் கட்டிக் கொண்டிருந்தார்கள். வரகுத்தாள், கேழ்வரகுத்தாள்களைக் கூரையாக வேய்ந்தார்கள். இவர்களுடைய வீடுகள், குறிஞ்சி மக்களின் வீடுகளைவிட உயரமாகவும் நன்றாகவும் இருந்தன. பால், தயிர், மோர், நெய்களை விற்றார்கள். இவற்றைப் பெரும்பாலும் பண்ட மாற்றாகவே விற்றார்கள். முல்லை நிலத்து மக்கள் வாழ்க்கை, குறிஞ்சி நிலத்து மக்கள் வாழ்க்கையை விடச் சற்று உயர்ந்திருந்தது. இவர்கள் அவர்களை விட நன்றாகவும் நாகரிகமாகவும் வாழ்ந்தார்கள்.

## மருத நிலத்து மக்கள் வாழ்க்கை

ஏரிகள் அல்லது ஆறுகளைச் சார்ந்திருந்தது மருத நிலம். நிலவளமும் நீர்வளமும் உள்ள மருத நிலத்தில் மண் வளம் மிக்க வயல்களில் நெல்லைப் பயிரிட்டார்கள். எருதுகளையும்,

எருமைகளையும் பூட்டிய ஏர்களினால் நிலத்தை உழுது, பண் படுத்தி எருவிட்டு விதைவிதைத்து நீர்பாய்ச்சி நெல்லை விளைத் தார்கள். கரும்பையும் பயிரிட்டார்கள். காய்கறி முதலான உணவுப் பொருள்களையும் பயிரிட்டார்கள். நெல்லைப் பயி ரிட்டு உணவுக்கு முட்டுப்பாடில்லாமல் வாழ்ந்தபடியினால் மருத நிலத்து மக்கள் வாழ்க்கை மற்ற நிலத்து மக்கள் வாழ்க் கையைவிட பலமடங்கு உயர்ந்திருந்தது. வாழ்க்கையில் அதிகம் கவலைப்படாமல் இருந்த இவர்களுக்கு ஓய்வும் கிடைத் தது. ஆகவே இவர்கள் நாகரிகமும் பண்பாடும் பெற்று வாழ வாய்ப்பிருந்தது.

உலகத்திலே எல்லாத் தேசங்களிலும் மக்கள் நாகரிகம் பெற்ற இடம் ஆற்றங்கரைகளிலும் ஏரிக்கரைகளிலுந்தான் என்று வரலாறு கூறுகிறது. இது உண்மையே. தமிழ் நாட்டி லும் மக்கள் நாகரிகம் பெற்று வளர்ந்த இடம் ஆற்றங்கரை களும் ஏரிக்கரைகளுமே. ஆகவே மருத நிலத்திலேதான் தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் வளம்பெற்று வளர்ந் தன. கைத்தொழில்களும் கல்வியும் கலைகளும் வாணிகமும் செல்வமும் அரசியலும் அமைதியான வாழ்க்கையும் மருத நிலங்களிலே செம்மையாகச் செழித்து வளர்ந்தன. மருத நிலத்து மக்கள் கட்டடங்களையும் மாளிகைகளையும் அரண் மனைகளையும் அமைத்துக் கொண்டு நாகரிகமாகவும் நன்றாக வும் வாழ்ந்தார்கள்.

## நெய்தல் நிலத்து மக்கள் வாழ்க்கை

கடலைச் சார்ந்த நிலம் நெய்தல் நிலம் என்று கூறினோம். கடற்கரைக் குப்பங்களிலும் பாக்கங்களிலும் வசித்த நெய்தல் நிலத்து மக்கள் பரதவர் என்றும் பட்டினவர் என்றும் பெயர் பெற்றனர். மணல் நிலம் ஆகையினால் இங்கே நெல், கேழ்வரகு முதலான தானியங்கள் விளையவில்லை. ஆகவே நெய்தல் நிலத்து மக்கள் கட்டுமரங்களிலும் படகுகளிலும் கடலில் வெகுதூரம் போய் வலைவீசி மீன் பிடித்துவந்து விற்று வாழ்ந்தார்கள். கடலில் சுறு, இறால், திருக்கை முத லான மீன் வகைகள் கிடைத்தன. அவற்றைப் பிடித்துவந்து

அயல் ஊர்களில் விற்று (பண்டமாற்று செய்து) தானியங்களைப் பெற்று வாழ்ந்தார்கள். விற்று மிகுந்த மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்தி உலர்த்திக் கருவாடு செய்து விற்றார்கள்.

சில இடங்களில் கடற்கரை யோரங்களில் உப்பளங்கள் இருந்தன. அந்த அளங்களில் கடல்நீரைப் பாய்ச்சி உப்பு உண்டாக்கினார்கள். உப்பை நெல்லுக்கு மாற்றினார்கள்.

நெய்தல் நிலத்து மக்கள் வாழ்க்கை கடினமான வாழ்க்கையே. குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கை ஒரு வகையில் கடினமானது என்றால் நெய்தல் நிலத்து மக்கள் வாழ்க்கை வேறு வகையில் கடினமானது.

கடற்கரையோரங்களில் சில இடங்களிலே துறைமுகங்கள் இருந்தன. துறைமுகங்களிலே வாணிகக் கப்பல்கள் வந்து இறக்குமதி, ஏற்றுமதி செய்தபடியால் துறைமுகப் பட்டினங்களில் வாணிகமும் செல்வமும் பெருகின. ஆகவே துறைமுகப் பட்டினங்கள் நாகரிகமும் செல்வமும் பெற்று விளங்கின.

பாலை நிலத்தில் மக்கள் வாழவில்லை என்று கூறினோம். வாழ்வதற்கு எந்த விதத்திலும் வாய்ப்பில்லாத பாலை நிலத்தில் மக்கள் வாழவில்லை. வாழ்ந்தவர்களும் மனிதராக வாழவில்லை. மாக்களைப் போல வாழ்ந்தார்கள்.

இவ்வாறு வெவ்வேறு இயற்கையான சூழ்நிலைகள் அமைந்த இடங்களில் வசித்த அக்காலத்துத் தமிழர் வெவ்வேறு வகையான வாழ்க்கையை வாழ்ந்தார்கள். விரைவான போக்குவரத்துச் சாதனங்களும் தந்தி தபால் வசதிகளும், மற்றும் இக்காலத்து வசதிகள் பலவும் அக்காலத்தில் இல்லாதபடியால் கல்வி, பொருளாதாரம்,நாகரிகம் முதலியவை வளர்ச்சியடைய இயலாமற் போயின. இக்காலத்தில் மிக எளிய மக்கள் பெறுகிற வசதியைக்கூடச் செல்வம் பெற்றவர் பெற முடியாத சூழ்நிலை அக்காலத்தில் இருந்தது. இத்தகைய சூழ்நிலை தமிழருக்கு மட்டுமல்ல, உலகத்தில் எல்லா நாட்டிலும் இப்படிப்பட்ட நிலைதான் இருந்தது.

அந்தக் காலத்தில் தமிழருடைய நாகரிகம் மருத நிலத்திலும் துறைமுகப் பட்டினங்களிலும் வளர்ந்தன என்று

கூறினேம். ஆம், பட்டணங்களிலும் பட்டினங்களிலும் தான் அக்காலத்து தமிழரின் நாகரிகம், பண்பாடு, கலைகள் எல்லாம் வளர்ந்தன.

தமிழரின் வாணிகம் அக்காலத்தில் எவ்வாறு நடந்தது என்டதைப் பார்ப்போம். இக்காலத்தில் சிறு விலையுள்ள பொருளுக்கும் அதிக விலையுள்ள பொருளுக்கும் காசு பயன் படுகிறது. ஆனுல் காசு (நாணயம்) ஆதிகாலத்தில் ஏற்பட வில்லை. ஆதிகாலத்தில் பண்டமாற்று—ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக மற்றெரு பொருளைப் பெறுவது— நடந்தது. பிறகு பையப்பைய நாணயம் (காசு) வழங்கத் தலைப்பட்டது. நமது ஆராய்ச்சிக்குரிய சங்க காலத்துத் தமி ழகத்திலே பண்ட மாற்றும் நாணயச் செலாவணியும் நடை பெற்றன.

# 2. பண்ட மாற்று

சங்க காலத்திலே வாழ்ந்த தமிழர் அன்றாடத் தேவை யான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருள்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்ட மாற்று செய்து கொண்டார்கள். பண்டமாற்று என்பது ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக இன்னொரு பொருளைக் கொள்வது. அதிக விலையுள்ள பொருள்களை மட்டும் காசு கொடுத்து வாங்கினார்கள். பெரிய பட்டினங் களிலும் நகரங்களிலும் காசு கொடுத்துப் பொருளை வாங்கும் முறை இருந்தபோதிலும் ஊர்களிலும் கிராமங்களிலும் பொதுவாகப் பண்டமாற்று முறையே வழக்கத்தில் இருந்தது. தமிழ் நாட்டில் மட்டுமல்லாமல் உலகத்திலே எல்லா நாடு களிலும் பழங்காலத்தில் பண்ட மாற்றுதான் நடந்து வந்தது. மற்ற நாடுகளில் இருந்தது போலவே தமிழகத் திலும் பழங்காலத்தில் பண்டமாற்று முறை இருந்தது. சங்க நூல்களிலிருந்து இதை அறிகிறோம்.

இடையன் பாலைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தானி யத்தை மாற்றிக் கொண்டதை முதுகூத்தனார் கூறுகிறார். 'பாலொடு வந்து கூழொடு பெயரும் யாடுடை இடையன்' என்று (குறு.221. 3-4) அவர் கூறுகிறார் (கூழ் என்பது அரிசி, கேழ்வரகு, வரகு, தினை முதலான தானியங்கள்).

ஆயர் மகளிர் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்து நெய் காய்ச்சினார்கள். தயிரையும் மோரையும் மாறித் தானி யத்தைப் பெற்று உணவு சமைத்து உண்டதைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறுகிறார்.

'நள்ளிருள் விடியல் புள்ளெழப் போகிப்
புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி
ஆம்பி வான்முகை யன்ன கூம்புமுகிழ்
உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ
நாள்மோர் **மாறும்** நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வரும் காதிற் பணைத்தோள்
குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்
அளவிலை உணவில் கிளையுடன் அருத்தி'

என்று (பெரும்பாண், 155 - 163) அவர் கூறுகிறார்.
(நுரை-வெண்ணெய்; அளை - மோர்; மாறும் - பண்டமாற்று செய்யும்; கிளையுடன் - சுற்றத்தாரை; அருத்தி - உண்பித்து)

ஆனால், இடைச்சியர் நெய்யைப் பண்டமாற்று செய்யாமல் காசுக்கு விற்று அக்காசுகளைச் சேமித்து வைத்தார்கள். குறிப்பிட்ட தொகை காசு சேர்ந்தபோது அக்காசைக் கொடுத்துப் பசுவையும் எருமையையும் விலைக்கு வாங்கினார்கள். என்று இந்தப் புலவரே கூறுகிறார்.

'நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉம்
மடிவாய்க் கோவலர்.'

(பெரும்பாண், 164-166)

(விலைக்கு அட்டி-விலைக்காக அளந்து; பசும்பொன் கொள்ளாள்-நெய் விலையாகவுள்ள காசைப் பெறுமல் அவர்களிடத்திலேயே சேமித்து வைத்து; நல்லான்-பசு; நாகு-பெண் எருமை)

வேடன் தான் வேட்டையாடிக் கொண்டுவந்த மான் இறைச்சியை உழவனிடத்தில் கொடுத்து அதற்கு ஈடாக நெல்லை மாற்றிக் கொண்டதைக் கோவூர் கிழார் கூறுகிறார். இடைச்சியரும் உழவனுக்குத் தயிரைக் கொடுத்து நெல்லைப் பெற்றுக் கொண்டனர் என்று இப்புலவரே கூறுகிறார்.

'கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய

ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கோள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப உவந்தனர் பெயரும்
தென்னம் பொருப்பன் நன்னாடு'

(புறம், 33: 1-8)

(வட்டி-பனையோலையால் முடைந்த சிறு கூடை; தசும்பு - பானை; குளக்கீழ் விளைந்த-ஏரிக்கரையின் கீழே விளைந்த; முகந்தனர் கொடுப்ப-அளந்து கொடுக்க)

பாணர் உள்நாட்டு நீர் நிலைகளில் (ஆறு, ஏரி, குளங்களில்) வலை வீசியும் தூண்டில் இட்டும் மீன் பிடித்தார்கள். அவர்கள் பிடித்த மீன்களைப் பாண்மகளிர் ஊரில் கொண்டு போய்ப் பயற்றுக்கும் தானியத்துக்கும் மாற்றினார்கள் என்று ஓரம் போகியார் கூறுகிறார்.

'முள் எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்
அரிகால் பெரும்பயறு நிறைக்கும்'

(ஐங்குறு, மருதம், புலவிப்பத்து, 47)

(பாண்மகள்-பாணர் பெண்; கெடிறு-கெளுத்தி மீன்; மனையோள் - குடியானவன் மனைவி)

'வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்
யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும்.'

(ஐங்குறு, மருதம், புலவிப்பத்து, 48)

(வாரஅல்-வரால் மீன்; ஆண்டுகழி வெண்ணெல்-ஒரு ஆண்டு பழமையான நெல்)

'அஞ்சில் ஓதி அசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்'

(ஐங்குறு, மருதம், புலவிப்பத்து, 49)

கடற்கரையைச் சார்ந்த உப்பளங்களில் நெய்தல் நில மக்கள் உப்பு விளைத்தார்கள். உப்பு வாணிகர் மாட்டு வண்டிகளிலே நெல்லைக் கொண்டு வந்து கொடுத்து உப்பை மாற்றிக் கொண்டு போனார்கள் என்று நற்றிணைச் செய்யுள் கூறுகிறது.

'தந்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி

.. .. ..

உமணர் போகலும்'

(நற்றிணை, 183)

(தந்நாடு-உப்பு வாணிகரின் மருதநிலம்; பிறநாடு-உப்பு விளையும் நெய்தல் நிலம்; உமணர்-உப்பு வாணிகர்)

நெய்தல் நிலத்து முதுமகள் ஒருத்தி தன் உப்பளத்தில் விளைந்த உப்பை மாற்றி நெல் கொண்டுவரச் சென்றாள் என்று கல்லாடனார் கூறுகிறார். 'ஆயும் உப்பை மாறி வெண்ணெல் தரீஇய உப்பு விளை கழனிச் சென்றனள்?' (குறும். 269: 4-6)

(ஆய்-அன்னை, தாய்; தரீஇய-கொண்டுவர)

ஊர்த் தெருவுகளில் உப்பு விற்ற உமணப் பெண் உப்பை நெல்லுக்கு மாற்றினதை அம்மூவனார் கூறுகிறார்.

'கதழ்கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்
சேரிவிலை மாறு கூறலின்.'

(அகம், 140: 5-8)

(சேரி-தெரு; விலைமாறு-பண்ட மாற்று)

'நெல்லும் உப்பும் நேரே, ஊரீர்
கொள்ளீரோ வெனச் சேரிதொறும் நுவலும்'

(அகம், 390: 8-9)

உப்பை நெல்லுக்கு மாற்றிய உப்பு வாணிகர் தமக்குக் கிடைத்த நெல்லைச் சிறு படகுகளில் ஏற்றிக்கொண்டு கழிகளில் ஓட்டிச்சென்றதை கடியலூர் உருத்திரன் கண்ணனார் கூறுகிறார்.

'குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி'

என்று (பட்டினப்பாலை 28-30) அவர் கூறுகிறார். உப்பை நெல்லுக்கு மாற்றியதை உலோச்சனார் கூறுகிறார். 'உமணர் தந்த உப்பு நொடை நெல்' (நற்றிணை, 254:6)

கடற்கரையோரத்திலே நெய்தல் நிலத்தில் வசித்த பரதவர் கடலிலே சென்று சுறு, இறால் முதலான மீன்களைப் பிடித்து வந்தார்கள். அவர்கள் கொண்டுவந்த மீனைப் பரதவ மகளிர் எளிதில் தானியத்துக்கு மாற்றினார்கள் என்று நன்றியனார் கூறுகிறார். 'இனிது பெறு பெருமீன் எளிதினிற் மாறி' (நற்றிணை, 239:3) பரதவ மகளிர் கடல்மீனை நெல் லுக்கு மாற்றியதை நக்கீரரும் கூறுகிறார்: 'பசுமீன் நொடுத்த வெண்ணெல் மாஅத், தயிர்மிதி மிதவை யார்த்துவம்' (அகம், 340: 14-15). 'உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு' என்று குடவாயில் கீரத்தனார் கூறுகிறார் (அகம். 60:4).

பரதவ மகளிர் கடல்மீனைத் திருவிழா நடக்கிற ஊர் களில் கொண்டுபோய் எளிதில் விற்றதைச் சீத்தலைச் சாத்தனார் கூறுகிறார்.

'திமிலோன் தந்தக டுங்கண் வயமீன்
தழையணி அல்குல் செல்வத் தங்கையர்
விழவயர் மறுகின் விலையெனப் பகரும்
கானலஞ் சிறுகுடி' (அகம், 320:2-5)

மீனை நெல்லுக்கு மாற்றினார்கள். பண்ட மாற்றினால் கிடைத்த நெல்லை அம்பியில் ஏற்றிக்கொண்டு கழிகளின் வழியே வந்ததைப் பரணர் கூறுகிறார்.

'மீன்நொடுத்து நெல் குவைஇ
மிசை அம்பியின் மனைமறுக்குந்து'

(புறம், 343: 1-2)

உழவர் மகளிர் தெருக்களில் பூ விற்றதைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுகிறார்.

'துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி
வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
புதுமலர் தெருவுதொறும் நுவலும்
நொதுமலாட்டி' (நற்றிணை, 118:8-11)

(துகிலிகை-ஓவியர் வண்ணங்களைத் தொட்டு எழுதும் கோல் (Brush); பாதிரி-பாதிரிப்பூ; அலரி-அலரிப்பூ)
பெண் ஒருத்தி மலர் விற்றதைப் பாண்டியன் மாறன் வழுதி தம்முடைய செய்யுளில் கூறுகிறார்.

‘துய்த்தலை இதழபைங் குருக்கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீரோ என
வண்டு சூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை யுழவர் தனிமடமகள்’

(நற்றிணை, 97: 6-9)

பூ விற்ற பெண்களும் பூவை நெல்லுக்குப் பண்ட மாற்று செய்தனர் என்பது சொல்லாமலே விளக்குகிறது.

வேடர்கள் ஒன்றுகூடிக் காட்டில் வேட்டையாடிக் கொன்ற யானையின் தந்தங்களை மதுபானக் கடையில் கொண்டுபோய்க் கொடுத்து மதுபானம் அருந்தினதை மாமூலனார் கூறுகிறார்.

‘வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்
அண்ணல் யானை வெண்கோடு கொண்டு
நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயரும்’

(அகம், 61:8-10)

(நறவு-மது; நெல்லின் நாண்மகிழ்-நெல்லரிசியினால் உண்டாக்கப்பட்ட மது)

வேடர் தேனையும் கிழங்கையும் கொண்டுவந்து மதுபானக் கடையில் மாற்றி அதற்கு மாறாக வறுத்த மீன் இறைச்சியையும் மதுவையும் வாங்கி உண்டதையும், உழவர் கரும்பையும் அவலையும் கொண்டுவந்து கொடுத்து அதற்கு மாறாக வறுத்த மான் இறைச்சியையும் மதுவையும் பெற்று உண்டு மகிழ்ந்ததையும் முடத்தாமக் கண்ணியார் கூறுகிறார்.

‘தேனெய்யொடு கிழங்கு மாறியோர்
மீனெய்யொடு நறவு மறுகவும்
தீங்கரும்பொடு அவல் வகுத்தோர்
மான்குறையோடு மது மறுகவும்.’

(பொருநர் ஆற்றுப்படை 214-217)

(தேன்நெய்-தேன்; மாறியோர்-மாற்றினவர்கள்; மீன் நெய்-வறுத்த மீன்; நறவு-மது, கள்; மான்குறை-மான் இறைச்சி)

கொற்கைக் குடாக்கடலின் கரையோரங்களில் வாழ்ந்த பரதவர், கொற்கைக் கடலில் மீன்பிடித்த போது அதனுடன் முத்துச் சிப்பிகளும் கிடைத்தன. அந்தச் சிப்பிகளை அவர்கள் கள்ளுக்கடையில் மாற்றிக் கள் குடித்ததைப் பேராலவாயர் கூறுகிறார்.

'பன்மீன் கொள்பவர் முகந்த சிப்பி
நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்
பேரிசைக் கொற்கை' (அகம், 296:8-10)

(இப்பி-முத்துச் சிப்பி)

குறிப்பு: பாண்டி நாட்டிலிருந்த பேர் போன கொற்கைக் குடாக்கடல் பிற்காலத்தில் மணல் தூர்ந்து மறைந்து போய் விட்டது.)

எயினர் மது அருந்துவதற்காக மது விற்கும் இடத்துக்கு வந்து எந்தப் பொருளும் இல்லாதபடியால், 'காட்டில் வேட்டையாடி யானைத் தந்தங்களைக் கொண்டு வந்து கொடுப்போம். அதற்கு ஈடாக இப்போது கள்ளைக் கடனாகக் கொடு' என்று கேட்டதை மருதன் இளநாகனார் கூறுகிறார்.

'அரிகிளர் பணைத்தோள் வயிறணி திதலை
அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பின்
மகிழ்நொடை பெறாஅர் ஆகி நனைகவுள்
கான யானை வெண்கோடு சுட்டி
மன்றுடு புதல்வன் புன்றலை நீவும்
அருமுனைப் பாக்கம்' (அகம், 245:8-13)

கொல்லி மலைமேல் வாழ்ந்த சிறுகுடி மக்கள், தம் சுற்றம் பசித்திருப்பதனால், தங்களிடமிருந்த யானைத் தந்தங்களைத் தானியத்துக்கு மாற்றிச் சோறு சமைத்து உண்டனர் என்று கபிலர் கூறுகிறார்.

'காந்தளஞ் சிலம்பில் சிறுகுடி பசித்தெனக்
கடுங்கண் வேழத்துக் கோடு கொடுத் துண்ணும்
வல்வில் ஓரி கொல்லிக் குடவரை'

(குறுந்தொகை 100: 3-5)

(சிலம்பு-மலை; வேழத்துக் கோடு-யானைத் தந்தம்; ஓரி-ஓரி என்னும் தலைவன்)

## காசு (நாணயம்)

இவற்றிலிருந்து சங்க காலத்தில் பண்ட மாற்று வாணிகம் நடந்ததை அறிகிறோம். ஆனால், பண்டமாற்று வாணிகம் நடந்த அந்தக் காலத்தில் காசு வழங்கப்படவில்லை என்று கருதுவது கூடாது. அதே காலத்தில், செம்பு, வெள்ளி, பொன் காசுகளும் வழங்கி வந்தன. அந்தக் காசுகள் விலையுயர்ந்த பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தப்பட்டன. பண்டமாற்று நடந்ததைச் சங்க நூல்களிலிருந்து தெரிந்து கொள்வது போலவே, காசுகள் வழங்கி வந்ததையும் சங்கச் செய்யுட்களிலிருந்து அறிகிறோம். அந்தக் காசுகள் நெல்லிக் காயின் வடிவம்போல உருண்டு சிறிது தட்டையாக இருந்தன என்று அறிகிறோம். இதனை மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் கூறுகிறார். பாலை நிலத்து வழியிலே இருந்த நெல்லி மரங்களிலிருந்து உதிர்ந்துள்ள நெல்லிக்காய்கள், பொற் காசுகள் உதிர்ந்து கிடப்பனபோலக் காணப்பட்டன என்று அவர் கூறுகிறார்.

> 'புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்
> கல்லதர் மருங்கில் கடுவளி உதிர்ப்பப்
> பொலஞ்செய் காசிற் பொற்பத்தாஅம் அத்தம்'
> (அகம், 363: 6-8)

(புகர் இல்-துளை இல்லாத, கெட்டியான; கடுவளி-பெருங் காற்று; பொலம் செய் காசு-பொன்னாற் செய்த காசு)

உகா மரத்தின் பழம்போல மஞ்சள் நிறமாக பொற் காசுகள் இருந்ததைக் காவன் முல்லைப் பூதனார் கூறுகிறார்.

> 'குயில்கண் அன்ன குரூஉக் காய்முற்றி
> மணிக்கா சன்ன மாநிற இருங்கனி
> உகாஅ மென்சினை உதிர்வன கழியும்
> வேனில் வெஞ்சுரம்' (அகம், 293: 6-9)

(குரூஉ-குரு = நிறம்; காசு அன்ன-காசு போன்ற; உகா-உகா மரம்; சினை-கிளை)

பொற்காசுகளை மாலையாகச் செய்து மகளிர் அரையைச் சுற்றி (மேகலை போல) அணிந்து கொண்டதைக் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் கூறுகிறார்.

'ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த
பொலஞ்செய் பல்காசு அணிந்த அல்குல்.'
(புறம், 353: 1-2)

காசுகளை மாலையாகச் செய்து அரையில் அணிந்திருந்த பெண் ஒருத்தியை மதுரைப் போத்தனார் கூறுகிறார்.

'அம்மா மேனி ஐதமை நுசுப்பில்
பல்காசு நிரைத்த கோடேந் தல்குல்
மெல்லியல் குறுமகள்.' (அகம், 75: 18-20)

(ஐது-அழகிய; நுசுப்பு-இடுப்பு, இடை; குறுமகள்-இளம் பெண்)

காசுமாலை அணிந்த இன்னொரு பெண்ணை ஓதலாந்தையார் கூறுகிறார்.

''பொலம் பசும் பாண்டிற் காசு நிறை அல்குல்
இலங்குவளை மென்றோள்.''
(ஐங்குறு, பாலை, செலவழுங்குவித்த பத்து 10)

களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைப் பாடிய காப்பியாற்றுக் காப்பியனார்க்கு 40 நூறாயிரம் பொன் (நான்கு இலட்சம்) அவன் பரிசாகக் கொடுத்தான் என்று கூறப்படுகிறது (பதிற்றுப் பத்து, நான்காம் பத்து, பதிகம்). இங்குப் பொன் என்பது பொற்காசு என்று தோன்றுகிறது. ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்மேல் 6 ஆம் பத்துப் பாடிய காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்க்கு அவ்வரசன், நகை செய்து அணிவதற்காக ஒன்பது காப்பொன்னையும் நூறாயிரம் காணமும் (காணம்-அக்காலத்தில் வழங்கின பொற்காசு) கொடுத்தான். செல்வக் கடுங்கோவாழியாதனைப் பாடிய கபிலருக்குப் பரிசாக அவ்வரசன் நூறாயிரம் காணம் வழங்கினான் என்று ஏழாம் பத்துப் பதிகம் கூறுகிறது. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அரிசில் கிழாருக்கு ஒன்பது நூறாயிரம் காணம் பரிசாகக் கொடுத்தான் என்பதைப் பதிற்றுப்பத்து 8 ஆம் பத்துப் பதிகத்தினால் அறி

கிறோம். இளஞ்சேரல் இரும்பொறை தன்னைப் பாடிய பெருங் குன்றூர் கிழார்க்கு முப்பத்திராயிரம் காணம் பரிசாகக் கொடுத்தான் என்பதை 9 ஆம் பத்துப் பாயிரத்தினல் அறிகிறோம்.

பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனார்க்குச் சோழன் கரிகாலன் நூறுபிரங்காணம் பரிசு வழங்கினான். இவ்வாறு, காணம் என்னும் பொற்காசு அக் காலத்தில் வழங்கி வந்ததை அறிகிறோம். செங்கம் என்னும் ஊரில் (தொண்டைநாடு), ஈயக் காசுகள் வழங்கி வந்ததை அங்கிருந்து கிடைத்த பழக் காசுகளிலிருந்து அறிகிறோம். அந்த ஈயக் காசுகளில் பிராமி எழுத்துக்கள் பொறிக்கப் பட்டிருப்பதனால் அவை கடைச்சங்க காலத்தில் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பு வழங்கி வந்தவை என்பது தெரிகிறது. அந்தக் காசில் உள்ள எழுத்துக்கள் தேய்ந்து உருத் தெரியாமல் மழுங்கிப் போனமையால் அவ்வெழுத்துக் களின் வாசகத்தை அறிய முடியவில்லை. இந்தச் சான்றுகள் எல்லாம் அக் காலத்தில் காசு வழங்கி வந்தது என்பதைச் சந்தேகம் இல்லாமல் தெரிவிக்கின்றன.

இந்தக் காசுகள் அல்லாமல், அக்காலத்தில் கடல் கடந்த கப்பல் வாணிகத்தின் மூலமாக உரோம (யவன) தேசத்து நாணயங்கள் தமிழ் நாட்டில் வழங்கி வந்தன. அக்காசுகள் சமீப காலத்தில் ஏராளமாகப் புதையல்களி லிருந்து கிடைத்துள்ளன. அந்தக் காசுகளைப் பற்றிப் பின்னர்க் கூறுவோம்.

# 3. போக்குவரத்து சாதனங்கள்

**வா**ணிகப் பொருள்கள் எல்லாம் ஒரே இடத்தில் உற்பத்தியாவதில்லை. வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பொருள்கள் உற்பத்தியானபடியால், அப்பொருள்களையெல்லாம் ஓரிடத்தில் கொண்டு வந்து சேர்ப்பதற்கு வாணிகர் கால்நடைகளையும் வண்டிகளையும் பயன்படுத்தினார்கள். ஆனால், இக்காலத்தில் உள்ள உந்து வண்டிகள் இரெயில் வண்டிகள், வான ஊர்திகள் போன்ற விரைவான போக்குவரத்துச் சாதனங்கள் இருப்பது போல அக்காலத்தில் இல்லை. ஆகவே அவர்கள் எருது, கழுதை, வண்டி, படகு, பாய்க் கப்பல்களைப் பயன்படுத்தினார்கள். எருமைக்கடாவை ஏர் உழுவதற்குப் பயன்படுத்தினார்கள். எருமைகளைப் பொதி சுமக்கவும் வண்டியிழுக்கவும் பயன்படுத்தவில்லை. பொதி சுமக்கவும் வண்டியிழுக்கவும் எருதுகள் பயன்பட்டன. எருதுக்கு அடுத்தபடியாகக் கழுதை பொதிசுமக்கப் பயன்பட்டது. கழுதைகள் வண்டியிழுக்கப் பயன்படவில்லை.

சிந்து, பாரசீகம், அரபி நாடுகளிலிருந்து குதிரைகள் அக்காலத்தில் கொண்டு வரப்பட்டன. அவை கடல் வழியாகக் கப்பல்களில் கொண்டு வரப்பட்டன. குதிரைகளை அரசர் போர் செய்யப் பயன்படுத்தினார்கள். நால்வகைப் படைகளில் குதிரைப் படையும் ஒன்று. தேர்ப் படையில் தேர்களை (போர் வண்டிகளை) இழுக்கவும் குதிரைகள் பயன்பட்டன. குதிரை வண்டிகளை அரசரும் செல்வரும் பயன்படுத்தினார்கள். ஆனால், அக்காலத்தில் தமிழர் குதிரைகளைப் பொதி சுமக்கவும் வாணிகப் பொருள்களை ஏற்றிக்கொண்டு போகிற வண்டிகளை இழுக்கவும் ஏர் உழவும் பயன்படுத்தவில்லை.

## அத்திரி

(கோவேறு கழுதைகள்) வெளி நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்டன. கோவேறு கழுதைகளுக்கு **அத்**திரி என்று பெயர் வழங்கப்பட்டது. நாகரிகமுள்ள செல்வ நம்பிகள் அக்காலத்தில் கோவேறு கழுதைகளை ஊர்தியாகப் பயன் படுத்தினார்கள். ஆனால், பொதி சுமக்கவும் சரக்கு வண்டிகளை இழுக்கவும் அவற்றைப் பயன்படுத்தவில்லை. ஊர்தியாக மட்டும் பயன்படுத்தினார்கள். அத்திரிக்கு இராச வாகனம் என்று பெயர் வழங்கப்படடது.

பாண்டி நாட்டுக் கொற்கைக் கடலுக்கு அருகில் பரதவர் ஊருக்கு ஒருவன் அத்திரி பூட்டின வண்டியில் சென்றான் என்று சேந்தன் கண்ணனார் கூறுகிறார்.

> ''கொடுநுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி
> வடிமணி நெடுந்தேர் பூண'' (அகம், 350: 6-7)

அத்திரியை ஒருவன் ஊர்ந்து சென்றதை நக்கீரர் கூறுகிறார்.

> 'கழிச்சுறா வெறிந்த புட்டாள் அத்திரி
> நெடுநீர் இருங்கழி பரிமெலிந் தசைஇ'
> (அகம், 120 : 10-11)

கடற்கழி வழியாக ஒருத்தன் அத்திரி ஊர்ந்து வந்ததை உலோச்சனார் கூறுகிறார்.

> ''கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி
> குளம்பினும் சேயிறா ஒடுங்கின
> கோதையும் எல்லாம் ஊதை வெண் மணலே''
> (நற்றிணை, 278: 7-9)

மதுரையில் வையையாற்றில் நடந்த நீராட்டு விழா விலே சிலர் அத்திரியூர்ந்து வந்தார்கள் என்று பரிபாடல் (10-ம் பாடல் 17-அடி) கூறுகிறது.

காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த செல்வக் குடி மக னாகிய கோவலன் கடலாடுவதற்குக் கடற்கரைக்குச் சென்ற போது அவன் அத்திரி ஊர்ந்து சென்றான் என்று சிலப்பதி காரம் கூறுகிறது (கடலாடு காதை, அடி 119). சிலப்பதி கார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார், 'அத்திரி—

கோவேறு கழுதை, அஃதாவது குதிரையில் ஒரு சாதி' என்று உரை எழுதியுள்ளார். பழைய அரும்பத உரையாசிரியர், ''இராச வாகனமாகிய அத்திரி'' என்று உரை எழுதியுள்ளார்; ஆகவே அத்திரி அக்காலத்தில் உயர்தர ஊர்தியாகக் கருதப்பட்டது என்று தெரிகிறது.

## குதிரை

குதிரை வெளிநாடுகளிலிருந்து வந்ததையும், அவை போர்க்களங்களில் பயன்படுத்தப்பட்டன என்பதையும் கூறினோம். அவை வண்டியிழுக்கவும் பயன்பட்டன. குதிரை வண்டிகள் தேர் என்று கூறப்பட்டன. குதிரை வண்டிகளைச் சங்க நூல்கள் கூறுகின்றன; சிறுபாணாற்றுப் படை குதிரை வண்டியைக் கூறுகிறது (சிறுபாண், 251-261). புலவர் உலோச்சனார், ஒருவர் குதிரை வண்டியில் வந்ததைக் கூறுகிறார் (அகம், 400: 9-16). அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார் தம்முடைய செய்யுள்களில் குதிரை வண்டிகளைக் கூறுகிறார் (அகம், 244: 12-13., 344: 7-11., 314: 8-10). மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் தம்முடைய செய்யுளில் குதிரை வண்டியைக் கூறுகிறார் (அகம், 334: 11-15). மருதன் இளநாகனாரும் நான்கு குதிரை பூட்டிய வண்டியைக் கூறுகிறார் (அகம், 104-3). மாங்குடி மருதனாரும் (குறும், 173: 1-3) புல்லாளங் கண்ணியாரும் (அகம், 154:11-13) மருங்கூர் கிழார் பெருங் கண்ணனாரும் (அகம், 80: 8-13) அரிசில் கிழாரும்(புறம், 146:11) இடைக்காடனாரும் (அகம், 194: 17-91) குதிரை வண்டிகளைத் தம்முடைய செய்யுட்களில் குறிப்பிடுகிறார்கள். ஆனால், அக் குதிரை வண்டிகள் வாணிகப் பொருள்களை ஏற்றிச் செல்லும் சரக்கு வண்டிகளாகப் பயன்படுத்தப்படவில்லை.

## மாடும் மாட்டு வண்டியும்

வாணிகப் பொருள்களைக் கொண்டு போவதற்கு எருதுகள் பயன்பட்டன. மாட்டு வண்டிகளில் வாணிகப் பண்டங்களை ஏற்றிக் கொண்டு போனார்கள். வாணிகர் பலர் ஒன்றாகச் சேர்ந்து பொருள்களை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு போனார்

கள். இதற்கு வாணிகச் சாத்து என்பது பெயர். அவர்கள் தங்களோடு வில் வீரர்களையும் அழைத்துக் கொண்டு சென்றார்கள். ஏனென்றால் காட்டு வழிகளில் வழிபறிக் கொள்ளைக்காரர் வந்து பொருள்களைக் கொள்ளையடிப்பதும் உண்டு. கொள்ளைக்காரர்களை அடித்து ஓட்டுவதற்காக வாணிகச் சாத்தினர் வீரர்களையும் தம்முடைய சாத்துடன் அழைத்துச் சென்றார்கள்.

## கழுதை

வாணிகர், வாணிகப் பொருள்களை ஊர் ஊராகக் கொண்டு செல்வதற்குக் கழுதைகளை பயன்படுத்தினார்கள். பாறைகளும் குன்றுகளும் உள்ள நாடுகளுக்குச்செல்ல கழுதைகள் முக்கியமாகப் பயன்பட்டன. கழுதைகளின் முதுகுகளின் மேல் சரக்குப் பொதிகளை ஏற்றிக் கொண்டு வணிகச்சாத்து (வணிகக் கூட்டம்) ஒன்று சேர்ந்து போயிற்று. எல்லைப்புறங்களில் வழிபறிக் கொள்ளைக்காரர் வழிபறித்துக் கொள்ளையிடுவதும் உண்டு. அவர்களை அடித்து ஓட்டுதற்கு வாணிகச் சாத்தர் வில் வீரர்களையும், வாள் வீரர்களையும் துணையாக அழைத்துச் சென்றார்கள். வாணிகப் பயணத்தைத் தொடங்குவதற்கு முன்னர் அவர்கள் நாள் நிமித்தம் பார்த்து நல்ல வேளையில் புறப்பட்டனர். வழிபறிக் கொள்ளைக்காரர் இவ் வீரர்களையும் கொன்று பொருள்களைக் கொள்ளையடிப்பதும் உண்டு.

'விளரி பரந்த கள்நெடு மருங்கின்
விளருன் தின்ற வீங்குசிலை மறவர்
மைபடு திண்டோள் மலிர ஆட்டிப்
பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த
படுபுலாக் கமழும் ஞாட்பு.'

*(அகம், 89: 9-14. மாங்குடி மருதனார்)*

*(பொறைமலி-பாரம் நிறைந்த; நெடுநிரை-நீண்ட வரிசை)*

'நெடுஞ்செவிக் கழுதை குறுங்கால் ஏற்றை
புறநிறைப் பண்டத்துப் பொறை'

*(அகம், 343: 12-13. மருதனிளநாகனார்)*

*(ஏற்றை-ஆண் கழுதை)*

பலாப்பழம் அளவாகச் சிறுசிறு பொதிகளாகக் கட்டப் பட்ட மிளகு மூட்டைகளைக் கழுதைகளின் மேல் ஏற்றிக் கொண்டு வணிகச்சாத்தர் ஊர்ப் பயணஞ் சென்றனர். இடைவழியில் சுங்கச் சாவடிகளில் சுங்கஞ் செலுத்தினார்கள். சுங்கச் சாவடிகளில் வில் வீரர்கள் காவல் இருந்தனர்.

'தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியல்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்து
அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட் டியவு.'

(பெரும்பாண், 77-82.
கடியலூர் உருத்திரக்கண்ணனார்.)

(மிரியல்-மிளகு)

கிழக்குப் பக்கத்து நெய்தல் நிலத்தைச் சார்ந்த கடற் கரைப் பக்கங்களில் உண்டான உப்பை, மூட்டைகளாகக் கட்டிக் கழுதைகளின் மேல் ஏற்றிக் கொண்டு மேற்கேயுள்ள ஊர்களுக்கு வணிகர் சென்றனர்.

'அணங்குடை முந்நீர் பரந்த செருவின்
உணங்குதிறம் பெயர்த்த வெண்கல் அமிழ்தம்
குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்செ யாடவர்
நிரைபரப் பொறைய நரைப்புறக் கழுதைக்
குறைக்குளம் புதைத்த கற்பிறழ் இயவு.'

(அகம், 207: 1-6. சேத்தம்பூதனார்)

(வெண்கல் அமிழ்தம்-உப்பு; உய்ம்மார்-கொண்டுபோக; புள்ஓர்த்து-நிமித்தம் பார்த்து)

வணிகச் சாத்தரை வென்று கொள்ளைக்காரர் வழி பறித்ததைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார்.

சாத்தெறிந்து
அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்
கொடுவில் ஆடவர்.'

(அகம், 167: 7-9)

பாண்டி நாட்டவராகிய மருதன் இளநாகனும் இதைக் கூறுகிறார்.

'மழைபெயல் மறந்த கழைத்திரங் கியவில்
செல்சாத் தெறியும் பண்பில் வாழ்க்கை
வல்வில் இளையர்'

(அகம், 245: 5-7)

(கழை-மூங்கில்; சாத்து-வணிகர் கூட்டம்; இளையர்-வீரர்)

சங்ககாலத்து வாணிபம் தரைவழியாகவும் கடல்வழியாகவும் நடந்தது. தரை வழியாக வாணிகம் செய்த பெரு வாணிகருக்கு மாசாத்துவன் என்பது பெயர். அக்காலத்தில் சாலைகள் அதிகமாக இல்லை. சாலைகளிலும் எல்லைப்புறங்களில் கொள்ளைக்காரர் இருந்தார்கள். கடல் வழியாக நடந்த வாணிகம் தரை வாணிகத்தைவிடச் சற்று அதிகமாகவும் நன்றாகவும் நடந்தது. கடல் வாணிகத்தை நடத்தின பெரிய வாணிகருக்கு மாநாய்கன் (மாநாவிகன். மா + நாவிகன்) என்பது அதியர். கடற் பிரயாணத்திலும் காற்று, புயல்களினால் கப்பல்களுக்குச் சேதம் உண்டாயின, கடற் கொள்ளைக்காரர் அதிகம் இல்லை. கடல் வாணிகம் இரண்டு விதமாக நடந்தது. கரைவழி ஓரமாகவே கப்பல்களை ஓட்டி நடத்தின வாணிகம் ஒன்று. கரைவழி ஓரமாகச் செல்லாமல் நடுக்கடலில் கப்பல்களைச் செலுத்திக் கடல் கடந்த நாடுகளுக்குப் போய் செய்த வாணிகம் இன்னொன்று.

தரை வழி வாணிகமாக இருந்தாலும், கடல்வழி வாணிகமாக இருந்தாலும், இக்காலத்து வசதிகளைப் போல, அக்காலத்தில் வசதிகள் இல்லை. ஆனாலும் அந்தக் கடினமான சூழ்நிலைகளிலும் தரை வாணிகமும், கடல் வாணிகமும் நடந்தன. தமிழ்நாட்டு வாணிகர் அயல் நாடுகளுக்குச் சென்று வாணிகஞ் செய்தார்கள். மேற்கே இத்தாலி, கிரேக்கதேசம் (யவன நாடு) முதல் கிழக்கே சாவக நாடு (கிழக்கத்தியத் தீவுகள்) பர்மா, மலாயா வரையிலும் தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே கங்கைக்கரைப் பிரதேசம் வரையிலும் அக்காலத்துத் தமிழர் வாணிகம் நடந்தது.

# 4. தமிழ் நாட்டு வாணிகர்

தமிழ் நாட்டின் மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந் திருந்தபடியால் தமிழர் இயற்கையாகவே கடற்பிரயாணஞ் செய்வதிலும் கப்பல் வாணிகம் செய்வதிலும் தொன்று தொட்டு ஈடுபட்டிருந்தார்கள். மேலும் கடற்கரையாகிய நெய்தல் நிலங்களில் வாழ்ந்தவர்கள் நாள்தோறும் கடலில் சென்று மீன் பிடித்து வந்து வாழ்க்கையை நடத்தினார்கள். ஆகையால் கடலில் போய் வருவது தமிழர்களுக்குப் பழங் காலம் முதல் இயற்கையான தொழிலாக இருந்தது. கடலில் நெடுந்தூரம் கப்பலில் போகவும் வரவும் பழங்காலத்திலேயே பழகினார்கள். கரிகால் சோழனுடைய முன்னோனை ஒரு சோழன் கடற்காற்றின் உதவியினால் கடலில் நாவாய் ஓட்டினான்.

> 'நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி
> வளிதொழில் ஆண்ட உரவோன் மருக!'

என்று புறநானூற்றுச் செய்யுள் (66) கூறுகிறது. பழய காலத்துப் பாண்டியன் ஒருவன் தன் அடி அலம்பக் கடலில் நின்றான் என்றும், கடலில் தன் வேலை எறிந்து அதை அடக் கினான் என்றும் கூறப்படுகிறான். இதன் கருத்து என்ன வென்றால், அவன் கடலை அடக்கிக் கடலில் நாவாய் செலுத்திக் கடற் பிரயாணத்தை எளிதாக்கினான் என்பது. இவற்றிலிருந்து கடலில் பிரயாணம் செய்வதைத் தமிழர் ஆதி காலத்திலிருந்து நடத்தினார்கள் என்பது தெரிகின்றது. கடலில் கப்பலோட்டுவது அக்காலத் தமிழருக்குக் கைவந்த செயலாயிற்று. அவர்கள் கடல் கடந்து போய் வாணிகம் செய்தார்கள்.

கடலில் சென்று வாணிகஞ் செய்ததுபோலவே தரை வழியாகவும் பல நாடுகளுக்குப் போய் வாணிகம் செய்தார்கள். தமிழ் நாட்டில் மட்டும் அல்லாமல் தரை வழியாக வட இந்திய நகரங்களுக்கும் போய் வாணிகஞ் செய்தார்கள். பெரிய வாணிகம் செய்தவர்களுக்குப் பெருங்குடி வாணிகர் என்பது பெயர். அயல் நாடுகளுக்கு வாணிகஞ் செய்யச் சென்றவர் ஒன்று சேர்ந்து கூட்டமாகச் சென்றார்கள். வணிகக் கூட்டத்துக்கு வணிகச்சாத்து என்பது பெயர்.

## தரை வாணிகம்

அயல் நாடுகளுக்குத் தரை வழியாகச் சென்று வாணிகஞ் செய்த சாத்தர் கழுதைகள், எருதுகள், வண்டிகள் ஆகியவற்றில் வாணிகப் பொருள்களை ஏற்றிக்கொண்டு கூட்டமாகச் சென்றார்கள். அவர்கள் போகிற வழிகளில், மனித வாசம் இல்லாத பாலைநிலங்களில் வழிபறிக் கொள்ளைக் காரர் வந்து கொள்ளையடித்தார்கள். அவர்களை அடித்து ஓட்டுவதற்காக வாணிகச் சாத்தர் தங்களோடு வில் வீரர்களையும் அழைத்துக் கொண்டு போனார்கள். தமிழ் நாட்டில் மட்டும் அன்று; இந்தியா தேசம் முழுவதுமே அக்காலத்தில் வழிப்பறிக் கொள்ளை செய்த வேடர்கள் இருந்தார்கள். ஆகையினாலே வாணிகச் சாத்தர் அயல்நாடுகளுக்கு வாணிகஞ் செய்யப் போகும்போது கூட்டமாகச் சேர்ந்து போனதுமல்லாமல் தங்களோடு படை வீரர்களையும் அழைத்துக் கொண்டு போனார்கள். வாணிகச் சாத்தை வேடர்கள் கொள்ளையடித்ததைச் சங்க நூல்கள் கூறுகின்றன. மருதன் இளநாகனார், பாலை நிலத்தின் வழியே சென்ற வாணிகச் சாத்தைக் கொள்ளையிட்ட வேடரைக் கூறுகிறார்.

> 'மழைபெயல் மறந்த கழைதிரங்கு இயவில்
> செல்சாத்து எறியும் பண்பில் வாழ்க்கை
> வல்வில் இளையர்.'
>
> (அகம், 245: 5-7)

கடியலூர் உருத்திரங் கண்ணனாரும், வழிபறிக் கொள்ளையிட்ட வில் வேடரைக் கூறுகிறார்.

'சாத்தெறிந்து
அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்
கொடுவில் ஆடவர்.'

(அகம், 167: 7-9)

பலாப்பழம் அளவாகக் கட்டின மிரியல் (மிளகு) மூட்டைகளைக் கழுதைகளின் முதுகின்மேல் ஏற்றிக்கொண்டு வாணிகச் சாத்தர் தங்களுடைய வில் வீரர்களோடு சென்றனர். ஆங்காங்கே வழியில் இருந்த சுங்கச் சாவடிகளில் அரசனுடைய அலுவலர்கள் அவர்களிடமிருந்து சுங்கம் வாங்கினார்கள். இதைக் கடியலூர் உருத்திரக்கண்ணனார் கூறுகிறார்.

'சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக்
கருவி லோச்சிய கண்ணகன் எறுழ்த்தோள்
கடம்பமர் நெடுவேள் அன்ன மீளி
உடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்
தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழம் கடுப்ப மிரியல்
புணர்ப் பொறைதாங்கிய வடுவாழ் நோன் [புறத்து
அணர்ச் செவிக் கழுதைச் சாத்தோடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட் டியவு'

(பெரும்பாண், 73-82)

வாணிகச்சாத்துடன் பாலைநிலத்து மறவர் செய்த போரை மாங்குடி மருதனார் கூறுகிறார்.

'களரி பரந்த கல்நெடு மருங்கில்
விளரூன் தின்ற வீங்குசிலை மறவர்
மைபடு திண்டோள் மலிர ஆட்டிப்
பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவான் வயவர் அருந்தலை துமித்த
படுபுலாக் கமழும் ஞாட்பு'

(அகம், 89; 9-14)

வேறு நாடுகளுடன் வாணிகம் செய்த வாணிகச் சாத்துக்கு அக்காலத்தில் அப்படிப்பட்ட துன்பங்கள் இருந்தன. அவர்களுடைய பொருளுக்கும் உயிருக்கும் ஆபத்து இருந்தது. அந்த ஆபத்துக்களையும் கருதாமல் அவர்கள் வாணிகம் செய்தார்கள். சாத்துக்களின் தலைவனை வாணிகனுக்கு மாசாத்துவான் என்று பெயர் வழங்கிற்று. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த மாசாத்துவர்களில் ஒருவன் கோவலனுடைய தந்தையாகிய மாசாத்துவானும் ஒருவன். அவன் சோழ அரசனுக்கு அடுத்த நிலையில் பெருங்குடி மக்களில் முதல் குடிமகனாக இருந்தான். அவனைச் சிலப்பதிகாரம் இவ்வாறு கூறுகிறது.

> 'பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த
> ஒருதனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்
> வருநிதி பிறர்க் காற்றும் மாசாத்துவா னென்பான்
> இருநிதிக் கிழவன்மகன் ஈரெட்டாண் டகவையான்.'
>
> (சிலம்பு, மங்கல வாழ்த்து)

## கடல் வாணிகம்

கடல் வாணிகத்தையும் அக்காலத் தமிழர் வளர்த்தார்கள். மரக்கலங்களாகிய நாவாய்களில் உள்நாட்டுச் சரக்குகளை ஏற்றிக்கொண்டு போய் அயல் நாடுகளில் விற்று, அந்நாடுகளிலிருந்து வேறு பொருள்களை ஏற்றிக்கொண்டு வந்தார்கள். தங்கள் நாவாய்களை அவர்கள் கடலில் கரையோரமாகச் செலுத்திக் கொண்டுபோய் கரையோரமாக இருந்த ஊர்களில் தங்கிப் பொருள்களை இறக்குமதி ஏற்றுமதி செய்தார்கள். ஆனால், தமிழ்நாட்டுக்குக் கிழக்கே வெகு தூரத்தில், ஆயிரம் மைலுக்கப்பால் இருந்த சாவகம் (கிழக்கிந்தியத் தீவுகள்.) காழகம் (பர்மா) கடாரம் முதலான கடல் கடந்த நாடுகளுக்குச் சென்றபோது நடுக்கடலில் நாவாய் ஓட்டிச் சென்றார்கள். தொல்காப்பியர் காலத்துக்கு கி.மு. 8 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே தமிழர் கடல்வாணிகம் செய்து கொண்டிருந்தார்கள். அக்காலத்துத் தமிழர், கடலில் பிரயாணஞ் செய்யும்போது தங்களுடன் மகளிரை

அழைத்துக் கொண்டு போகக்கூடாது என்ற கொள்கையைக் கொண்டிருந்தார்கள். தொல்காப்பியர் தம்முடைய இலக்கணத்திலும் அவ்வழக்கத்தைக் கூறியுள்ளார்.

'முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை.'

என்று அவர் பொருளதிகாரம், அகத்திணை இயலில் கூறியுள்ளார். (முந்நீர்-கடல்; வழக்கம்-வழங்குவது, போவது; மகடூ-மகளிர்.) மகளிர் கடலில் பிரயாணம் செய்யக் கூடாது என்னும் கொள்கை நெடுங்காலமாகத் தமிழரிடத்தில் இருந்தது. அண்மைக் காலம்வரையில் இருந்த அந்த வழக்கம் சமீப காலத்தில்தான் மாறிப் போயிற்று. ஆகவே சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் தமிழ் மகளிர் கடலில் கப்பற்பிரயாணம் செய்யவில்லை.

பழங்காலத் தமிழர் வருணன் என்னும் கடல் தெய்வத்தை வழிபட்டார்கள். இதையும் தொல்காப்பியரே கூறுகிறார்.

'வருணன் மேய பெருமணல் உலகம்'

நெய்தல் நிலம் எனச் சொல்லப்படும் என்று அவர் கூறியுள்ளார் (பொருளாதிகாரம் அகத்திணையில்). பழங் காலத்து பாண்டியன் ஒருவன் முந்நீர்த் திருவிழாவைக் கடல் தெய்வத்துக்குச் செய்தான். பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியனுக்கு முன்பு இருந்த அந்தப் பாண்டியன் நெடியோன் என்று கூறப்படுகிறான். முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்திய நெட்டிமையார் அவனை இவ்வாறு வாழ்த்துகிறார்.

'எங்கோ வாழிய குடுமி! தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.'

(புறம், 9: 8-11)

பழமையாக நடந்து வந்த வருண வழிபாடு கி.மு. முதல் நூற்றாண்டிலேயே மறைந்துவிட்டது. கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோக சக்கரவர்த்தி காலத்தில் பௌத்த மதம் தமிழகத்துக்கு வந்தது. அந்த மதம் கி.மு. இரண்

டாம், முதலாம் நூற்றுண்டுகளில் தமிழ்நாட்டில் பரவி செல்வாக்குப் பெற்றது. அப்போது அம்மதத்தின் சிறு தெய்வமாகிய மணிமேகலா தெய்வம் வருணனுக்குப் பதிலாக வணங்கப்பட்டது. கடல் தெய்வமாகிய மணிமேகலா தெய்வம் கடலில் பிரயாணம் செய்கிற நல்லவருக்குக் கடலில் துன்பம் நேரிட்டால் அது அவர்களுக்கு உதவிசெய்து காப்பாற்றுகிறது என்னும் நம்பிக்கை பௌத்த மதத்தில் இருந்தது. பௌத்தம் தமிழகத்தில் பரவியபோது, தமிழ்நாட்டு வணிகர் மணிமேகலா தெய்வத்தையும் கடல் தெய்வமாக ஏற்றுக்கொண்டு வழிபட்டார்கள். இதைச் சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் காவியங்களிலிருந்து அறிகிறோம். நாவாயில் கடல் வாணிகம் செய்தவர் நாவிகர் என்று பெயர் பெற்றனர். கடல் வாணிகம் செய்த பெரிய நாவிகர் மாநாவிகர் என்று பெயர் பெற்றனர். மாநாவிகர் என்னும் பெயர் மருவி மாநாய்கர் என்று வழங்கப்பட்டது. (நாவாய்-மரக்கலம்.) நாவாய்களில் வாணிகம் செய்தவன் நாவிகன்-நாவிகன் என்பது நாய்கன் என்று மருவிற்று. சிலப்பதிகாரக் காவியத் தலைவியாகிய கண்ணகி காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த ஒரு மாநாய்கனுடைய மகள். கி.பி. இரண்டாம் நூற்றுண்டிலிருந்த அந்த மாநாய்கனையும் அவள் மகளான கண்ணகியையும் சிலப்பதிகாரம் இவ்வாறு கூறுகிறது.

> 'நாகநீள் நகரொடு நாகநா டதனொடு
> போகநீள் புகழ்மன்னும் புகார்நகர் அதுதன்னில்
> மாகவான் நிகர்வண்கை **மாநாய்கன்** குலக்கொம்பர்
> ஈகைவான் கொடியன்னுள் ஈராறுண் டகவையாள்.
>
> (சிலம்பு, மங்கல வாழ்த்து)

## கரையோர வாணிகம்

கொற்கை, தொண்டி, பூம்புகார், சோபட்டினம் முதலான தமிழ் நாட்டுத் துறைமுகப் பட்டினங்களிலிருந்து நாவாய்களில் புறப்பட்டுச் சென்ற தமிழ வாணிகர் கிழக்குக் கடல் ஓரமாகவே நாவாய்களைச் செலுத்தி நெல்லூர், கலிங்கப் பட்டினம், தம்ரலிப்தி (வங்காள தேசத் துறைமுகப் பட்டி

னம்) முதலான பட்டினங்களுக்குச் சென்றனர். பிறகு கங்கை யாறு கடலில் கலக்கிற புகர் முகத்தின் ஊடே கங்கை யாற்றில் நுழைந்து கங்கைக் கரையில் இருந்த பாடலிபுரம், காசி (வாரணாசி) முதலான ஊர்களில் வாணிகஞ் செய்து திரும்பினார்கள். 'கங்கை வங்கம் போகுவர் கொல்லோ, என்று நற்றிணை (189:5) கூறுகிறது. கங்கைக் கரையில் பாடலிபுரத்தில் தமிழர் வாணிகஞ் செய்த போது, கி.மு. 4 ஆம் நூற்றாண்டில் மகத நாட்டையரசாண்ட நந்த அரசர், தங்களுடைய தலைநகரமான பாடலிபுரத்தில் கங்கை யாற்றின் கீழே பெருஞ் செல்வத்தைப் புதைத்து வைத்திருந் ததைப் பற்றி அறிந்தனர். தமிழக வாணிகரின் மூலமாக நந்த அரசரின் செல்வப் புதையலைத் தமிழ் நாட்டவர் அக் காலத்தில் அறிந்திருந்தார்கள். மாமூலனார் என்னும் சங்கப் புலவர் தம்முடைய செய்யுளில் நந்தருடைய நிதியைக் கூறு கிறார்.

'பல்புகழ் நிறைந்த வெல்போர் **நந்தர்**
சீர்மிகு **பாடலிக்** குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ'

(அகம், 265: 4-6)

நந்த அரசரின் செல்வப் புதையலைப் பற்றிய இந்தச் செய் தியை இந்தச் செய்யுளில் இருந்து அறிகிறோம். வடநாட்டுப் பழைய நூல்களில் இந்தச் செய்தி கூறப்படவில்லை.

தமிழ வாணிகர் கலிங்க நாட்டிலே போய் வாணிகஞ் செய்தார்கள். அந்த வாணிகச் சாத்து கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.மு. 150 வரையில் நூற்றைம்பது ஆண்டுகள் அங்குத் தங்கி வாணிகம் செய்தது. அவர்களு டைய வாணிகம் நாளுக்கு நாள் பெருகிச் செல்வாக்கும் பலமும் அடைந்தது. அக்காலத்தில் கலிங்க தேசத்தை யரசாண்ட காரவேலன் என்னும் அரசன் தமிழ வாணிகரால் தன்னுடைய ஆட்சிக்கே ஆபத்து உண்டாகும் என்று அஞ்சி அந்த வாணிகச் சாத்தை அழித்து விட்டான். அந்தச் செய்தியை அவ்வரசன் எழுதியுள்ள ஹத்தி கும்பா குகைக் கல்வெட்டெழுத்துச் சாசனத்திலிருந்து அறிகிறோம். கலிங்க

தேசத்தில் வாணிகஞ் செய்த தமிழர் கலிங்க நாட்டுப் பொருள்களைத் தமிழகத்துக்கும் தமிழகத்துப் பொருள்களைக் கலிங்க நாட்டுக்கும் கொண்டு போய் விற்றார்கள். கலிங்க நாட்டிலிருந்து தமிழ் நாட்டுக்குக் கொண்டுவரப்பட்ட முக்கியமான பொருள் பருத்தித் துணி. பெருவாரியாகக் கலிங்கத் துணி தமிழ் நாட்டில் இறக்குமதியாயிற்று. கலிங்கத்திலிருந்து வந்தபடியால் அத்துணி கலிங்கத் துணி என்று சிறப்பாகப் பெயர் பெற்றது. பிறகு காலப்போக்கில் கலிங்கம் என்னும் பெயர் துணிகளுக்குப் பொதுப் பெயராக வழங்கப் பட்டது. சங்க நூல்களில் துணிக்குப் பெயராகக் கலிங்கம் என்னும் சொல் வழங்கப்பட்டிருக்கிறது. கலிங்க நாட்டிலிருந்து அக்காலத்தில் தமிழ் நாட்டுக்கு வந்த இன்னொரு பொருள் சந்தனக் கல். 'வடவர் தந்த வான் கேழ் வட்டம்.'

ஆந்திர நாட்டிலே பேர் போன அமராவதி நகரத்திலே (தான்ய கடகம்) சங்க காலத்திலே தமிழ் வாணிகர் சென்று வாணிகஞ் செய்தனர். அங்கிருந்த அமராவதி பௌத்தத் தூபி கி.மு. 200 இல் தொடங்கி கி.பி. 200 வரையில் கட்டப்பட்டது. அந்தக் கட்டடத்தைக் கட்டுவதற்குப் பலர் பல வகையில் உதவி செய்தார்கள். அப்போது அங்கு வாணிகஞ் செய்து கொண்டிருந்த தமிழ் வாணிகரும் அக் கட்டடம் கட்டுவதற்கு உதவி செய்தனர். தமிள (தமிழ) கண்ணன் என்னும் வாணிகனும் அவனுடைய தம்பியாகிய இளங்கண்ணனும் அவர்களுடைய தங்கையாகிய நாகையும் அமராவதி தூபி கட்டுவதற்குக் கைங்கரியம் செய்துள்ளனர். இந்தச் செய்தி அங்கிருந்து கிடைத்த ஒரு கல் சாசனத்தினால் தெரிகிறது. $3\frac{1}{2}$ அடி உயரமும் 2 அடி 8 அங்குல அகலமும் உள்ள ஒரு கல்லில் பிராமி எழுத்தினால் எழுதப்பட்ட ஒரு சாசனம் இதைக் கூறுகிறது. இப்போது இந்தக் கல் இங்கிலாந்து தேசத்துக்குக் கொண்டு போகப்பட்டு அங்கு இலண்டன் மாநகரத்துக் காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கிறது. இதனாலும் கலிங்க நாட்டில் தமிழர் வாணிகஞ் செய்த செய்தி அறியப்படுகிறது.*

* No. 80 P. 20. **Notes on the Amaravati Stupa.** by J. Bargess. (18/2 Archaeology Survey of South India)

தமிழ வாணிகச் சாத்து (வாணிகக் குழு) கி.மு. இரண்டாம் நூற்றுண்டில் இலங்கைக்குச் சென்று அக்காலத்துத் தலைநகரமாக இருந்த அநுராதபுரத்தில் வாணிகஞ் செய்ததை அங்குள்ள ஒரு பிராமி எழுத்துக் கல்வெட்டுச் சாசனம் கூறுகிறது. வாணிகச் சாத்தினுடைய மாளிகை இற்றைக்கு 22,00 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டிருந்தது. பிற்காலத்தில் மறைந்து போன அந்த மாளிகை பல நூற்றுண்டுகளாக மண் மூடி மறைந்து கிடந்தது. அண்மைக் காலத்தில், மழை நீரினல் அந்த மண்மேடு கரைந்து அங்குக் கல்லில் எழுதப்பட்ட பிராமி எழுத்துக்கள் வெளிப்பட்டன. கற்பாறையோடு சார்ந்திருந்த அந்த மாளிகையில் அக்காலத்தில் தமிழ நாவாய்த் தலைவன் அமர்ந்திருந்த இடத்திலும் மற்ற வாணிகத் தலைவர்கள் அமர்ந்திருந்த இடங்களிலும், அவர்களுடைய பெயர்கள் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து கி.மு. இரண்டாம் நூற்றுண்டிலே தமிழ வாணிகர் அநுராதபுரத்தில் பெரிய வாணிக நிலையம் அமைத்திருந்தது தெரிகிறது.*

கி.மு. இரண்டு, ஒன்றும் நூற்றுண்டுகளில் இலங்கையில் வேறு சில தமிழ வாணிகர் இருந்ததை அக்காலத்துப் பிராமிய எழுத்துச் சாசனங்கள் கூறுகின்றன.**

தமிழ் நாட்டு வாணிகர் இலங்கைக்குச் சென்று வாணிகஞ் செய்ததைச் சங்க இலக்கியங்கள் கூறவில்லை. தமிழ வாணிகர் இருவர் இலங்கையைக் கி.மு. இரண்டாம் நூற்றுண்டில் அரசாண்டதை இலங்கை நூல்கள் கூறுகின்றன. சேனன், குட்டகன் என்னும் இரண்டு தமிழ வணிகர் அக்காலத்தில் இலங்கையை அரசாண்ட சூரதிஸ்ஸன் என்னும்

---

* **Tamil House-holder's Terrace Anuradhapura** by S. Paranavatana. P. P. 13–14, Annual Bibliography of India Archaeology. Vol. xiii. 1938. Jour al of Ceylon branch of the Royal Asiatic Society Colomba Vol. xxxv 1942. P. P. 54–56. Inscriptions of Ceylon vol. I (1970) P. 7. No 94 (a).

** P. 28 Nos. (19). 357 (20). P. 37. No. 430 **Inscriptions of Ceylon** vol. I (1970) Edited S. Paranavatana.

சிங்கள அரசனை வென்று புத்த சகாப்தம் 306 முதல் 328 வரையில் (கி.மு. 177 முதல் 155 வரையில்) இருபத்திரண்டு ஆண்டு நீதியாக அரசாண்டார்கள் என்று மகாவம்சமும் (XXI:10–11) தீபவம்சமும் (XVIII:47f) கூறுகின்றன. இவ்விருவரும் அஸ்ஸநாவிகர், (அஸ்ஸம்-அஸ்வம் = குதிரை) குதிரை வாணிகர் என்று கூறப்பட்டுள்ளனர்.



## நடுக்கடல் வாணிகம்

தமிழகத்துக்குக் கிழக்கே வெகு தூரத்தில் வங்காளக் குடாக் கடலுக்கு அப்பால் பசிபிக் மகா சமுத்திரத்தில் பெருந்தீவுகளின் கூட்டம் இருக்கிறது. அந்தத் தீவுகளுக்கு இக்காலத்தில் கிழக்கிந்தியத் தீவுகள் என்றும் இந்தோனேஷியத் தீவுகள் என்றும் பெயர். சங்க காலத்திலே இந்தத் தீவுகளைத் தமிழர், சாவகம் என்றும் சாவக நாடு என்றும் கூறினார்கள். சாவக நாட்டோடு அக்காலத் தமிழர் கடல் வழியாக வாணிகஞ் செய்தனர். தமிழ் நாட்டிலிருந்து ஆயிரம் மைலுக்கப்பால் உள்ள சாவகத் தீவுகளுக்கு வங்காளக் குடாக் கடலைக் கடந்து நடுக்கடலிலே கப்பலோட்டிச் சென்றார்கள்.

சாவக நாடு (கிழக்கிந்தியத் தீவுகள்) என்பது பெரிதும் சிறிதுமான ஆயிரக்கணக்கான தீவுகளின் கூட்டமாகும். இத்தீவுகளில் முக்கியமானது சாவா தீவு (ஜாவா). இதை வட நாட்டார் யவதீபம் என்று கூறினார்கள். சீன நாட்டார் இதை யெ தீயவோ (Ye Tiao) என்று பெயர் கூறினார்கள். இது செழிப்பும் நிலவளமும் நீர்வளமும் உள்ளது. சாவா தீவுக்கு அடுத்துசுமாத்ரா, கலிமந்தன் (போர்னியோ), ஸுலவெஸி (செலிபீஸ், மின்டனயோ, ஹல்மஹீரா முதலான தீவுகளும் கணக்கற்ற சிறு சிறு தீவுகளும் சேர்ந்ததே தமிழர் கூறிய சாவக நாடு. சாவக நாட்டுக்கு அப்பால் வடக்கே சீன தேசம் இருந்தது. சீன தேசத்துக்கும் இந்தியாவுக்கும் இடை நடுவிலே கடலில் இருந்த சாவக நாடு (கிழக்கிந்தியத் தீவுகள்) அக்காலத்தில் உலகப் புகழ் பெற்ற வாணிக மத்திய இடமாக இருந்தது. அக்காலத்தில் உலகத்திலே வேறு எங்கும் கிடைக்காத வாசனைச் சரக்குகள் அங்கே

தான் கிடைத்தன. ஆகவே சாவகத்தின் வாசனைப் பொருள்களை வாங்குவதற்குச் சீனர் தங்கள் தேசத்துப் பொருள்களை எடுத்துக் கொண்டு கப்பல்களில் அங்கே வந்தார்கள். அக்காலத்தில் சீன தேசத்தின் முக்கியமான பொருள் பட்டு. பட்டுத்துணி அக்காலத்தில் சீன நாட்டில் மட்டும் உண்டாயிற்று. சீனர் பட்டுத்துணிகளையும் பீங்கான் பாத்திரங்களையும் எடுத்துக் கொண்டு சாவகத்துக்கு வந்தார்கள்.

தமிழ் நாட்டிலிருந்தும் வட இந்தியாவிலிருந்தும் வாணிகர் கப்பல்களில் சாவகம் சென்றார்கள். சாவக நாட்டில், சாவா தீவின் மேற்குப் பகுதியான சுந்தா தீவிலும் அதற்கு அடுத்த சுமாத்ரா தீவிலும் மிளகு உற்பத்தியாயிற்று. ஆனால் இந்த மிளகு, தமிழகத்துச் சேரநாட்டில் உண்டான மிளகு போன்று அவ்வளவு சிறந்ததல்ல. ஆனாலும் சாவகத்து மிளகு தமிழகத்தின் கிழக்குக் கரை நாடுகளுக்குக் கொண்டு வரப்பட்டது. ஏனென்றால், பேர் போன சேர நாட்டு மிளகை, யவனர் கப்பலில் ஏற்றிக் கொண்டுபோய் உரோமபுரி முதலான மேல் நாடுகளில் விற்றார்கள். ஆகவே சேர நாட்டு மிளகு போதுமான அளவு தமிழகத்துக்குக் கிடைக்கவில்லை. பற்றாக்குறையை ஈடு செய்யச் சாவக நாட்டு மிளகு தமிழகத்துக்குக் கொண்டு வரப்பட்டது.

சுமாத்ரா, ஜாவா தீவுகளிலும், தைமர் (Timor) தீவிலும் சந்தன மரங்கள் விளைந்தன. அந்தச் சந்தனக் கட்டைகள் வெண்ணிறமாகவும், மணமுள்ளவையாகவும் இருந்தன. தமிழ்நாட்டிலே பொதிகை மலை, சைய மலை (மேற்குத் தொடர்ச்சி மலை)களில் சந்தன மரம் விளைந்தது. ஆனால் இந்தச் சந்தன மரத்தைவிட சாவக நாட்டுச் சந்தன மரக்கட்டைகள் மணத்திலும் தரத்திலும் உயர்ந்தவை. அந்தச் சந்தனமரம் மருத்துவத்துக்குப் பயன்பட்டபடியால் சீனர் அதை வாங்கிக் கொண்டு போனார்கள். இலவங்கம் (கிராம்பு) ஒருவகை மரத்தின் பூ. இது, ஹல்மஹீரா தீவுக்கு மேற்கே கடலில் உள்ள ஐந்து சிறிய தீவுகளில் விளைந்தது. பாண்ட கடலில் ஸெராங் தீவுக்குத் தெற்கேயுள்ள ஆறு சிறு தீவுகளிலே சாதிக்காய் விளைந்தது. சுமாத்ரா தீவில் கற்பூர வகைகள் உண்டாயின. கற்பூரம் என்பது ஒரு வகையான

மரத்தின் பிசின். கற்பூரத்தில் ஒரு வகை பளிதம் என்பது. பளிதத்தை அக்காலத்துத் தமிழர் வெற்றிலையோடு சேர்த்து அருந்தினார்கள். வெற்றிலையோடு அருந்திய கற்பூரம் பச்சைக் கற்பூரம் என்று பெயர் கூறப்பட்டது. அதற்குப் பளிதம் என்றும் பெயர் உண்டு. பௌத்த பிக்குகளும் மற்றவர்களும் உணவு உண்ட பிறகு தாம்பூலத்துடன் பளிதம் சேர்த்து அருந்தினார்கள் என்பதை மணிமேகலை நூலினால் அறிகிறோம்.

'போனகம் எய்திப் பொழுதினிற் கொண்டபின்
பாசிலைத் திரையலும் **பளிதமும்** படைத்து'

(மணி, 28: 242-243)

பளிதத்தில் (கற்பூரத்தில்) பலவகையுண்டு. ''பல பளிதம்'' என்று 10 ஆம் பரிபாடல் (அடி 82) கூறுகிறது. ஒரு வகைப் பளிதத்தைச் சந்தனத்துடன் கலந்து உடம்பில் பூசினார்கள். கடல்களும் தீவுகளும் கலந்த சாவக நாட்டிலே பவழம் (துகிர்) உண்டாயிற்று. பவழம் (பவளம்-துகிர்) என்பது பவழப் பூச்சிகளால் கடலில் உண்டாகும் பவழப் புற்று. கடலில் பவழப் பூச்சியால் உண்டாகும் பவழம் அக்காலத்தில் சாவக நாட்டிலிருந்து கிடைத்தது (மத்தியத் தரைக் கடலில் உண்டான பவழத்தை யவனர் கொண்டுவந்து விற்றனர்).

தமிழகத்துக் கப்பல் வணிகர் சாவக நாட்டுக்குக் கடல் கடந்து போய் அங்கு உண்டான வாசப் பொருள்களையும் பவழத்தையும் சீனத்திலிருந்து அங்குக் கொண்டு வரப்பட்ட பட்டுத்துகிலையும் கொண்டு வந்து பழந் தமிழ் நாட்டில் விற்றார்கள்.

அக்காலத்தில் சீனர் தமிழ் நாட்டுக்கு வரவில்லை. அவர்கள் சாவகத்தோடு நின்று விட்டார்கள். அவர்கள் சாவகத்துக்குக் கொண்டுவந்த பட்டுக்களை, அங்குச் சென்ற தமிழக வாணிகர் வாங்கிக் கொண்டு வந்து இங்கு விற்றார்கள். தமிழர் பட்டுத் துணியை 'நூலாக்கலிங்கம்' என்று கூறியதைச் சங்க இலக்கியங்களில் காணலாம்.

சாவக நாட்டிலிருந்து கிடைத்த வாசப் பொருள்களைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. வாசப் பொருள்களை விற்றவர்

வாசவர் என்று பெயர் கூறப்பட்டனர். வாசப் பொருள்கள் ஐந்து என்றும் அவை பஞ்ச வாசம் என்றும் கூறப்பட்டன. பஞ்ச வாசம்,

> 'தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம்
> கற்பூரம் சாதியோ டைந்து.'

என இவை.

தமிழ் நாட்டிலிருந்து சாவக நாட்டுக்குச் சென்ற கப்பல்கள் முதலில் இலங்கைத் தீவின் வடகோடியில் இருந்த (இப்போதைய யாழ்ப்பாணம்) மணிபல்லவம் என்னும் சம்புகொல பட்டினத்துக்குச் சென்று தங்கின. இது கப்பல் கள் தங்குவதற்கு நல்ல துறைமுகமாக இருந்தது. ஆனால், இங்கு ஏற்றுமதி இறக்குமதி நடைபெறவில்லை. மணி பல்லவம் (சம்புகொல பட்டினம்) அக்காலத்தில் மனிதர் வாழாத இடமாக இருந்தது; அங்குச் சென்று தங்கின கப்பல்கள் அங்கிருந்து கடற்பிரயாணத்துக்கு வேண்டிய குடி நீரை எடுத்துக் கொண்டு போயின. பிறகு அங்கிருந்து புறப்பட்டு நேரே நெடுந்தூரத்திலுள்ள கிழக்கிந்தியத் தீவு களான சாவக நாட்டுக்குச் சென்றன. இடைவழியில் நாகர்மலைத் தீவுகள் இருந்தன. நாகர்மலைத் தீவுகள் பிற் காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 10, 11, 12 ஆம் நூற்றாண்டுகளில்) மாநக்கவரம் என்று பெயர் பெற்றிருந் தன. இக்காலத்தில் இத்தீவுகள் நக்கவாரி (நிக்கோபர்) தீவுகள் என்று கூறப்படுகின்றன. அக்காலத்தில் அத்தீவு களில் நாகர் இனத்தைச் சேர்ந்த காட்டுமிராண்டிகள் வசித் திருந்தார்கள். அவர்கள் ஆடையில்லாமல் மிருகங்களைப் போல வாழ்ந்தபடியால் நக்கசாரணர் என்று கூறப்பட்டனர். நாகர்மலைத் தீவுகளில் கப்பற் பிரயாணிகள் சென்றால், அவர்களை நக்கசாரணர் கொன்று விடுவர். அவர்கள் மனி தரைக் கொன்று தின்றதாகவும் கூறப்படுகின்றனர். ஆகை யால் அந்தப் பக்கமாகச் செல்லுகிற கப்பல்கள் அத்தீவுக்குப் போவதில்லை.

சாதுவன் என்னும் வாணிகன் நாகர்மலைத் தீவில் சென்று உயிரிழக்காமல் திரும்பி வந்ததை மணிமேகலை காவியம் கூறு

கிறது. சாதுவன் என்னும் வாணிகன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து சாவக நாட்டுக்குப் போய் வாணிகஞ் செய்வதற்காகக் கப்பலில் புறப்பட்டுச் சென்றான். கப்பல் நாகர் மலைத் தீவுக்கருகில் சென்றபோது புயற் காற்றடித்துக் கடலில் மூழ்கிவிட்டது. மாலுமிகள் கடலில் முழுகிப் போனார்கள். சாதுவன் மரக்கட்டையொன்றைப் பற்றிக்கொண்டு அருகிலிருந்த நாகர்மலைத் தீவுக்கு நீந்தி நல்லகாலமாகக் கரையை யடைந்தான். ஆனால், இளைப்புங் களைப்பும் அடைந்து சோர்ந்திருந்த அவன் கடற்கரை மணலிலேயே உறங்கிவிட்டான். அயலான் ஒருவன் உறங்குவதைக் கண்ட நக்கசாரணர் சிலர் வந்து அவனைக் கொல்லத் தொடங்கினார்கள். விழித்துக் கொண்ட சாதுவன், அவர்களுடைய மொழியை அறிந்தவனாகையால், தன்னைக் கொல்ல வேண்டாமென்றும் கப்பல் முழுகிப் போனதனால்தான் அவ்விடம் வந்ததாகவும் கூறினான். தங்களுடைய மொழியில் பேசினபடியால் அவர்கள் அவனைக் கொல்லாமல் தங்களுடைய தலைவனிடம் அழைத்துக் கொண்டு போனார்கள். சாதுவன் சில காலம் நக்கசாரணரோடு தங்கியிருந்தான். பிறகு சந்திரதத்தன் என்னும் காவிரிப்பூம்பட்டினத்து வாணிகன், சாவக நாட்டுக்குப்போய் வாணிகஞ்செய்துவிட்டுத் தன்னுடைய கப்பலில் திரும்பி வருகிறவன் நாகர்மலைத் தீவின் பக்கமாக வந்தபோது, நக்கசாரணர் அவனுடைய கப்பலைத் தங்கள் தீவுக்கு அழைத்து அவனுடைய கப்பலில் சாதுவனை ஏற்றிக் காவிரிப்பூம் பட்டினத்துக்கு அனுப்பினார்கள். இந்தச் செய்தியை மணிமேகலை காவியம் (ஆதிரை பிச்சையிட்ட காதை) கூறுகிறது.

பாண்டிய நாட்டு வாணிகரும் சாவகத் தீவுக்குக் கப்பலோட்டிச் சென்று வாணிகஞ் செய்தனர். பாண்டி நாட்டிலிருந்த தமிழர் சாவக நாட்டுக்குச் சென்று வாணிகஞ் செய்து திரும்பியதையும் மணிமேகலை காவியம் கூறுகிறது.

> 'மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
> **சாவக நன்னாட்டுத்** தண்பெயல் மறுத்தலின்
> ஊனுயிர் மடிந்தது உரவோய் என்றலும்
>
> .. .. ..

அங்கந் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களொடு மகிழ்வுடன் ஏறிக்
கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல்லவத்திடை வீழ்த்துத்
தங்கிய தொருநாள்.'

(பாத்திர மரபு கூறிய கதை 76.72)

தமிழகத்திலிருந்து சாவகநாடு நெடுந்தூரத்திலிருந்தும் தமிழ வாணிகர் அந்நாட்டுக்குக் கப்பலில் சென்று வாணிகஞ் செய்தனர், காரணம் என்னவென்றால் அக்காலத்தில் வேறெங்கும் கிடைக்காத வாணிகப் பொருள்கள் சாவக நாட்டில்தான் கிடைத்தன.

கடலில் போகிற மரக்கலங்கள் காற்றின் வேகத்தினால் திசை தப்பி ஓடுவதும் உண்டு. கப்பலோட்டும் பரதவர் அப்போது அவைகளை அடக்கிச் செலுத்தினார்கள்.

'முரசு கடிப்படைய அருந்துறை போகிப்
பெருங்கடல் நீந்திய மரம்வலி யுறுக்கும்
பண்ணிய வினைவர் போல'

(பதிற்று, 8ஆம் பத்து 6)

கடலில் செல்லும் கப்பல்கள் சில புயலில் அகப்பட்டு சமயத்தில் நீரில் முழுகுவதும் உண்டு. கடலில் முழுகும் கப்பல், இருள் சூழும்போது மலை மறைவதுபோலக் காணப் பட்டது என்று புலவர் கொல்லன் அழிசி கூறுகிறார் (குறுந், 240:5-7).

கடுங்காற்றினால் தாக்குண்டு திண்மையான கயிறுகளையும் அறுத்துப் பாய்மரத்தை ஒடித்து நாவாயை அடித்துச் சென்று பாறைக் கல்லில் மோதி நீர்ச் சுழியில் அகப்பட்ட நாவாயை மாங்குடிமருதனார் கூறுகிறார்.

'பன்மீன் வழங்கும் வளைமேய் பரப்பின்
விலங்குபிணி நோன்கயிறு அறீஇதை புடையூக்
கூம்பு முதல் முருங்க எற்றிச் சாய்ந்துடன்
கடுங்காற்று எடுப்பக் கல்பொருது இரைஇ
நெடுஞ்சுழிப் பட்ட நாவாய்'

(மதுரைக் காஞ்சி 375-379)

சாதுவன் என்னும் வாணிகன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து சாவக நாட்டுக்குக் கப்பலில் பிரயாணஞ் செய்தபோது, அவனுடைய கப்பல் நாகர்மலைத் தீவுக்கு அருகில்காற்றினால் சாய்ந்து முழுகிப் போனதையும் அவன் ஒருமரத்தைப் பற்றிக் கொண்டு தீவில் கரையேறியதையும் மணிமேகலை கூறுகிறது.

'நளியிரு முந்நீர் வளிகலன் வவ்வ
ஒடிமரம் பற்றி யூர்திரை யுதைப்ப
நக்கசாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சார்ந்தவர் பான்மையன் ஆயினன்'

(மணி, 16: 13-16)

மணிபல்லவத் துறைமுகத்திலிருந்து காவிரிப்பூம்பட்டினத்துக்குக் கப்பலில் வந்து கொண்டிருந்த கம்பளச் செட்டி என்பவனுடைய மரக்கலம் இரவில் கரையையடைகிற சமயத்தில் கவிழ்ந்தது என்பதை மணிமேகலை கூறுகிறது.

'துறைபிறக் கொழியக்
கலங் கொண்டு பெயர்ந்த அன்றே காரிருள்
இலங்குநீர் அடைகரை யக்கலங் கெட்டது.'

(மணி, 25: 189-191)

இவ்வாறு நடுக்கடலிலே காற்றினாலும் மழையினாலும் புயலினாலும் இடுக்கண்களும் துன்பங்களும் நேர்ந்தும் அவைகளையும் பொருட்படுத்தாமல் வாணிகர் நாவாய்களைக் கடலில் ஓட்டிச் சென்றனர். இயற்கையாக ஏற்படுகிற இந்தத் துன்பங்கள் அல்லாமல், கப்பல் வாணிகருக்குக் கடற் கொள்ளைக்காரராலும் துன்பங்கள் நேரிட்டன. ஆனால், கடற் கொள்ளைக்காரர் கிழக்குக் கடலில் அக்காலத்தில் இல்லை. மேற்குக் கடலிலே (அரபிக்கடல்) கப்பற் கொள்ளைக்காரர் இருந்ததை அக்காலத்தில் சேர நாட்டுத் துறைமுகத்துக்கு வந்து சென்ற யவனர் எழுதியுள்ளனர். துளு நாட்டின் ஏழில் மலைக்கு நேரே, கடலில் இருந்த ஒரு கடல் துருத்தியில் (சிறு தீவு) கடற்குறும்பர் தங்கியிருந்து வாணிகத்தின் பொருட்டு அவ்வழியாக வருகிற கப்பல்களைக் கொள்ளையடித்தனர் என்றும் ஆகவே அவ்வழியாகக் கப்பல்கள் போவது ஆபத்து என்றும் பிளினி என்றும் யவனர் எழுதியுள்ளனர்.

ஆனால், அக்காலத்தில் சேர நாட்டையரசாண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் அந்தக் கடற் குறும்பரை வென்று அடக்கினான். கடற் குறும்பர் அழிந்த பிறகு யவனக் கப்பல்கள் சேர நாட்டுத் துறைமுகங்களுக்கு வந்து போயின.

கடல் துருத்தியில் இருந்த கடற்குறும்பர் அத்தீவில் கடம்ப மரம் ஒன்றை வளர்த்து வந்தனர். அவர்கள் அத் தீவிலிருந்து கொண்டு அவ்வழியாக வாணிகத்தின் பொருட்டு வந்த யவனக் கப்பல்களை முசிறித் துறைமுகத்துக்கு வராத படி தடுத்தனர். ஆகவே, அவர்களை அழிக்க இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னுடைய மக்கள் நால்வரில் ஒருவனான சேரன் செங்குட்டுவனைக் கப்பல் படையின் தலைவனாக அமைத்து அனுப்பினான். செங்குட்டுவன் கடலில் சென்று கடற்றுருத்திக் குறும்பரை வென்று அவர்கள் வளர்த்த கடம்ப மரத்தை வெட்டி அதன் அடி மரத்தினால் முரசு செய்தான். இவ்வாறு கடற்குறும்பர் அழிக்கப்பட்ட பிறகு யவனக் கப்பல் கள் சேர நாட்டுத் துறைமுகப் பட்டினங்களுக்கு வந்தன. நெடுஞ்சேரலாதன் கடம்பரை அழித்த செய்தியைப் பதிற்றுப் பத்து, இரண்டாம் பத்து, ஐந்தாம் பத்துகளினால் அறிகிறோம்.

> 'பவர்மொசிந்து ஓம்பிய திரள்பூங் கடம்பின்
> கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்
> வென்றெறி முழங்குபணை செய்தவெல் போர்
> நாரரி நறவின் ஆரமார்பின்
> போரடு தானைச் சேரலாத.'

(2 ஆம் பத்து 1: 12-16)

இதில் இவன் கடம்பரை நேரில் சென்று அடக்காமல் தன் மகனை ஏவினான் என்பது கூறப்படுகிறது. ஏவப்பட்டவன் இவனுடைய மகனான செங்குட்டுவன்.

> 'இருமுந்நீர்த் துருத்தியுள்
> முரணியோர்த் தலைச் சென்று
> கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின முன்பின்
> நெடுஞ்சேரலாதன் வாழ்க அவன் கண்ணி.'

(2 ஆம் பத்து 10: 2-5)

செங்குட்டுவன் கடல் துருத்திக் குறும்பரை வென்ற படியால் அவன் 'கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்' என்று பெயர் பெற்ருன். இவனைப் பதிற்றுப் பத்து ஐந்தாம் பத்தைப் பாடிய பரணர்,

> 'தானை மன்னர்
> இனியா ருளரோ நின் முன்னு மில்லை.
> மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
> விலங்குவரி கடவும் துளங்கிருங் கமஞ்சூல்
> வயங்குமணி இமைப்பின் வேலிடுபு
> முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே'
> (5 ஆம் பத்து 5: 17-22)

என்று கூறுகிருர்.

தன் தந்தையின் ஏவலின்படி செங்குட்டுவன் கடற் குறும்பரை வென்று அடக்கினுன் என்பது இவற்றிலிருந்து தெரிகிறது.

**குறிப்பு:** கடல்தீவில் கடம்ப மரத்தைக் காவல் மரமாகக் கொண்டிருந்த குறும்பரும் பிற்காலத்தில் சரித்திரப் புகழ் பெற்ற வனவாசிக் கதம்பரும் ஒருவரே என்று சிலர் கருதுவர். அப்படிக் கருதுவது தவறு. கடல் தீவில் இருந்த கொள்ளைக் குறும்பர் கடம்ப மரத்தை வளர்த்ததும், வனவாசிக் கடம்பர் கடம்ப மரத்தை வளர்த்ததும் காரணமாக இருவரும் ஒருவரே என்று கூறுவது தவறு. கடல் கொள்ளைக் காரருக்குக் கடம்பர் என்றும் பெயர் இருந்ததில்லை. வனவாசிக் கதம்பர் கடல் கொள்ளைக்காரராக இருந்ததும் இல்லை. நெடுஞ்சேரலாதனும் சேரன் செங்குட்டுவனும் வென்ற கடல் குறும்பர் கி.பி. 2 ஆம் நூற்ருண்டில் இருந்தவர். வனவாசிக் கதம்பர் கி.பி. ஐந்தாம் நூற்ருண்டில் இருந்தவர். இருவரையும் ஒன்ருகப் பிணைப்பது தவறு. சில வரலாற்று அறிஞர்கள் கூறுவது போல கடம்பர் என்று பெயர் இருந்ததில்லை. கதம்பர் என்றுதான் சாசனங்கள் கூறுகின்றன.

கடலில் நாவாயோட்டும் தொழில் செய்பவருக்கு மீகாமர் என்பது பெயர். கப்பலோட்டும் தொழில் செய்தவர் பரதர் என்றும் பரதவர் என்றும் பெயர் பெற்றனர். அவர்கள் துறைமுகப் பட்டினங்களில் குடியிருந்தார்கள். கப்பல்கள் துறைமுகத்தையடைந்தவுடன் கப்பல்களில் தொழில்

செய்யும் மாலுமிகள் கள்ளையுண்டனர். அவர்களுக்காகத் துறைமுகங்களில் கள் விற்கப்பட்டது.

> 'வேறுபன் ஞாட்டுக் கால்தர வந்த
> பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்
> களிமடைக் கள்ளின் சாடி'
>
> (நற்றிணை 295: 5-8)

துறைமுகங்களில் விற்கப்பட்ட கள்ளைக் குடித்து மாலுமிகள் மகிழ்ச்சியாக இருந்ததை மணிமேகலை கூறுகிறது.

> 'முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்
> துழந்தடு கள்ளின் தோப்பியுண் டயர்ந்து
> பழஞ்செருக் குற்ற அனந்தர்ப் பாணி'
>
> (மணி, 7: 20-22)

நாவாய்க் கப்பல்கள் துறைமுகத்தையடைந்தபோது அதை மக்கள் மகிழ்ச்சியோடு எதிர் கொண்டழைத்தனர் என்று பரிபாடல் கூறுகிறது.

> 'தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும்
> ஏமுறு நாவாய் வரவெதிர் கொள்வார் போல்'
>
> (பரிபாடல் 10: 38-39)

நாவாயில் கப்பலோட்டுந் தொழில் செய்த ஓர் இளையவன் தன் புது மனைவியைப் பிரிந்து கப்பலில் தொழில் செய்யச் சென்றான். அவனுடைய மனைவி அவன் எத்தனைக் காலங்கழித்துத் திரும்பி வருவானோ என்று மனக்கவலையடைந்தாள். அப்போது அவளுடைய தோழி அவளுக்கு ஆறுதல் கூறினாள் என்று மருதன் இளநாகனார் கூறுகிறார்.

> 'உலகு கிளர்ந்தன்ன உருகெழு வங்கம்
> புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
> இரவும் எல்லையும் அசைவின் றாகி
> விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்
> கோடுயர் திணிமணல் அகன்றுறை நீகான்
> மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
> ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல
> கழியா மையே யழிபடர் அகல, வருவர்'

(நீகான்-மீகாமன்) (அகம், 255: 1-8)

## எட்டிப் பட்டம்

வாணிகத் துறையில் இவ்வளவு துன்பங்கள் இருந்தும் அக்காலத்துத் தமிழ் வாணிகர், வாணிகத் தொழிலை அயல் நாடுகளோடு தரை வழியாகவும் கடல் வழியாகவும் சென்று நடத்திப் பொருள் ஈட்டினார்கள். 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்பது தமிழர் வாக்கு. சேர சோழ பாண்டியராகிய தமிழரசர் வாணிகரை ஊக்கினார்கள். வாணிகத்தில் பெருஞ் செல்வத்தை ஈட்டின மாசாத்துவர்களுக்கும் மாநாய்கர் (மாநாவிகர்)களுக்கும் எட்டிப் பட்டமும் எட்டிப் பூவும் அளித்துச் சிறப்புச் செய்தார்கள். எட்டிப்பூ என்பது பொன்னால் செய்யப்பட்ட தங்கப் பதக்கம் போன்ற அணி. பெரும் பொருள் ஈட்டிய வாணிகச் செல்வர்களுக்கு எட்டிப் பட்டம் அளிக்கும்போது இப்பொற் பூவையும் அரசர் அளித்தனர். எட்டிப் பட்டம் பெற்ற வாணிகரைப் பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன.

காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த சாயலன் என்னும் வாணிகன் எட்டிப்பட்டம் பெற்றிருந்ததைச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

> 'எட்டி சாயலன் இருந்தோன் தனது
> பட்டினி நோன்பிகள் பலர்புகு மனையில்'
>
> (அடைக்கலக் காதை, 163-164)

குறிப்பு: எட்டி சாயலன் என்போன் ஒரு வாணிகன். எட்டி—பட்டப் பெயர் என்று பழைய அரும்பத உரையாசிரியர் எழுதுகிறார்.

எட்டிப் பட்டம் பெற்றிருந்த ஒரு வாணிகனை மணிமேகலை காவியங் கூறுகிறது (நாலாம் காதை, வரி 58, 64.). காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த தருமதத்தன் என்னும் வாணிகன் பாண்டி நாட்டு மதுரைக்குப்போய் அங்கு வாணிகஞ் செய்து பெரும் பொருளைச் சேர்த்தான். பாண்டிய அரசன் அவனுக்கு எட்டிப் பட்டமும் எட்டிப்

பூவும் அளித்துச் சிறப்புச் செய்தான் என்று மணிமேகலையே கூறுகிறது. தருமதத்தன்—

'வாணிக மரபின் வருபொருள் ஈட்டி
நீள்நிதிச் செல்வனாய் நீணில வேந்தனில்
எட்டிப் பூப் பெற்று இருமுப்பதிற் றியாண்டு
ஒட்டிய செல்வத்து உயர்ந்தோன் ஆயினன்.'

*(மணி, 22: 111-114)*

# 5. பிறநாட்டு வாணிகர்

**ப**ழங்காலத்துத் தமிழர் தரை வழியாகவும் கடல்வழி யாகவும் பாரதநாடு முழுவதும் சென்று வாணிகம் செய் தார்கள். உஞ்சை (உச்சயினி), கலிங்கப்பட்டினம், காசி (வாரணசி), பாடலி (பாடலிபுரம்) முதலான இடங் களிலும் கடல் கடந்த நாடுகளாகிய காழகம் (பர்மா தேசம்) அருமணவன் (*Rāmañña*), தக்கோலம் (Takkola), கிடாரம் (கடாரம்), சாவகம் (கிழக்கிந்தியத் தீவுகள்) முதலான இடங்களுக்கும் சென்று வாணிகஞ் செய்ததை முன்னமே கூறினோம்.

தமிழ் வாணிகர் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் இலங்கைக்குச் சென்று அங்கே அநுராதபுரத்தில் தங்கி வாணிபம் செய்திருந்தனர் என்பது, சமீப காலத்தில் அந் நகரத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பிராமி எழுத்துக் கல் வெட்டினால் அறியப்படுகிறது என்பதையும் கூறினோம்.

தமிழக வாணிகர் அயல் நாடுகளுக்குச் சென்று வாணி கம் செய்தது போலவே அயல்நாட்டு வாணிகரும் தமிழகத் துக்கு வந்து வாணிகஞ் செய்தார்கள். அக்காலத்தில் வாணிகத்தில் உலகப் புகழ்பெற்ற காவிரிப்பூம்பட்டினத்துத் துறைமுகத்திலே அயல் நாடுகளிலிருந்து கப்பலோட்டி வந்த வேறு பாஷைகளைப் பேசின மக்கள் தங்கியிருந்ததைச் சிலப் பதிகாரம் கூறுகிறது.

> 'பயனற வறியா யவனர் இருக்கையும்
> கலந்தரு திருவிற் புலம் பெயர் மாக்கள்
> கலந்தினி துறையும் இலங்குநீர் வரைப்பும்.'
>
> (சிலம்பு, 5:10-12)

'மொழி பெயர் தேத்தோர் ஒழியா விளக்கம்'
(சிலம்பு, 6:43)

'மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்.'
(பட்டினப்பாலை, 216-218)

## அரபு வாணிகர்

தமிழ் நாட்டுக்கு வடமேற்கிலிருந்து வந்த அராபிய வாணிகர் சேர நாட்டின் முசிறித் துறைமுகத்துக்கு வந்து வாணிகஞ் செய்தார்கள். முசிறியில் அவர்கள் வாணிகஞ் செய்த இடத்துக்குப் **பந்தர்** என்று பெயரிட்டிருந்தார்கள். பந்தர் என்றால் அரபு மொழியில் கடைவீதி என்பது பொருள். முசிறித் துறைமுகத்துப் பந்தரில் முத்துக்களும் விலையுயர்ந்த நகைகளும் விற்கப்பட்டன. பதிற்றுப்பத்து 6 ஆம் பத்தில் (செய்யுள் 5) ''நன்கல வெறுக்கைத் துஞ்சும் பந்தர்'' என்றும், 7 ஆம் பத்து 7 ஆம் செய்யுளில், ''பந்தர்ப் பெய ரிய பேரிசை மூதூர்'' என்றும், 8 ஆம் பத்து 4 ஆம் செய்யு ளில், ''பந்தர்ப் பயந்த பலர் புகழ் முத்தம்'' என்றும் பந்தர் அங்காடி கூறப்படுகிறது. அரபியர் தமிழ் நாட்டோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்தபடியால் அரிசி என்னுந் தமிழ்ச் சொல் அரபு மொழியில் சென்று ஒருஜ் என்று வழங்குகிறது. அராபியர், அக்காலத்தில் தமிழ் நாடாக இருந்த சேர நாட்டிலிருந்து மூங்கிலைக் கொண்டுபோய் அரபி நாட்டில் வளர்த்தார்கள். அராபியர், தமிழ் நாட்டுப் பொருள்களை, முக்கியமாகச் சேரநாட்டு மிளகைக் கொண்டு போய்ச் செங்கடல் துறைமுகங்களிலும் எகிப்து நாட்டில் நீல நதி, கடலில் கலக்கும் இடத்திலிருந்த அலக்சாந்திரியத் துறைமுகப் பட்டினத்திலும் விற்றார்கள். அங்கிருந்த பொருள்களைக் கொண்டுவந்து தமிழ் நாட்டில் விற்றார்கள். அக்காலத்தில் அராபியர் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று வாணிகம் செய்யவில்லை. தமிழர் கிழக்கிந்தியத் தீவுகளுக்குப் போய் அங்கிருந்து கொண்டு வந்த பொருள்களை இங்கிருந்து

அரபியர் வாங்கிக் கொண்டுபோய் வெளிநாடுகளில் விற்றார்கள். தூரக் கிழக்கு நாடுகளில் உண்டான பொருள்களை மேற்கு நாடுகள் வாங்கிக் கொண்டு போவதற்குத் தமிழ் நாடு அக்காலத்தில் மத்திய வாணிக இடமாக அமைந்திருந்தது.

## யவன வாணிகர்

கிரேக்க நாட்டாரும் உரோம நாட்டாரும் அக்காலத்தில் யவனர் என்று சிறப்புப் பெயர் பெற்றிருந்தார்கள். உரோம சாம்ராச்சிய காலத்தில், கி.மு. முதலாம் நூற்றாண்டில், எகிப்து தேசத்தை உரோமர் கைப்பற்றிக் கொண்டார்கள். அக்காலத்தில் எகிப்து நாட்டில் மத்திய தரைக் கடல் ஓரத்திலிருந்த அலக்சாந்திரியத் துறைமுகப்பட்டினம், ஆசியா-ஐரோப்பாக் கண்டங்களின் மத்தியத் துறைமுகப் பட்டினமாக இருந்தது. அலக்சாந்திரியத் துறைமுகப் பட்டினத்தில், உலகத்தின் பல பாகங்களிலிருந்து பலநாட்டு வாணிகர் வந்தனர். ரோமாபுரியிலிருந்து யவன வாணிகர் அங்கு வந்து தங்கி வாணிகஞ் செய்தார்கள். உரோமர் எகிப்து நாட்டைக் கைப்பற்றின பிறகு அவர்கள் அரபியரின் வாணிகத்தையும் கைப்பற்றினார்கள். அரபியர் வாணிகஞ் செய்திருந்த செங்கடல் துறைமுகப் பட்டினங்களைக் கைப்பற்றி அரபியரின் வாணிக ஆதிக்கத்தை ஒழித்தார்கள். செங்கடல் வாணிகத்தைக் கைப்பற்றின யவனர், செங்கடலைக் கடந்து வந்து ஆப்பிரிக்கா கண்டத்தின் கிழக்குக் கரைப் பட்டினங்களிலும், பாரசீகக் குடாக் கடலிலும் கப்பலில் சென்று வாணிகஞ் செய்தார்கள். யவனர் செங்கடலுக்கு இட்ட பெயர் எரித்ரைக்கடல் (Maris erythraei) என்பது. எரித்ரை என்னும் கிரேக்க மொழிச் சொல்லுக்குச் செங்கடல் என்பது பொருள். பாரசீகக்குடாக் கடலில் வந்து வாணிகஞ் செய்தபோது அந்தக் குடாக்கடலுக்கும் எரித்ரைக் கடல் என்று பெயரிட்டனர். அக்காலத்தில் அவர்கள் நடுக் கடலில் கப்பல் பிரயாணஞ் செய்யாமல் கரையோரமாகவே பிரயாணஞ் செய்தார்கள். சில காலஞ்சென்ற பிறகு யவனர் பாரசீகக் கடலிலிருந்து சிந்து, கச்சு, குஜராத்தி நாடு

களுக்குக் கடல் வழியே வந்து வாணிகஞ் செய்தார்கள். பிறகு இந்தியாவில் மேற்குக் கரைத் துறைமுகங்களுக்கும் சேரநாட்டு முசிறிப் பட்டினத்துக்கும் வந்தார்கள். அவர்கள் அரபிக் கடலுக்கு வந்து வாணிகஞ் செய்தபோது அரபிக் கடலுக்கும் எரித்ரைக்கடல் (செங்கடல்) என்றே பெயர் கூறினார்கள். பிறகு குமரிக்கடல், வங்காளக் குடாக்கடல் ஆகிய கடல்களுக்கு வந்து தமிழகத்தின் கிழக்குக் கரையிலும் வாணிகஞ் செய்தார்கள். அவர்கள், குமரிக் கடலுக்கும் வங்காளக் குடாக்கடலுக்கும் எரித்ரைக்கடல் (செங்கடல்) என்றே பெயரிட்டழைத்தார்கள்.

யவனர் அக்காலத்தில் நடுக்கடலில் பிரயாணஞ் செய்யாமல் கடற்கரை ஓரமாகவே பிரயாணம் செய்தபடியால், அவர்கள் முசிறி முதலான தமிழ் நாட்டுத் துறைமுகங்களுக்கு வந்து போகப் பல மாதங்கள் சென்றன. அவர்கள் அரபிக் கடலின் ஊடே நடுக்கடலில் பருவக்காற்றின் உதவியினால் பிரயாணஞ் செய்ய அக்காலத்தில் அறியவில்லை. ஆனால், பருவக்காற்றின் உதவியினால் வெகு விரைவில் நடுக்கடலினூடே பிரயாணஞ் செய்யத் தமிழரும் அராபியரும் அறிந்திருந்தார்கள். பருவக் காற்றின் உதவியை அறியாத காரணத்தினால் யவனர் முசிறித் துறைமுகப் பட்டினத்துக்குக் கரையோரமாக வந்துபோக நெடுங்காலஞ் சென்றது. கடைசியாகக் கி.பி. முதல் நூற்றாண்டில் ஹிப்பலஸ் என்னும் பெயர் கொண்ட கிரேக்க மாலுமி, பருவக்காற்றின் உதவியினால் முசிறித் துறைமுகத்துக்கு நேரே நடுக்கடல் வழியாக விரைவில் பிரயாணம் செய்யும் இரகசியத்தைக் கண்டு பிடித்தான். அதுமுதல் யவனக் கப்பல்கள் விரைவாகவும் அதிகமாகவும் சேரநாட்டு முசிறித் துறைமுகத்துக்கு வந்து சென்றன. அந்தப் பருவக் காற்றுக்கு யவனர், அதைக் கண்டுபிடித்தவன் பெயராகிய ஹிப்பலஸ் என்னும் பெயரையே சூட்டினார்கள். ஹிப்பலஸ் பருவக்காற்று கண்டு பிடிக்கப்பட்ட பிறகு யவனக் கப்பல்கள் நேராகத் தமிழ் நாட்டுத் துறைமுகப் பட்டினங்களுக்கு வந்தன. அதனால் யவனக் கப்பல் வாணிகம் பெருகிற்று. இந்தக் கடல் வாணிகம் கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்

ருண்டு வரையில் நடந்தது. கி.மு. முதல் நூற்ருண்டின் தொடக்கத்தில் உரோம் சாம்ராச்சியத்தை யரசாண்ட அகஸ்தஸ் சீஸர் அரசன், யவன-தமிழர் வாணிகத்தை விரிவுபடுத்திஞன். உரோமாபுரி அரசர்களின் உருவ முத்திரை இடப்பட்ட பழைய நாணயப் புதையல்கள் தமிழ் நாட்டில் சில இடங்களில் சமீபகாலத்தில் பூமியிலிருந்து அகழ்ந்தெடுக்கப்பட்டன. அந்தப் பழங்காசுகள் சங்க காலத்தில் நடந்த தமிழர்-யவனர் வாணிகத் தொடர்புக்குச் சான்று பகர்கின்றனர். அக்காலத்தில் நடந்த தமிழர்-யவனர் வாணிகத் தொடர்பைப் பற்றி பிளினி, தாலமி முதலான யவனர்கள் எழுதிய நூல்களிலிருந்து அறிகிருேம். ஒரு யவனர், கிரேக்க மொழியில் எழுதிய செங்கடல் வாணிகம் என்று பெயருள்ள ஒரு நூல் உண்டு. (Periplus of the Erythraei) அதை எழுதியவர் பெயர் தெரியவில்லை. அந் நூலில் தமிழ் நாட்டுத் துறைமுகங்களில் யவன வாணிகர் செய்த வாணிகத்தைப் பற்றிக் கூறப்படுகிறது. உரோம் சாம்ராச்சியத்தையாண்ட அகஸ்தஸ் சக்கரவர்த்திக்கு மதுரையிலிருந்து ஒரு பாண்டியன் தூதுவரையனுப்பிஞன்.

வாணிகத்தின் பொருட்டு வந்த யவனர் துறைமுகங்களுக்கு அருகில் தங்கியிருந்தார்கள். ஏற்றுமதி இறக்குமதி முடிந்தவுடன் அவர்கள் திரும்பிப் போய் விட்டார்கள். யவனர் சிலர் தமிழ்நாட்டிலே தங்கித் தொழில் செய்தார்கள். அவர்கள் தச்சுத் தொழிலில் தேர்ந்தவர்கள். ''யவனத் தச்சர்'' என்று மணிமேகலை (19:108) கூறுகிறது. புதுச்சேரிக்குத் தெற்கே (அரிக்கமேடு என்னும் இடத்தில்) இருந்த யவனப் பண்டகசாலையில் யவனத் தொழிலாளிகள் சிலர் கண்ணுடி மணிகளைச் செய்யும் தொழிலில் ஈடுபட்டிருந்தார்கள் என்று அங்கு நடந்த அகழ்வாராய்ச்சியிஞல் தெரிகிறது.

பாண்டி நாட்டின் தலைநகரான மதுரை அக்காலத்தில் கோட்டை மதிலுக்குள் இருந்தது. கோட்டை வாயில்களில் யவன வீரர்கள் காவல் இருந்தனர். கோவலன் மதுரைக்குச் சென்றபோது கோட்டை வாயிலை யவன

வீரர்கள் காவல் காத்திருந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

'கடிமதில் வாயில் காவலிற் சிறந்த
அடல்வாள் யவனர்க்கு அயிராது புக்கு'

(சிலம்பு. ஊர்காண். 66-67)

பாண்டியனுடைய பாசறையில் யவன வீரர்கள் இருந்ததைத் முல்லைப்பாட்டு கூறுகிறது. முழங்கால் வரையில் குறுகிய பாவாடை போன்ற ஆடை (வட்டுடை) அணிந்து உடம்பில் மெய்ப்பை (சட்டை) அணிந்து குதிரையோட்டும் மத்திகையை (சம்மட்டியை)க் கையில் வைத்திருந்தனர். அவர்களுடைய தோற்றம் அச்சஞ் தருவதாக இருந்தது.

'மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்கு வெருவருந் தோற்றத்து
வலிபுணரி யாக்கை வன்கண் யவனர்'

என்று முல்லைப் பாட்டு (அடி 59-61) கூறுகிறது.

யவன-தமிழர் வாணிகத் தொடர்பின் காரணமாகச் சில கிரேக்க மொழிச் சொற்கள் தமிழில் கலந்துவிட்டன. மத்திகை, சுருங்கை, கலம், கன்னல் முதலான கிரேக்க மொழிச் சொற்கள் தமிழில் கலந்து விட்டன. சங்கச் செய்யுட்களிலே இந்தச் சொற்கள் இடம் பெற்றுள்ளன.

மத்திகை என்பது குதிரை ஓட்டும் சம்மட்டி. இச் சொல் முல்லைப் பாட்டு 59 ஆம் அடியில் பயிலப்பட்டுள்ளது.

சுருங்கை என்பது கிரேக்க மொழிச் சொல். சுரங்கம் என்றும் கூறப்படும். இது தரைக்குள் அமைக்கப்படுவது. 'சுருங்கை நெடுவழி' (பரிபால். 20:104) 'சுருங்கை வீதி' (சிலம்பு. 14:65) ''சுருங்கை-கரந்துறை ஒழுகுநீர் புகுகையை ஒருத்தருமறியாதபடி மறைத்துப் படுத்த வீதி'' என்று அரும்பதவுரையாசிரியர் கூறுகிறார்.

கலம் என்னுஞ் சொல் கிரேக்கம், தமிழ் என்னும் இரண்டு மொழிகளுக்கும் உரிய சொல். கிரேக்க மொழியில் (Kalom) கலம் என்னும் சொல்லுக்கு மரவீடு என்பது

பொருள். இந்தச் சொல்லை யவனர் கப்பல்களுக்கும் பெய ராக வழங்கினார்கள். யவனர் வாணிகத்தின் பொருட்டுத் தமிழ்நாட்டுக்கு வந்தபோது இச்சொல்லைத் தமிழர் அறிந் தனர். அறிந்து செய்யுட்களிலும் பயன்படுத்தினார்கள். ''யவனர் தந்த வினைமான் நன்கலம்'' (அகம், 149), ''யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்'' (புறம், 56). தமிழிலும் கலம் என்னுஞ் சொல் உண்டு. இத்தமிழ்ச் சொல்லுக்குப் பானை, சட்டி என்பது பொருள். ஒரே ஓசையுள்ளதாக இந்தச் சொல் இருந்தபடியால் தமிழர் அடைமொழி கொடுத்து இச்சொல்லை வெவ்வேறு பொருளில் பயன்படுத் தினார்கள். கிரேக்கச் சொல்லை மரக்கலம் என்றும் தமிழ்ச் சொல்லை மட்கலம் என்றும் கூறினார்கள்.

கன்னல் என்னுஞ் சொல்லும் கிரேக்க மொழியி லிருந்து தமிழில் கொள்ளப்பட்ட சொல். காலத்தையளக் குங் கருவிக்குக் கன்னல் என்று பெயர். மேலுங் கீழுமாக இரண்டு பாத்திரங்களை ஒன்றாக அமைத்து அதன் நடுவில் இருந்த சிறுதுளை வழியாக மேல் பாத்திரத்திலிருந்து நீர் கீழ்ப் பாத்திரத்தில் சொட்டுச் சொட்டாக விழும்படியமைப் பார்கள். விழுந்த நீரின் அளவைக் கொண்டு காலத்தை யறிந்தார்கள். கன்னல் என்னும் இந்தக் கருவி யவன நாட்டி லிருந்து தமிழ் நாட்டுக்கு வந்தது.

> 'பொழுதளந்து அறியும் பொய்யா மாக்கள்
> குறுநீர்க் கன்னல் இனைத்தென் றிசைப்ப'
>
> (முல்லைப்பாட்டு, 55-58)

தமிழ் இலக்கியங்களில் பயிலப்படுகிற ஓரை என்னுஞ் சொல் கிரேக்க மொழிச்சொல் என்று சிலர் கூறுவர். அவர் கூற்று தவறு. தொல்காப்பியத்திலும் சங்கச் செய்யுட்களி லும் ஓரை என்னும் சொல் வழங்கப்பட்டுள்ளது. ஆனால் இது தமிழ்ச் சொல். கிரேக்க மொழிச் சொல் அன்று. கிரேக்க மொழியில் வானநூல் சம்பந்தமாக ஹோரா என்னும் சொல் உண்டு. அது தமிழில் 'ஓரை' என்று வழங்கியதாகச் சிலர் கருதுகின்றனர். முகூர்த்தம் என்னும் பொருளில் ஓரை என்னும் சொல் தமிழில் வழங்கவில்லை. தமிழில் வழங்கும்

(ஓரை மகளிர்) ஓரை என்னும் சொல் கிரேக்க மொழிச் சொல் அன்று. தமிழ் இலக்கியங்களில் பயிலப்படுகிற ஓரை என்னுஞ் சொல் கிரேக்க ''ஹோரா'' என்பதன் திரிபு என்று கருதுவது உண்மையறியாதார் கூற்று. இது பற்றி விரிவாக அறிய விரும்புவோர், இந்நூலாசிரியர் எழுதிய **''சங்க காலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்''** என்னும் நூலில் 20-34 ஆம் பக்கங்களில் காண்க.

அரிசி என்னும் தமிழ்ச் சொல் கிரேக்க, இலத்தீன் மொழிகளில் ஒரிஜா (Oryza) என்று வழங்கப்படுகிறது. இச்சொல்லை யவனர் தமிழிலிருந்து எடுத்துக் கொண்டனர். யவன வாணிகர், தமிழ்நாட்டு ஊர்களான சோ பட்டினத்தைச் சோ பட்மா என்றும் காவிரியைக் கபிரிஸ் என்றும் முசிறியை முசிரிஸ் என்றும் கருவூரைக் கரோரா என்றும் மதுரையை மதோரா என்றும் ஆய்நாட்டை ஆயோய் என்றும் கூறினார்கள்.

அந்தக் காலத்தில் எல்லா நாடுகளிலும் எண்ணெய் விளக்கு உபயோகிக்கப்பட்டது. மண்ணால் செய்த அகல் விளக்கையும் இரும்பினால் செய்த விளக்கையும் (இரும்பு செய் விளக்கு, நெடுநல்வாடை, 42) தமிழர் உபயோகித்தார்கள். யவன நாட்டிலிருந்து வந்த அன்னப் பறவையின் உருவமாக அமைக்கப்பட்ட 'ஓதிம' விளக்கையும், பெண் வடிவமாக அமைத்த 'பாவை' விளக்கையும் தமிழர் உபயோகித்தார்கள். இவ்விளக்கைச் செல்வர் வாங்கி உபயோகித்தார்கள்.

> 'யவனர் இயற்றிய வினைமாண் பாவை
> கையேந் தையகல் நிறைய நெய் சொரிந்து
> பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிர்எரி'

என்றும் (நெடுநல்வாடை, 101:103), ''பாவை விளக்கின் பரூஉச்சுடர் அவிழ'' என்றும் (முல்லைப்பாட்டு, 85) பாவை விளக்கு கூறப்படுகிறது. சிலப்பதிகாரமும் (5:154) மணிமேகலையும் (1:45) பாவை விளக்கைக் கூறுகின்றன. ''யவனர் ஓதிம விளக்கை''ப் பெரும்பாணாற்றுப் படை கூறுகிறது (வரி 316-317).

யவன வாணிகர் பொற்காசுகளையும் வெள்ளிக்காசுகளையும் கொடுத்துத் தமிழ்நாட்டுப் பண்டங்களை வாங்கிக் கொண்டு போனார்கள். யவனக் காசுகள் தமிழ் நாட்டிலே பல இடங்களில் கிடைக்கின்றன. அந்தப் பழங்காசுகள் தற்செயலாகப் பூமியிலிருந்து அண்மைக் காலத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்டன.

பழைய தமிழ் நாடான சேர நாட்டிலே திருவனந்தபுரத்துக்கு வடக்கே 150 மைல் தூரத்தில் உள்ள பூஞ்சாரிலும் திருச்சூருக்கு வட மேற்கே 22 மைல் தூரத்திலுள்ள எய்யலிலும் 1945 ஆம் ஆண்டில் உரோம தேசத்துப் பழங்காசுகள் கிடைத்தன. கொங்கு நாட்டில் கரூர், காட்டன் கன்னி, குளத்துப்பாளையம், பென்னார், பொள்ளாச்சி, வெள்ளலூர் முதலான இடங்களிலும் பாண்டி நாட்டில் மதுரை, கலியம்புத்தூர், கரிவலம் வந்த நல்லூரிலும், புதுக்கோட்டையைச் சேர்ந்த கருக்காக் குறிச்சியிலும், தஞ்சாவூர், மகாபலிபுரம் முதலான ஊர்களிலும் யவன நாணயங்கள் (உரோமாபுரிப் பழங்காசுகள்) கிடைத்துள்ளன. இக்காசுகள் அக்காலத்தில் நடந்த தமிழ-யவன வாணிகத்துக்குச் சான்றாக இருக்கின்றன.

**சாவகம்**

தமிழகத்துக்குக் கிழக்கே நெடுந்தூரத்தில் ஆயிரம் மைலுக்கப்பால் கிழக்கிந்தியத் தீவுகள் உள்ளன. அந்தத் தீவுக் கூட்டத்தில் மிகப் பெரியவையும் சிறியவையும் மிக நுண்மையுமான தீவுகள் ஆயிரத்துக்கு மேற்பட்டவையுள்ளன. சங்க காலத் தமிழர் அக்காலத்தில் அந்தத் தீவுகளுக்குக் கடல் கடந்துபோய் வாணிகஞ் செய்தார்கள். அவர்கள் அந்தத் தீவுகளுக்குச் **சாவக நாடு** என்று பெயரிட்டிருந்தார்கள். மணிமேகலை காவியம் சாவக நாட்டைக் கூறுகிறது. அந்தத் தீவுகளிலே சில தீவுகளில் மட்டும் நாகரிகம் அடைந்த மக்கள் அக்காலத்தில் இருந்தனர். பெரும்பான்மையான தீவுகளில் இருந்தவர் அக்காலத்தில் நாகரிகம் பெறாதவர்களாக இருந்தார்கள். நாகரிகம் பெற்றிருந்த தீவுகளில் முக்கியமானது சாவகத் தீவு. இந்தத்

தீவின் பெயரைத்தான் அக்காலத் தமிழர் அங்கிருந்த எல்லாத் தீவுகளுக்கும் பொதுப் பெயராகக் கூறினார்கள். சாவகத் தீவில்தான் தமிழர் முக்கியமாக வாணிகம் செய்தார்கள். சாவகத் தீவையரசாண்ட அரசர்கள் வாணிகத்துக்கு ஆதரவு கொடுத்தார்கள்.

இதைச் சூழ்ந்திருந்த மற்றத் தீவுகளில் உற்பத்தியான பொருள்கள் எல்லாம் சாவகத் தீவுக்குக் கொண்டு வரப்பட்டு விற்கப்பட்டன. தமிழ் நாட்டிலிருந்து சென்ற தமிழ வாணிகரும் வட இந்தியாவிலிருந்து சென்ற இந்திய வாணிகரும் சீன நாட்டிலிருந்து சென்ற சீன வாணிகரும் சாவகத் தீவுடன் வாணிகஞ் செய்தார்கள். அக்காலத்தில் சாவகம் சீன நாட்டுக்கும் இந்திய தேசத்துக்கும் இடையே மத்திய வாணிக நிலையமாக இருந்தது.

இந்தத் தீவுகளில் எரிமலைகள் அவ்வப்போது நெருப்பையும் சாம்பலையும் கக்கின. இந்தச் சாம்பல் அந்தப் பூமிக்கு வளத்தையும் செழிப்பையும் தந்தது. அக்காலத்தில் மற்ற நாடுகளில் கிடைக்காத பொருள்கள் (இலவங்கம், சாதிக்காய், குங்குமப்பூ, பளித வகை [கர்ப்பூர வகை] முதலான வாசப் பொருள்கள்) அங்கு உண்டாயின.

சாவா தீவின் வடக்கே அதையடுத்து ‘மதுரா’ என்னும் சிறு தீவு இருக்கிறது. பாண்டி நாட்டு மதுரையிலிருந்து போய்க் குடியேறின அக்காலத்துத் தமிழர் தங்கியிருந்த இடமாகையால் இதற்கு இப்பெயர் உண்டாயிற்று. சாவா தீவில் மலைகளிலிருந்து தோன்றி வடக்கே ஓடி கடலில் விழுகிற ஆறுகளில் ஒன்றின் பெயர் ஸோலோ என்பது. ஸோலோ ஆறு மதுரா தீவுக்கு அருகில் கடலில் விழுகிறது. இந்த ஆற்றின் கரையில் சில ஆண்டுகளுக்கு முன்பு, மிகப் பழைய மனிதனுடைய எலும்புக்கூடு அகழ்ந்தெடுக்கப்பட்டது. அது 35,000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த மனிதனின் எலும்பு என்று கூறுகிறார்கள். இந்த எலும்புக்கூடு எடுக்கப்பட்ட இடத்துக்கு அருகிலேயே இன்னொரு எலும்புக் கூடு கண்டுபிடிக்கப்பட்டது. அது முன்னைய எலும்புக் கூட்டைவிட மிகப் பழமையானது என்று கூறப்படுகிறது. அந்த எலும்புக் கூட்டுக்கு ‘ஜாவா மனிதன்’ என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

தமிழர் சாவகம் என்று பெயரிட்ட இந்தத் தீவை வட நாட்டார் யவதீவம் என்று பெயரிட்டிருந்தார்கள். அக் காலத்துச் சீனர் இந்தத் தீவை 'யெ தீயவோ' என்று பெயரிட்டழைத்தார்கள். 'ய வ தீ ப ம்' என்பதைத்தான் சீனர் 'யெ தீயவோ' என்று கூறினார்கள். சீன நாட்டார் யவதீவுடன் (சாவா தீவுடன்) இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, கிருஸ்து சகாப்தத்தின் தொடக்கத்திலேயே வாணிகத் தொடர்பு கொண்டிருந்தார்கள்.

சங்க காலத்துத் தமிழர் அக்காலத்திலேயே சாவகத் தீவுடன் நெருங்கிய வாணிகத் தொடர்பு கொண்டிருந் தார்கள். சாவகத் தீவை அவர்கள் ஆபுத்திர நாடு என்றும் கூறினார்கள் என்பதை மணிமேகலைக் காவியத்திலிருந்து அறிகிறோம். ஜாவா தீவின் தலைநகரம் நாகபுரம் என்றும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சாரகத்தை யரசாண்ட அரசன் பூமிசந்திரனுடைய மகனை புண்ணியராசன் என்றும் இந்த அரசர் பரம்பரை இந்திய அரசர் பரம்பரை என்றும் மணிமேகலை கூறுகிறது.

'நாக புரமிது நன்னகர் ஆள்வோன்
பூமிசந்திரன் மகன் புண்ணிய ராசன்'
(மணி, 24: 179-180)

நாகபுரத்து அரண்மனையைச் சார்ந்த சோலையில் தருமசாரணர் என்னும் பௌத்த சமயத் துறவி இருந்தார். (மணி, 25:2) காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த மணிமேகலை (கோவலன்—மாதவியின் மகள்) பௌத்த மதத்தைச் சார்ந்து பிக்குணியான பிறகு, அப்பட்டினத்திலிருந்து சாவகத் தீவின் தலைநகரமான நாகபுரத்துக்குப் போய் அங் கிருந்த தருமசாரணரை வணங்கி அங்குச் சிலநாள் தங்கி யிருந்தாள். அவள் புண்ணியராசனைக் கண்டு பிறகு திரும்பி வந்தாள் என்று மணிமேகலை காவியம் கூறுகிறது. [மாதவி மகளான மணிமேகலைச் சாவகத்துக்குப் போனதும் அங் கிருந்து திரும்பி வந்ததும் ஆகாயத்தின் வழியாக என்று மணிமேகலைக் காவியம் கூறுகிறது, (மணிமேகலை 25 ஆம் காதை) மணிமேகலை சாவகத்துக்குப் போனது கடல்வழி

யாகக் கப்பலிலேதான். ஆனால் அவள் ஆகாய வழியாகப் பறந்து சென்றாள் என்று காவியங் கூறுகின்றது. ஏன் அப்படிக் கூறுகின்றது என்பதை விளக்கி இந்நூலாசிரியர் எழுதியுள்ள 'மணிமேகலையின் விண் வழிச் செலவு' என்னும் கட்டுரையில் காண்க].*

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சாவகத்தீவை யரசாண்ட புண்ணியராசன், அக்காலத்தில் சோழ நாடடுக் காவிரிப்பூம் பட்டினத்தையும் அதனைச் சூழ்ந்த நெய்தலங் கானலையும் அரசாண்ட நெடுமுடிக்கிள்ளியிடம் (இவனுக்கு கிள்ளிவளவன் என்றும் வடிவேற்கிள்ளி என்றும் பெயர் உண்டு) தூது அனுப்பினான். அந்தத் தூது வாணிகத் தொடர்பான தூதாக இருக்கக் கூடும். சாவகத்திலிருந்து பூம்புகாருக்குக் கப்பலில் வந்த தூதர் சோழனைக் கண்டனர். பிறகு அந்நகரத்தில் பௌத்த விகாரையின் தலைவராக இருந்த அறவண அடிகளையும் கண்டு, திரும்பிச் சென்றார்கள். இதனை மணிமேகலைக் காவியமே கூறுகிறது.

> 'கிள்ளி வளவனோடு கெழுதகை வேண்டிக்
> கள்ளவிழ் தாரோய்! கலத்தொடும் போகிக்
> காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்
> மாதவன் அறவணன் இவள்பிறப்
> புணர்ந்தாங்கு
> ஓதினன் என்றியா னன்றே யுரைத்தேன்'
> (மணி, 25: 14-19)

இவ்வாறு சோழ அரசனுக்கும் சாவக அரசனுக்கும் நல்லுறவும் நட்பும் இருந்தபடியால் இரு நாடுகளுக்கும் வாணிகம் செவ்வையாக நடந்து வந்தது.

**குறிப்பு:** பிற்காலத்தில், இரு நாடுகளுக்கும் நிகழ்ந்த அரசியல் போர்களைப் பற்றி இங்குக் கூறவில்லை. இங்கு இப்போது நாம் எழுதுவது சங்க காலத்து வாணிகத்தைப் பற்றி மட்டுமே.

---

* பக்கம் 176—182 கட்டுரைப் பொழில் மணிவிழா மலர், கரந்தைத் தமிழ்ச் சங்கம், 1973.

சோழ நாட்டிலிருந்தும் பாண்டி நாட்டிலிருந்தும் அக் காலத் தமிழ் வாணிகர் சாவக நாட்டுக்குச் சென்று வாணி கஞ் செய்தது போலவே, சாவகத் தீவிலிருந்த சாவக வாணி கரும் தமிழ் நாட்டுக்கு வந்து வாணிகம் செய்தனர் என் பதில் ஐயமில்லை. பல நாட்டுக் கப்பல் வாணிகர், அக் காலத்தில் உலகப் புகழ் பெற்றிருந்த காவிரிப்பூம் பட்டினத் திலே வந்து தங்கியிருந்ததைத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. (பட்டினப்பாலை, 216-218, சிலப்பதிகாரம், இந்திரவிழா, 9-12, கடலாடுகாதை, 130-131) அங்கு வந்திருந்த அயல் நாட்டு வாணிகரில் சாவகத் தீவிலிருந்து வந்தவர்களும் இருந்தனர் என்று கருதலாம்.

அக்காலத்தில் சாவகத் தீவின் வாணிகர் கப்பல்களி லும் குறும் படகுகளிலும் பல கடல்களைக் கடந்து சென் ருர்கள். பசிபிக் மகாசமுத்திரத்தில் வாழ்ந்த அவர்கள் வங்காளக் குடாக்கடலைக் கடந்து தமிழ்நாட்டுத் துறை முகங்களுக்கு வந்தனர். பிறகு குமரிக்கடலைக் கடந்து ஆப்பிரிக்கா கண்டத்தின் கிழக்கே கடல் நடுவிலிருந்த மடகாஸ்கர் தீவுக்கும் சென்ருர்கள். மடகாஸ்கர் தீவு அக்காலத்தில் மனிதர் இல்லாத வெறுந்தீவாக இருந்தது. அந்தத் தீவில் சாவகத்து வாணிகக் கப்பலில் வந்து தங்கித் தங்கள் நாட்டுப் பொருள்களை விற்ருர்கள். அத்தீவுக்கு மேற்கிலிருந்து ஆப்பிரிக்க மக்களும், வடக்கே இருந்து அரபி யர்களும் வந்து அவர்களுடைய பொருள்களை வாங்கிக் கொண்டு போனுர்கள். இவ்வாறு மடகாஸ்கர் தீவை மையமாகக் கொண்டு சாவக வாணிகர் வாணிகஞ் செய் தார்கள். அவர்களில் பலர் அந்தத் தீவிலேயே நிலையாகத் தங்கி விட்டனர். பிற்காலத்தில் ஆப்பிரிக்கா கண்டத்தின் கிழக்குக் கரையிலிருந்து ஆப்பிரிக்க மக்களும் மடகாஸ்கர் தீவுக்கு வந்து அத்தீவின் வடக்கில் குடியேறினுர்கள். அவர் கள் சாவகர் பேசின மடகாசி மொழியையே பேசக் கற்றுக் கொண்டு அந்த மொழியையே பேசினுர்கள். இப்போதும் மடகாஸ்கர் தீவில் பேசப்படுகிற மொழி மலகாசி மொழியே. மடகாஸ்கர் தீவு இப்போது மலகாசிக் குடியரசு நாடு என்று பெயர் பெற்றிருக்கின்றது.

சங்க காலத்திலே தமிழ் நாட்டோடு வாணிகஞ் செய்த வேற்று நாட்டார் அராபியர், யவனர், சாவகர் என்று தெரிகின்றனர். அக்காலத்தில் சீன வாணிகர் தமிழகத்துக்கு (இந்தியாவுக்கு) வந்து வாணிகஞ் செய்யவில்லை. வட இந்தியாவில் கங்கை நதிப் பிரதேசத்திலிருந்தும் கலிங்க நாட்டிலிருந்தும் கப்பல் வாணிகர் தமிழகத்துக்கு வந்து வாணிகஞ் செய்தார்கள்.

# 6. பழங்காலத் துறைமுகப் பட்டினங்கள்

கடல் வழியாகக் கப்பல்களில் வாணிகம் நடைபெற்றது. தரை வாணிகத்தைவிடக் கடல் வழி வாணிகம் அதிகமாக நடந்தது. தரை வாணிகத்தைவிடக் கடல் வாணிகம் அதிகச் செலவில்லாமலும் விரைவாகவும் இருந்தபடியால் கப்பல் வாணிகம் சிறப்பாக நடந்தது. கடல் வாணிகத் துக்குக் கப்பல்கள் தேவை. கப்பல் கட்டும் தொழில்கள் ஒவ்வொரு நாட்டிலும் நடந்தன. கப்பல்களைக் கடலில் ஓட்டிக்கொண்டு போய்ப் பொருள்களை இறக்குமதி ஏற்று மதி செய்வதற்கு அந்தந்த நாடுகளில் துறைமுகங்கள் தேவை. ஆகவே, ஒவ்வொரு நாட்டிலும் துறைமுகப் பட்டினங்கள் ஏற்பட்டிருந்தன. பெரும்பாலும் துறைமுகப் பட்டினங் கள், ஆறுகள் கடலில் சேர்கின்ற புகர் முகங்களில் இருந் தன; ஆற்று முகத்துவாரங்கள் இல்லாத துறைமுகப் பட்டி னங்களும் சில இருந்தன. ஒவ்வொரு பெரிய துறைமுகங் களிலும் கலங்கரை விளக்குகள் அமைக்கப்பட்டிருந்தன. துறைமுகங்களில் ஏற்றுமதி இறக்குமதியாகும் பொருள் களுக்குச் சுங்கம் வாங்கப்பட்டது. அந்தச் சுங்கப்பணம் அந்தந்த நாட்டையாளும் அரசர்களுக்குரியது.

வட இந்தியாவில் கங்கையாறு முக்கியமான பெரிய ஆறு. அது கடலில் சேர்கிற இடத்தில் கப்பல்கள் உள் நாட்டில் நுழைந்து காசி (வாரணாசி), பாடலிபுரம் முதலான துறைமுகங்களுக்குப் போயின. அக்காலத்திலே பாரத தேசத்திலே இருந்த துறைமுகப் பட்டினங்களைக் கூறு வோம். பாரத நாட்டின் கிழக்குக் கரையில் (தமிழ்

நாட்டுக்கே வடக்கே) இருந்த பேர்போன துறைமுகங்கள் தமிலிப்தியும் கலிங்கப் பட்டினமும் ஆகும். தமிலிப்தி என்பது அக்காலத்தில் உலகப் புகழ்பெற்ற பெரிய துறை முகம். அது கங்கையாறு கடலில் கலக்கிற இடத்தில் வங்காள தேசத்தில் இருந்தது. அதற்குத் தெற்கே கலிங்க தேசத்தில் கலிங்கப்பட்டினத்தில் ஒரு துறைமுகப் பட்டினம் இருந் தது. இந்தத் துறைமுகப் பட்டினங்களுக்கு இடையே வேறு சில துறைமுகப் பட்டினங்களும் அக்காலத்தில் இருந்திருக்கக் கூடும். அவற்றைப் பற்றி இப்போது நமக்குத் தெரியவில்லை.

அக்காலத்துத் தமிழகத்தின் துறைமுகப் பட்டினங் களைக் கூறுவோம்.

## கிழக்குக்கரைத் துறைமுகங்கள்

தமிழகத்தின் கிழக்குக் கரையிலிருந்த பழங்காலத் துறை முகப் பட்டினங்களைக் கூறுவோம். இவை குணகடலில் (வங்காளக் குடாக்கடலில்) இருந்தவை. அந்தத் துறை முகப் பட்டினங்கள் பிற்காலத்தில் மறைந்துபோய் விட்டன. (வேறு புதிய துறைமுகங்கள் ஏற்பட்டுள்ளன.) பழைய துறைமுகப் பட்டினங்களைப் பற்றிப் பழங்கால இலக்கிய நூல்களிலிருந்து அறிகிறோம். தமிழ் நாட்டின் கிழக்குக் கரைத் துறைமுகங்கள் கொல்லத் துறை, எயிற் பட்டினம் (சோபட்டினம்), அரிக்கமேடு, காவிரிப்பூம் பட்டினம், தொண்டி, மருங்கை, கொற்கை என்பவை. தமிழ்நாட்டுக்கு அருகிலுள்ள இலங்கைத் தீவுடன் அக்காலத் தில் தமிழர் வாணிகம் செய்தபடியால் அங்கிருந்த முக்கியத் துறைமுகப் பட்டினங்களையும் இங்குக் கூறுவோம்: அவை மணிபல்லவம் (ஜம்பு கொலப்பட்டினம்), திருக்கே தீச்சரம் என்பவை.

தமிழகத்தின் தெற்கே கன்னியாகுமரியில் குமரித் துறை முகம் இருந்தது. இந்தத் துறைமுகங்களை விளக்கிக் கூறுவோம்.

## கொல்லத் துறை

கொல்லத்துறை என்னும் துறைமுகப் பட்டினம் வட பெண்ணையாற்றின் தென்கரையில் அந்த ஆறு கடலில் கலக்

கிற முகத்துவாரத்தில் இருந்தது. இதற்கு மேற்கே நெல்லூர் வட பெண்ணையாற்றின் கரைமேல் இருக்கிறது. இக்காலத்தில் இவை ஆந்திர தேசத்தைச் சேர்ந்து இருக்கின்றன. ஆனால் பழங்காலத்தில் கடைச்சங்க காலத்திலேயும் இவை தமிழ்நாடாக இருந்தன. அக்காலத்தில் இது தொண்டை நாட்டுத் துறைமுகப் பட்டினமாக இருந்தது. கொல்லத்துறை, நெல்லூர், பெண்ணையாறு என்னும் பெயர்களே தமிழ்ப் பெயர்களாக இருந்தன. கொல்லத்துறை பழந்தமிழ் நாட்டின் வட கோடியில் கிழக்குக் கரையில் இருந்தது. கொல்லத்துறை என்னும் பெயர் கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் கண்டகோபால பட்டினம் என்று பெயர் மாற்றப்பட்டது. ஆனாலும் அதன் பழைய பெயர் மறைந்துவிடவில்லை. கொல்லத்துறையான கண்டகோபால பட்டினம் என்று அது கல்வெட்டுச் சாசனங்களில் கூறப்படுகின்றது.

தமிழ் நாட்டின் வட எல்லை வேங்கடமலை (திருப்பதி மலை) என்று பழந்தமிழ் நூல்கள் கூறினாலும் அதன் சரியான வட எல்லை வடபெண்ணையாறே. ஆற்றைக் கூறாமல் மலையை எல்லையாகக் கூறியதன் காரணம் அது மலை என்பதற்காகவே. பழந்தமிழ் நாட்டின் வடஎல்லை வட பெண்ணையாற்றின் தென்கரையாக இருந்தது. தொண்டை நாட்டின் (அருவா நாட்டின்) இருபத்து நான்கு கோட்டங்களில் வட கோடிக் கோட்டமாக இருந்த பையூர் இளங்கோட்டம் வட பெண்ணையாற்றின் தென்கரையில் இருந்தது என்பதைக் கல்வெட்டெழுத்துச் சாசனங்களில் அறியப்படுகின்றது. பழந்தமிழ் நாட்டின் வட எல்லைக்கும் பழைய ஆந்திர நாட்டின் தென் எல்லைக்கும் வரம்பாக வடபெண்ணையாறு அமைந்து இருந்தது. வடபெண்ணையாற்றின் முகத்துவாரத்தில் தென்கரை மேல் இருந்த கொல்லத்துறை அக்காலத்தில் தமிழ்நாட்டைச் சேர்ந்த துறைமுகப் பட்டினமாக இருந்தது.

கொல்லத்துறை துறைமுகத்தைப் பற்றிச் சங்கச் செய்யுட்களில் கூறப்படவில்லை. எல்லாத் துறைகளையும்

கூறுவது அச்செய்யுட்கள் இயற்றப்பட்டதன் நோக்கமும் அன்று. தற்செயலாகத் தமிழகத்தின் சில துறைமுகப் பட்டினங்களை அச்செய்யுட்களில் சில கூறுகின்றன. அச் செய்யுட்கள் கூறாத வேறு சில துறைமுகப் பட்டினங்களும் இருந்தன. உதாரணமாக எயிற் பட்டினமாகிய சோ பட் டினத்துக்கும் (இப்போதைய மரக்காணம்) காவிரிப்பூம் பட்டினத்துக்கும் இடையில் ஒரு துறைமுகமும் யவனரின் பண்டகசாலையும் இருந்தன. சோ பட்டினத்தையும் காவிரிப் பூம்பட்டினத்தையும் கூறுகிற சங்கச் செய்யுட்கள் இந்தத் துறைமுகத்தைக் கூறவில்லை. ஆனால், பெரிப்ளூஸ் என்னும் கிரேக்க நூலில் இந்தத் துறைமுகம் கூறப்பட்டுள்ளது. இத் துறைமுகத்தை அந்நூல் போதவுகே (Poduke) என்று கூறுகிறது. புதுச்சேரிக்குத் தெற்கேயுள்ள அரிக்கமேடு என்னும் மண்மேட்டை 1945 இல் தொல்பொருள் ஆய் வாளர் அகழ்ந்து பார்த்தபோது அங்குக் கி.பி. முதல் நூற்றாண்டில் செய்யப்பட்ட பொருள்களும் யவனர் (கிரேக்க-ரோமர்)களின் அக்காலத்துப் பொருள்களும் கிடைத்தன. அந்த இடம் அக்காலத்தில் துறைமுகமாகவும் பண்டகசாலை யாகவும் இருந்தது என்பது வெளியாயிற்று. பெரிப்ளூஸ் நூல் கூறுகிற 'போதவுகே' துறைமுகம் இதுதான் என்பதும் இப்போது அறியப்படுகிறது. ஆகவே, சங்கச் செய்யுட் களில் கூறப்படாத வேறு சில துறைமுகப்பட்டினங்களும் இருந்தன என்பதும் அவற்றில் கொல்லத்துறையும் ஒன்று என்பதும் தெரிகின்றது.

கொல்லத்துறை கடைச்சங்க காலத்தில் சிறந்த துறை முகப்பட்டினமாக இருந்தது. அங்குக் கடல் வாணிகமும் நடைபெற்றது. யவனர் கப்பல்களில் வந்து அங்கு வாணி கம் செய்தார்கள். அதற்குச் சான்றாக, அத்துறைக்கு மேற்கேயுள்ள பழைய பட்டினமாகிய நெல்லூரில் கிடைத்த உரோம் தேசத்துப் பழங்காசுகள் கிடைத்துள்ளன. உரோம் தேசத்துப் பழங்காசுகள் அடங்கிய ஒரு பானைப் புதையல் அங்கிருந்து கண்டெடுக்கப்பட்டது. கொல்லத்துறைத் துறைமுகத்துக்கு அருகிலேயுள்ள நெல்லூரில் கிடைத்த

இந்தப் புதையல் அக்காலத்தில் யவன வாணிகர் இங்கு வந்து வாணிகஞ் செய்ததைத் தெரிவிக்கிறது.*

தொல் பொருள் ஆய்வாளர் அரிக்கமேட்டை அகழ்ந்து பார்த்துக் கண்டுபிடித்ததுபோல, கொல்லத் துறையான இவ்விடத்தையும் அகழ்ந்து பார்த்தால் இங்கும் பழைய பொருள்கள் கிடைக்கக்கூடும். கிடைக்கும் பொருள்களி லிருந்து வரலாற்றுச் செய்திகளை அறிய இயலும். இது வரையில் இங்கு அகழ்வாராய்ச்சி நடக்கவில்லை. தொல் பொருள் ஆய்வாளர் இனியேனும் இந்த இடத்தை அகழ்ந்து ஆராய வேண்டும்.

## எயிற் பட்டினம் (சோ பட்டினம்)

சங்க காலத்திலே தொண்டை நாட்டில் முக்கியத் துறைமுகப் பட்டினமாக இருந்தது எயிற் பட்டினம். இதற்குச் சோ பட்டினம் என்றும் பெயர் இருந்தது. எயில் என்ருலும் சோ என்ருலும் மதில் என்பது பொருள். இந்தத் துறை முகப்பட்டினத்தைச் சூழ்ந்து மதில் இருந்தபடியால் இப் பெயர் பெற்றது. இது பிற்காலத்தில் மரக்காணம் என்று பெயர் பெற்றது. பெரிப்ளூஸ் என்னும் கிரேக்க மொழி நூல் இந்தப் பட்டினத்தைச் 'சோ பட்மா' என்று கூறு கிறது. சோ பட்மா என்பது சோ பட்டினம் என்பதன் மரூஉ.

இடைகழி நாட்டு நல்லூர் நத்தத்தனர் தாம் பாடிய சிறுபாணுற்றுப் படையில் இந்தப் பட்டினத்தைக் குறிப் பிடுகிருர். ''மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய, பனி நீர்ப் படுவிற் பட்டினம்'' (சிறுபாண், 152-153) என்று கூறுகிருர்.

'ஓங்கு நிலை யொட்டகம் துயில் மடிந்தன்ன
வீங்குதிரை கொணர்ந்த விரைமா விறகு'

என்று (சிறுபாண், 154-155). இவர் கூறியபடியால் விரை மரம் (அகில் கட்டை) இங்கு இறக்குமதியான பொருள் களில் ஒன்று என்று தெரிகிறது. இந்த விரை மரம், கடலில்

* Hoard of Roman Coins in a Pot. Latest record of Coin of Antonius Piu (S. A. D. 161) Asiatic Researches, II. (1970, pp. 331-32.

இருந்து வந்தது என்று கூறுகின்றபடியால் இது சாவக நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்டது என்பது தெரிகிறது. அகிற் கட்டை, சந்தனக் கட்டை முதலான பொருள்கள் அக்காலத்தில் சாவக நாட்டிலிருந்து வந்தன. முடிச்சு உள்ள அகில் மரக்கட்டை, படுத்துத் தூங்கும் ஒட்டகம் போன்ற உருவமாக இருந்தது என்று கூறுகிறார்.

'வாளை லுப் புரவியொடு வடவளம் தரூஉம்
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படைப்பை
மாடமோங்கிய மணல் மலி மறுகில்
பரதர் மலித்த பல்வேறு தெருவில்'
(பெரும்பாண், 320-323)

என்று கடியலூர் உருத்திரங் கண்ணனூர் பாடுகிறார். இதனால், இத்துறைமுகப் பட்டினத்தில் நாவாய்களில் வந்து இறங்கின பொருள்களில் குதிரைகளும் வடஇந்தியப் பொருள்களும் இருந்தன என்று கூறுகிறார். வடவளம் (வடநாட்டுப் பொருள்கள்) இன்னவை என்று இவர் கூறவில்லை. பரதர் (கப்பலோட்டிகள்) மலிந்த தெருக்கள் இங்கு இருந்தன என்று கூறுகிறபடியால் கப்பல் வாணிபம் இங்குச் சிறப்பாக நடந்தமை தெரிகிறது. இங்கிருந்த கலங்கரை விளக்கைக் கடியலூர் உருத்திரங் கண்ணனூர் சிறப்பாகக் கூறுகிறார். (பட்டினப்பாலையில் காவிரிப்பூம் பட்டினத்தைப் பாடினவரும் இவரே). கடலில் ஓடுகிற கப்பல்கள் இராக் காலத்தில் துறைமுகம் உள்ள இடத்தையறிந்து கரை சேர்வதற்காகக் கலங்கரை விளக்குகள் துறைமுகங்களில் அமைப்பது வழக்கம் (கலம் = மரக்கலம், நாவாய். கரை = அழைக்கிற, கூவுகிற. விளக்கம் = விளக்கு நிலையம்). எயிற் பட்டினத் துறைமுகத்திலிருந்த கலங்கரை விளக்கை இவர் இவ்வாறு கூறுகிறார்.

'வானம் ஊன்றிய மதலை போல
ஏணி சாத்தியை வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்து
இரவின் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி
உரவுநீர் அழுவத்து ஒடுகலம் கரையும் துறை'
(பெரும்பாண், 346-350)

கலங்கரை விளக்கு நிலையம் உயரமான கட்டடமாக (வானம் ஊன்றிய மதலை போல) இருந்தது. அது சாந்து (சுண்ணம்) பூசப்பட்டு தள வரிசையுள்ளதாக (வேயா மாடமாக) இருந்தது. அதன் உச்சியில் இராக் காலத்தில் தீயிட்டு எரித்தார்கள். உச்சியில் ஏறி விளக்கு ஏற்றுவதற்கு (தீ ஏற்றுவதற்கு) ஏணிப்படிகள் இருந்தன. இவ்வாறு கலங்கரை விளக்கின் அமைப்பு கூறப்படுகின்றது.

காவிரிப்பூம் பட்டினத்தின் துறைமுகத்திலும் அக் காலத்தில் கலங்கரை விளக்கு நிலையம் கட்டப்பட்டிருந் ததை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் கூறுகிறார். 'இலங்கு நீர் வரைப்பில் கலங்கரை விளக்கம்' (கடலாடு காதை, 141) இதற்குப் பழைய அரும்பத உரையாசிரியர் பொருள் கூறுவது இது. 'கலங்கரை விளக்கம்—திக்குக் குறிகாட்டிக் கலத்தை (நாவாய்களை) அழைக்கிற விளக்கம்' இன்னொரு உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார், 'நிலையறியாது ஓடுங் கலங்களை அழைத்தற்கு இட்ட விளக்கு' என்று உரை எழுதியுள்ளார்.

துறைமுகங்கள் தோறும் கலங்கரை விளக்கங்கள் கட்டப் பட்டிருந்தன. அவை உயரமாக மணல் மேட்டின் மேல் கட்டப்பட்டிருந்தன. மீகாமர் கலங்கரை விளக்கின் உதவி யினால் மரக்கலங்களை இராக் காலத்தில் துறைமுகங்களுக்கு ஓட்டினார்கள். கலங்கரை விளக்குக்கு **மாடவெள்ளொரி** என்ற பெயரை மருதன் இளநாகனார் கூறுகிறார்.

> 'உலகுகிளர்ந் தன்ன உருகெழுவங்கம்
> புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
> இரவும் எல்லையும் அசைவின் றாகி
> விரை செலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்
> கோடுயர் திணிமணல் அகன்றுறை நீகான்
> மாடவெள்ளொரி மருங்கறிந்து ஒய்யா'
>
> (அகம், 255: 1-6)

இதனால் எயிற் பட்டினம் முதலான துறைமுகங்களில் கலங் கரை விளக்குகள் இருந்தமை தெரிகிறது. எயிற் பட்டினத் துறைமுகத்தைப் பற்றி வேறு ஒன்றும் தெரியவில்லை.

## அரிக்கமேடு (போதவுகே)

எயிற் பட்டினத்துக்கு (மரக்காணத்துக்கு)த் தெற்கே ஒரு துறைமுகம் சங்க காலத்தில் இருந்தது. அது இப் போதைய புதுச்சேரிக்குத் தெற்கே இரண்டு மைல் தூரத்தில் இருந்தது. அதன் பெயர் இன்னதென்று தெரியவில்லை. சங்கச் செய்யுட்களிலும் அத்துறைமுகத்தைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. இப்போது அந்த இடம் அரிக்கமேடு என்று கூறப்படுகிறது. அது, கி.பி. முதல் நூற்றாண்டில் தமிழகத் துக்கு வந்து வாணிகம் செய்த யவனருடைய பண்டக சாலையாக இருக்க வேண்டும் என்று சமீப காலத்தில் நடந்த அகழ்வாராய்ச்சியினால் தெரிகிறது. பெரிப்ளூஸ் என்னும் கிரேக்க நூல், தமிழ் நாட்டின் கிழக்குக் கரையில் காமரா வுக்கு (காவிரிப்பூம்பட்டினத்துக்கு) வடக்கே 60 மைல் தூரத்தில் போதவுகே (Podouke) என்னும் பட்டினத்தைக் குறிக்கிறது. அந்தப் போதவுகே இந்த அரிக்கமேடாக இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. உரோம் சாம்ராச்சி யத்தை ஆட்சி செய்த அகுஸ்தஸ் (கி.மு. 23-க்கும் கி.பி. 14-க்கும் இடையில் அரசாண்டவன்) காலத்தில் தமிழ் நாட்டுக்கும் ரோமாபுரிக்கும் கடல் வாணிகம் விரிவாக்கப் பட்டது. அக்காலத்தில் அரிக்கமேடு, யவன வாணிகரின் பண்டக சாலையாக அமைந்திருக்க வேண்டும் என்று தோன்று கிறது. சங்க காலத்தின் இறுதியில் கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் சிறப்பாக இருந்த இந்தத் துறைமுகம் பிற்காலத்தில் மண்மூடி மறைந்து போயிற்று. சமீப காலத் தில் 1945 இல் இந்த இடம் தொல்பொருள் ஆய்வுத் துறை யினரால் அகழ்ந்தெடுக்கப்பட்டு ஆராயப்பட்டது. இங்கே கிடைத்த பல பொருள்களிலிருந்து இந்த இடம் கி.பி. முதல் நூற்றாண்டில் யவனருடைய பண்டகசாலையாக இருந்த தென்பது தெரிகிறது.

கி.பி. 45-க்கும் 50-க்கும் இடைப்பட்ட காலத்தில் செய்யப்பட்டு, மத்திய தரைக்கடல் நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட பாண்டங்களும், அம்போரெ என்னும் மது (ஒயின்) வைக்கும் சாடிகளும் இங்குக் கண்டெடுக்கப்

பட்டன. இவை உடைந்து கிடந்தன. அக்காலத்து அரசர், யவனர் கொண்டுவந்த மதுபானத்தை யருந்திஞர்கள் என்பது நக்கீரர் பாட்டிஞல் தெரிகிறது. பாண்டியன் இல வந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனே அவர் இவ்வாறு வாழ்த்துகிருர்.

'யவனர், நன்கலம் தந்ததண் கமழ்தேறல்
பொன்செய் புனேகலத் தேந்தி நாளும்
ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ் சிறந்து
ஆங்கினி தொழுகுமதி ஓங்குவாள் மாற'
(புறம், 56: 18-21)

நக்கீரர், யவனர் கொண்டுவந்த 'தண்கமழ் தேறலே'க் கூறுவதற்கு ஏற்பவே யவனருடைய மதுச்சாடிகள் அரிக்க மேட்டு அகழ்வாராய்ச்சியில் அகப்பட்டுள்ளன.

சிவப்புக் களிமண்ணுல் செய்யப்பட்ட யவன விளக்கின் உடைந்த துண்டுகளும் அரிக்கமேட்டில் கண்டெடுக்கப் பட்டன. சங்க இலக்கியங்களிலே யவன விளக்குகள் கூறப் படுகின்றன. யவன விளக்கை நக்கீரர் கூறுகிருர்.

'யவனர் இயற்றிய வினைமான் பாவை
கையேந் தையகல் நிறைய நெய் சொரிந்து
பரூஉத் திரி கொளீய குரூஉத்தலே நிமிர்ஒளி'
(நெடுநல்வாடை, 101-103)

என்று பாவை விளக்கைக் கூறுகிருர்.

கடியலூர் உருத்திரங் கண்ணஞர் 'யவனர் ஓதிம விளக்'கைக் கூறுகிருர். ஓதிம விளக்கு என்பது அன்னப் பறவையின் உருவம் போன்றது. மீன்குத்திப் பறவை வேள்வித் துணிகள் மேல் அமர்ந்திருப்பது 'யவனருடைய ஓதிம விளக்கு' போல இருந்தது என்று உருத்திரங் கண்ண ஞர் கூறுகின்ருர் (பெரும்பாணுற்றுப்படை, 311-318). ஆஞல் அரிக்கமேட்டு அகழ்வாராய்ச்சியில் கிடைத்த யவனர் விளக்குத்துண்டு யவனருடைய பாவை விளக்கும் அன்று; ஓதிம விளக்கும் அன்று. அது சாதாரணமான கைவிளக்கின் உடைந்த பகுதி. இந்த விளக்கு கி.பி. முதல் நூற்ருண்டில் செய்யப்பட்டது.

அரிக்கமேடு துறைமுகப் பண்டகசாலை கி.பி. முதல் நூற்றாண்டில் இருந்தது என்பதற்கு மற்றொரு சான்று அங்குக் கிடைத்த மட்பாண்ட ஓட்டில் எழுதியுள்ள பிராமி எழுத்துகள். தமிழ் நாட்டில் செய்யப்பட்ட அக்காலத்து மட்பாண்டங்களின் உடைந்த ஓடுகள் அங்குக் கிடைத்தன. அவ்வோடுகளில் சிலவற்றின் மேல் பிராமி எழுத்து எழுதப் பட்டுள்ளன. பிராமி எழுத்துக்கள் கடைச்சங்க காலத்தில் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 2 ஆம் நூற் றாண்டு வரையில் வழங்கி வந்தன. அரிக்கமேட்டில் கிடைத்த பானையோடுகளில் பிராமி எழுத்து எழுதப்பட்டிருப்பதனால் அவை கி.பி. முதல் நூற்றாண்டில் செய்யப்பட்ட பானைகள் என்பது தெரிகின்றது. இவ்வாறு, அரிக்கமேடு கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்த துறைமுகப் பண்டகசாலை என்பதற்குச் சான்றுகள் காணப்படுகின்றன. இது பற்றி விரிவாக அறிய விரும்புவோர், 'ஏன்ஷியன்ட் இந்தியா' என்னும் வெளி யீட்டின் இரண்டாவது எண்ணில் (பக்கம் 17 முதல் 124) கண்டு கொள்க.*

## காவிரிப்பூம் பட்டினம்

சங்க காலத்திலே சோழ நாட்டில் காவிரியாறு கடலில் கலக்கிற புகார்முகத்தில் இருந்த காவிரிப்பூம் பட்டினம் அக் காலத்திலே உலகப்புகழ் பெற்றிருந்தது. காவிரிப்பூம் பட்டினத்துக்குப் புகார் என்னும் பெயர் உண்டு. பழைய பௌத்த மத நூல்களில் இது கவிரபட்டனம் என்று பெயர் கூறப்படுகிறது. காகந்தி என்றும் இதற்கு ஒரு பழைய பெயர் உண்டு. கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் உரோமாபுரியிலிருந்து யவன வணிகர் இங்கு வந்து வாணிகம் செய்தார்கள். தூரக் கிழக்கிலிருந்தும் (சாவக நாட்டி லிருந்தும்) வட இந்தியாவிலிருந்தும் கப்பல் வாணிகர் இங்கு வந்து வாணிகம் செய்தார்கள். சோழ நாட்டுக் கப்பல் வாணிகர் இந்தத் துறைமுகத்திலிருந்து புறப்பட்டு சாவக நாடு, காழகம், கங்கைத் துறைமுகம் முதலான இடங்களுக்

---

* Arikamedu: 'An Indo-Roman Trading-station on the east Coast of India.' PP. 17-124. **Ancient India.** Number 2. July 1946.

குச் சென்று வாணிகம் செய்தார்கள். பெரிப்ளூஸ் என்னும் கிரேக்க நூலில் இந்தத் துறைமுகம் கமரா என்று கூறப்படு கிறது. கமரா என்பது காவிரிப்பூம் பட்டினம் என்பதன் சுருக்கமாகும். தாலமி என்றும் கிரேக்க யவனர் இத்துறை முகத்தைச் சபரிஸ் துறைமுகம் என்று கூறுகின்றார். சபரிஸ் என்பது காவிரி என்பதன் திரிபு.

சோழ நாட்டின் முக்கியமான துறைமுகப் பட்டின மாகையால் காவிரிப்பூம்பட்டினத்தில் சோழ இளவரசர்கள் வாழ்ந்திருந்தார்கள். கரிகாற் சோழனுக்குப் பிறகு இருந்த கிள்ளிவளவன் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தான். இவன் காலத்தில் இப்பட்டினத்தில் சிலப்பதிகாரம், மணி மேகலை என்னும் காவியங்களின் தலைவர்களான கோவலன், கண்ணகி, மாதவி, மணிமேகலை ஆகியோர் வாழ்ந்திருந் தார்கள். பேர்போன பௌத்த மதத் தலைவராகிய அறவண அடிகளும் அக்காலத்தில் இப்பட்டினத்தில் இருந்தார்.

காவிரி ஆறு கடலில் கலக்கிற புகர் முகத்தில் அவ் வாற்றின் வடகரை மேல் காவிரிப்பூம்பட்டினம் அமைந் திருந்தது. இப்பட்டினம் மருவூர்ப்பாக்கம் பட்டினப் பாக்கம் என்று இரண்டு கூறுகப் பிரிந்திருந்தது. இரண்டு பிரிவுக்கும் இடை நடுவில் நாளங்காடி என்னும் தோட்டம் இருந்தது. கடற்கரை யோரமாகக் காவிரி ஆற்றின் கரை மேல் கலங்கரை விளக்கம் அமைந்திருந்தது. கலங்கரை விளக்குக்கு அருகில் கப்பல்கள் வந்து தங்கிய துறைமுகம் இருந்தது. இங்கு ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்டன. ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களுக்குச் சோழ அரசனு டைய அலுவலர்கள் சுங்கம் வாங்கினார்கள். சுங்கம் வாங் கினதற்கு அடையாளமாக அப்பொருள்களின் மேலே சோழ அரசனுடைய புலி முத்திரையைப் பொறித்தார்கள். இதைப் பட்டினப்பாலை கூறுகிறது.

''நல் இறைவன் பொருள் காக்கும், தொல்லிசைத் தொழில் மாக்கள் ........வைகல் தொறும் அசைவின்றி, உல்கு செயக் குறைபடாது........நீரினின்று நிலத் தேற்றவும், நிலத்தினின்று நீர்ப்பரப்பவும், அளந்தறியாப்

பலபண்டம், வரம்பறியாமை வந்தீண்டி, அருங்கடிப் பெருங்காப்பின், வலியுடை வல்லணங்கினோன், புலி பொறித்துப் புறம் போக்கி, மதிநிறைந்த மலி பண்டம்'' (பட்டினப்பாலை, 120-136) (உல்கு-சுங்கவரி).

காவிரியாற்றின் முகத்துவாரம் ஆழமாகவும் அகலமாகவும் பல கப்பல்கள் தங்குவதற்கு ஏற்றதாகவும் இருந்தது. வாணிகக் கப்பல்கள் பாய்களைச் சுருட்டாமலும் பாரத்தைக் கழிக்காமலும் நேரே ஆற்றினுள் புகுந்து துறை முகத்தையடைந்தன.

'கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம், தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியுங்
கடற்பல தாரத்த நாடுகிழ வோயே'

(புறம், 30)

என்று உறையூர் முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளியைப் புகழ்கிறார். துறைமுகத்தில் வந்து தங்கிய நாவாய்கள் (கப்பல்கள்), யானைப் பந்தியில் நிற்கும் யானைகள் அசைந்து கொண்டு நிற்பனபோல, அசைந்து கொண்டிருந்தன. பாய்மரத்தின் மேலே கொடிகள் பறந்தன.

'வெளில் இளங்கும் களிறு போலத்
தீம்புகார்த் திரை முன்துறைத்
தூங்கு நாவாய் துவன்றிருக்கை
மிசைக் கூம்பின் நசைக் கொடி'

(பட்டினப்பாலை, 172-175)

துறைமுகத்தையடுத்த மருவூர்ப்பாக்கத்தில் அயல் நாடுகளிலிருந்து கப்பல் ஓட்டி வந்த மாலுமிகளும், கப்பலோட்டிகளும் கடற்கரைப் பக்கத்தில் தங்கியிருந்தார்கள். அவர்கள் வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்தபடியால் வெவ்வேறு மொழிகளைப் பேசினார்கள். அவர்களில் யவனரும் (கிரேக்கர்) இருந்தார்கள்.

'மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்'
(பட்டினப்பாலை, 216-218)

என்று பட்டினப்பாலை கூறுகின்றது.

'கலந்தரு திருவில் புலம்பெயர் மாக்கள்
கலந்தினி துறையும் இலங்குநீர் வரைப்பு'
(5: 11-12)

என்று சிலப்பதிகாரமுங் கூறுகின்றது. (கலம்-மரக்கலம். புலம்பெயர் மாக்கள்-அயல் நாடுகளிலிருந்து வந்த கப்பலோட்டிகள்).

'கலந்தரு திருவிற் புலம் பெயர் மாக்கள்
வேலை வாலுகத்து விரிதிரைப் பரப்பு''
(சிலம்பு, 6:130-131)

(கலம்-மரக்கலம், நாவாய்; புலம் பெயர் மாக்கள்-வெளி நாட்டிலிருந்து வந்த கப்பலோட்டிகள்; வாலுகம்-மணல்.)

இவர்களை மணிமேகலை, ''பரந்தொருங் கீண்டிய பாடை மாக்கள்'' என்று கூறுகின்றது (1:16). அவர்கள் தங்கி யிருந்த வீடுகளில் இரவு முழுவதும் விளக்கு எரிந்தது. ''மொழிபெயர்தே எத்தோர் ஒழியா விளக்கம்.'' (சிலம்பு, 6:143) (ஒழியாவிளக்கு-விடிவிளக்கு) வெளிநாட்டுக் கப்பலோட்டிகளோடு யவனர்களும் (கிரேக்கர், ரோமர்) தங்கி யிருந்தார்கள்.

'கயவாய் மருங்கில் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவனர் இருக்கையும்'
(சிலம்பு, 5:9-10)

இப்படிப்பட்ட சிறந்த பட்டினத்தில் தமிழ் நாட்டுக் கப்பல் வாணிகர் பலர் இருந்தார்கள். பல கப்பல்களை யுடைய பெரிய கடல் வாணிகருக்கு மாநாவிகர் என்று பெயர் கூறப்பட்டது (நாவிகர்-கப்பலையுடையவர். நாவாய்-கப்பல்). மாநாவிகர் என்னும் சொல் திரிந்து மாநாய்கர் என்று வழங்கப்பட்டது. கண்ணகியின் தந்தை ஒரு

மாநாவிகன் (மாநாய்கன்). கோவலனுடைய தந்தை ஒரு பெரிய மாசாத்துவன் (சாத்து-வாணிகச் சாத்து, வாணிகக் குழு. தரை வாணிகக் குழுவுக்குச் சாத்து என்பது பெயர். சாத்து வாணிகன் ஆகையால் மாசாத்துவன் எனப்பட்டான்).

அந்தக் காலத்திலே காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் வந்து இறங்கின பொருள்களைக் கடியலூர் உருத்திரங் கண்ணனுர் கூறுகிறுர். இந்தப் பொருள்கள் வெளிநாடுகளிலிருந்து கடல் வழியாகக் கப்பல்களில் வந்தவை.

> 'நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
> காலின் வந்த கருங்கறி மூடையும்
> வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
> குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
> தெறிகடல் முத்தும் குணகடல் துகிரும்
> கங்கை வாரியும் காவிரிப் பயனும்
> ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
> அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
> வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு'
>
> (பட்டினப்பாலை, 185-193)

இவற்றை ஆராய்வோம். பரிப்புரவிகள் (குதிரைகள்) கடல் வழியாகக் கப்பல்களில் வந்து இறங்கின. குதிரை தமிழ் நாட்டுக்கோ அல்லது பாரத நாட்டுக்கோ உரிய விலங்கு அன்று. அவை பாரசீகம், சிந்து தேசம் முதலான நாடுகளிலிருந்து கப்பல் வழியாகக் கொண்டு வரப்பட்டவை. அக்காலத்து அரசர்கள் நான்கு வகையான படைகளை வைத்திருந்தார்கள். அப்படைகளில் குதிரைப் படையும் ஒன்று. தேர்ப்படைக்கும் குதிரை தேவைப்பட்டது. ஆகவே வெளி நாடுகளிலிருந்து குதிரைகள் கடல் வழியாகக் கொண்டு வரப்பட்டன. காவிரிப்பூம் பட்டினத்தில் குதிரைகளும் இறக்குமதியாயின என்பது இதனுல் தெரிகின்றது. தமிழ வாணிகர் குதிரைகளை இலங்கைக்குக் கொண்டுபோய் விற்றுர்கள். கி.மு. இரண்டாம் நூற்றுண்டில் சேனன், குட்டகன் என்னும் இரண்டு தமிழர் இலங்கையரசனை வென்று

இருபது ஆண்டு இலங்கையை யரசாண்டார்கள் என்றும் அவர்கள் அஸ்ஸ (அசுவ-அசுவம்-குதிரை) வாணிகனின் மக்கள் என்றும் மகாவம்சம் என்னும் சிங்கள நாட்டு வரலாற்று நூல் கூறுகின்றது. சூரதிஸ்ஸன் என்னும் சிங்கள அரசன் இலங்கையை அரசாண்ட காலத்திலே சேனன், குட்டகன் என்னும் பெயருள்ள இரண்டு தமிழர் சூரதிஸ்ஸனை வென்று அரசாட்சியைக் கைப்பற்றி அனுராதபுரத்திலிருந்து நீதியோடு இருபத்தி இரண்டு ஆண்டுகள் அரசாண்டார்கள். இவர்கள் அஸ்ஸ (அசுவ) நாவிகனின் மக்கள் என்று மகாவம்சம் (XXI; 10-11) கூறுகிறது. இவர்கள் கி.மு. 177 முதல் 155 வரையில் இலங்கையை அரசாண்டார்கள்.

காலின் வந்த கருங்கறி மூடையும் என்பது காற்றின் உதவியினால் கப்பல்களில் கடல் வழியாகக் கொண்டுவரப் பட்ட கறி (மிளகு) மூட்டை. அக்காலத்தில் சிறந்த மிளகு சேர நாட்டு மலைச் சரிவுகளில்தான் உண்டாயிற்று. அதற்கு அடுத்தபடியாகச் சாவக நாட்டில் (ஜாவா சுமத்ரா தீவு களில்) மிளகு உண்டாயிற்று. ஆனால், சாவக நாட்டு மிளகு சேரநாட்டு மிளகைப் போல அவ்வளவு சிறந்ததன்று. சேர நாட்டு மிளகை யவனர்கள் பெரிய நாவாய்களில் வந்து பெருவாரியாக வாங்கிக் கொண்டு போனபடியால் அது பற்றாக்குறைப் பொருளாக இருந்தது. ஆகவே கிழக்குக் கரைப் பக்கத்திலிருந்த சோழ நாட்டு வாணிகர் சாவக நாட்டிலிருந்து மிளகைக் கொண்டு வந்து விற்றார்கள். இந்த மிளகைத்தான் 'காலின் வந்த கருங்கறி மூடை' என்று கூறப்பட்டது. (கால்-காற்று, காலின் வந்த-காற்றின் உதவியினால் கப்பலில் வந்த.)

வடமலைப் பிறந்த மணியும் பொன்னும் என்பன இமய மலைப் பக்கத்தில் கிடைத்த மணியும் பொன்னும். இவை வட இந்தியாவிலிருந்து கங்கையாற்றின் முகத்துவாரத்தின் வழியாகக் கடலில் வந்தவை.

குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும் என்பன மேற்குத் தொடர்ச்சி மலைகளில் (சைய மலைகள்) உண்டான சந்தனக் கட்டை, அகிற் கட்டையாகும். இவை தெய்வங்களுக்கும் மகளிர் கூந்தலை உலர்த்துவதற்கும் அக்காலத்தில் பெரிதும்

உபயோகப்பட்டவை. சந்தனம் சாந்தாக அரைக்கப்பட்டு உடம்பில் பூசப்பட்டது. இவை மேற்குத் தொடர்ச்சி மலைகளில் கிடைத்தன. (இவையல்லாமல் ஆரமும் அகிலும் சாவக நாட்டிலிருந்தும் கொண்டு வரப்பட்டன.)

தென் கடல் முத்து என்பது பாண்டி நாட்டுக் கடல்களில் (கொற்கை, குமரி முதலான இடங்களில்) உண்டான முத்து, பாண்டி நாட்டுக் கொற்கை முத்து உலகப் புகழ் பெற்றது.

குணகடல் துகிர் என்பது கிழக்குக் கடலில் உண்டான பவழம். (துகிர்-பவழம். குணகடல்-கிழக்குக் கடல்) சாவக நாட்டில், பசிபிக் மாக்கடல்களில் பவழப் பூச்சிகளால் உண்டான பவழங்கள் அந்நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டன. (இவையல்லாமல் மத்திய தரைக் கடலில் உண்டான பவழங்களை யவன வாணிகரும் மேற்கிலிருந்து கொண்டு வந்தனர்).

கங்கை வாரி என்பது வடக்கே கங்கையாற்றங்கரை மேலிருந்த பாடலிபுரம், வாரணாசி (காசி) முதலான ஊர்களிலிருந்து கொண்டு வரப்பட்ட பொருள்கள். அப்பொருள்களின் பெயர் கூறப்படவில்லை. காவிரிப் பயன் என்பது காவிரியாறு பாய்கிற சோழ நாட்டுப் பொருள்கள். இவை உள்நாட்டுப் பொருள்கள். இவற்றின் பெயர் கூறப்படவில்லை, இவை ஏற்றுமதிக்காக இத்துறைமுகத்துக்குக் கொண்டு வரப்பட்டன.

ஈழத்து உணவு என்பது இலங்கையில் உண்டான உணவுப் பொருள்கள் (ஈழம்-இலங்கை). அந்த உணவுப் பொருள்களின் பெயரும் தெரியவில்லை.

காழகத்து ஆக்கம் என்பது காழகத்து (பர்மா தேசம்)ப் பொருள்கள். இவற்றின் பெயரும் கூறப்படவில்லை. அரியவும் பெரியவும் என்பது தமிழ் நாட்டில் கிடைத்தற்கு அருமையானவையும் விலையுயர்ந்தவையும் ஆன பொருள்கள்.

இவ்வாறு பல அயல்நாட்டுப் பொருள்கள் காவிரித் துறைமுகத்துக்குக் கொண்டு வரப்பட்டன என்பதைப் பழைய நூல்கள் கூறுகின்றன.

'மலைப்பண்ட முரமும் கடற்பண்ட முரமும்
வளம் தலை மயங்கிய துளங்குகல இலக்கை'

என்று சிலம்பு (6: 153-155) கூறுகிறது (தாரம்-பண்டங்கள்). மலையில் உண்டாகும் பொருள்களும் கடலில் உண்டாகும் பொருள்களும் இத்துறைமுகத்தில் இறக்குமதியாயின.

இவ்வாறு வாணிகப் புகழ் பெற்றிருந்த காவிரிப்பூம் பட்டினம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புயற் காற்றடித்து வெள்ளப் பெருக்கெடுத்து நீரில் முழுகி விட்டதை மணிமேகலை கூறுகிறது. ஆனல் இப்பட்டினம் அடியோடு முழுகிவிடவில்லை. வெள்ளம் வடிந்த பிறகு மீண்டும் இப்பட்டினம் நெடுங்காலம் பேர் பெற்றிருந்தது. கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் இருந்த பட்டினத்து அடிகள் (பட்டினத்துப் பிள்ளையார்) காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்தவர். அவர் துறவியாவதற்கு முன்பு இப்பட்டினத்தில் பேர்போன கப்பல் வாணிகனாக (மாநாய்கனாக) இருந்தார். பிற்காலச் சோழர் காலத்திலும் காவிரிப்பூம்பட்டினம் பேர் பெற்றிருந்தது. பிறகு இப்பெரிய பேர்போன பட்டினம் சிறப்புக் குன்றிச் சிறிது சிறிதாகப் பெருமை குறைந்து இப்போது குக்கிராமமாக இருக்கிறது. இங்கு அண்மையில் தொல்பொருள் துறை ஆய்வாளர் நிலத்தையகழ்ந்து பார்த்த போது பல பழம்பொருள்கள் கிடைத்தன. அவை இப்பட்டினத்தின் பழங்காலச் சிறப்புக்குச் சான்றாக இருக்கின்றன.

## தொண்டித் துறைமுகம்

சங்க காலத்திலே கிழக்குக் கரையிலும் மேற்குக் கரையிலும் இரண்டு தொண்டிப் பட்டினங்கள் இருந்தன. இரண்டும் துறைமுகப் பட்டினங்கள். ஒரு தொண்டி சேர நாட்டில் மேற்குக் கடற்கரையில் இருந்தது; மற்றொரு தொண்டி பாண்டி நாட்டில் கிழக்குக் கடற்கரையில் இருந்தது. இந்தத் தொண்டி கிழக்குக் கரையிலிருந்த பாண்டி நாட்டுத் தொண்டியாகும். கடைச் சங்க காலத்துப் புலவரான அம்மூவனார் ஐங்குறுநூற்றில் நெய்தற்றிணையில் தொண்டிப் பத்து என்னும் தலைப்பில் பத்துச் செய்யுட்களைப் பாடியுள்ளார். அது சேர நாட்டுத் தொண்டி.

அந்தப் புலவரே அகநானூறு பத்தாம் செய்யுளில் பாண்டி நாட்டுத் தொண்டியைப் பாடியுள்ளார். இந்தத் தொண்டியை இவர் இவ்வாறு கூறுகிறார்.

'கொண்டலொடு
குருஉத் திரைப் புணரி யுடைதரும் எக்கர்ப்
பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டு மணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி'

(அகம், 10: 8-13)

கிழக்குக் கடலிலிருந்து வீசுகிற கடற்காற்றுக்குக் கொண்டல் காற்று என்பது பெயர். இந்தத் தொண்டி கிழக்குக் கடற்கரையிலிருந்தது என்பதைக் கொண்டல் காற்று வீசுகிற தொண்டி என்று கூறுவதிலிருந்து அறிகிறோம். இந்தத் தொண்டி பாண்டி நாட்டில் இப்போதைய இராமநாதபுர மாவட்டத்தில் இருந்தது என்று தோன்றுகிறது.

இந்தத் தொண்டித் துறைமுகத்தைச் சிலப்பதிகாரக் காவியமும் கூறுகின்றது. கடல் கடந்த நாடுகளிலிருந்து அகிற் கட்டை, சந்தனக் கட்டை, பட்டுத்துணி, சாதிக்காய், இலவங்கம், குங்குமப்பூ, கருப்பூரம் முதலான வாசனைப் பொருள்களை ஏற்றி வந்த நாவாய்கள் கொண்டல் காற்றின் உதவியினால் தொண்டித் துறைமுகத்துக்கு வந்ததையும் இறக்குமதியான அந்தப் பொருள்களைத் தொண்டியிலிருந்து பாண்டியனின் தலைநகரான மதுரைக்கு அனுப்பப்பட்டதையும் சிலப்பதிகாரம் கூறுகிறது.

'ஓங்கிரும் பரப்பின்
வங்க ஈட்டத்துத் தொண்டியோர் இட்ட
அகிலும் துகிலும் ஆரமும் வாசமும்
தொடு கருப்பூரமும் சுமந்துடன் வந்த
கொண்டலொடு புகுந்து கோமகன் கூடல்
வெங்கண் நெடுவேள் வில்விழாக் காணும்
பங்குனி முயக்கத்துப் பனியரசு'

(ஊர் காண் காதை, 106-112)

இங்குக் குறிப்பிடப்பட்ட பொருள்கள் எல்லாம் கிழக்குக் கடலுக்கப்பால் கீழ்க்கோடி நாடுகளிலிருந்து வந்தவை. இந்தக் காலத்தில் இந்தோனேஷியா என்றும், கிழக்கிந்தியத் தீவுகள் என்றும் கூறப்படுகின்ற தீவுகள் அந்தக் காலத்தில் **சாவக நாடு** என்று கூறப்பட்டன. இங்குக் கூறப்பட்ட பொருள்கள் எல்லாம் அந்தக் காலத்தில் சாவக நாட்டுக்கேயுரியவை, இப்பொருள்கள் அந்தக் காலத்தில் வேறு எங்கும் கிடைக்காதவை. கீழ்க்கடல் தீவுகளிலிருந்து கொண்டு வரப்பட்டுத் தொண்டித் துறைமுகத்தில் இறக்குமதியான பொருள்கள் அகில், துகில், ஆரம், வாசம், கருப்பூரம் முதலானவை என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இவற்றை விளக்கிக் கூறுவோம்.

## அகில்

இது ஒருவகை மரத்தின் கட்டை. நெருப்பில் இட்டுப் புகைக்கப்படுவது; புகை மணமாக இருக்கும். கோவில்களில் தெய்வங்களுக்கு நறுமணம் புகைக்கவும், மகளிர் கூந்தலுக்குப் புகைத்து மணமேற்றவும் மற்றும் சிலவற்றுக்கும் உபயோகிக்கப்பட்டது. அகில் மரங்கள் தமிழ் நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலையிலும் இருந்தன. ஆனால் சாவக நாட்டு அகில் தரத்தில் உயர்ந்தது, பேர் போனது. கிழக்குக் கோடி நாடுகளிலிருந்து வந்த காரகில் சிறந்தது என்பதைச் சிலப்பதிகாரம் ''குண திசை மருங்கில் காரகில்'' என்று (சிலம்பு, 4.36) கூறுகின்றது.

## துகில்

துகில் என்பது இங்குப் பட்டுத் துணிகளைக் குறிக்கிறது. சங்க காலத்தில் பட்டுத் துணிகள் சீன நாட்டில் மட்டும் கிடைத்தன, அக்காலத்தில் பட்டு வேறு எங்கும் கிடைக்கவில்லை. சீனநாட்டு வாணிகர் பட்டு முதலான பொருள்களைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு வந்து சாவக நாட்டில் (கிழக்கிந்தியத் தீவுகளில்) விற்றார்கள். அக்காலத்தில் சீனர் தமிழ்நாட்டுக்கு வரவில்லை. சாவக நாட்டோடு நின்று விட்டார்கள். அவர்கள் சாவக நாட்டுக்குக் கொண்டு

வந்த பட்டுகளைத் தமிழ் நாட்டு வாணிகர் அங்கிருந்து கொண்டு வந்து தமிழ் நாட்டில் விற்றார்கள். தமிழ் நாட்டி லிருந்து பட்டுத் துணியை மேல்நாட்டு வாணிகர் வாங்கிக் கொண்டு போய் மேற்கு நாடுகளில் விற்றார்கள்.

## ஆரம்

ஆரம் என்பது சந்தனம். சந்தன மரம் தமிழ் நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலை (சய்ய மலை)களிலும் உண்டா யிற்று. ஆனால் இந்தச் சந்தனத்தைவிட சாவக நாட்டுச் சந்தனம் தரத்திலும் மணத்திலும் உயர்ந்தது. அது வெண் ணிறமாக இருந்தது. அகிற்கட்டையைப் போலவே சந்தனக் கட்டையும் சாவக நாட்டிலிருந்து அக்காலத்தில் இங்கு இறக்குமதியாயிற்று.

## வாசம்

வாசம் என்பது வாசனைப் பொருள்கள். அவை கிராம்பு (இலவங்கம்), குங்குமப்பூ, தக்கோலம், சாதிக்காய் முதலியவை. இந்த வாசப் பொருள்கள் அக்காலத்தில் சாவக நாட்டில் மட்டும் உண்டாயின; வேறெங்கும் இவை அக்காலத்தில் கிடைக்கவில்லை.

## கருப்பூரம்

கருப்பூரம் என்பது சாவக நாட்டில் சில இடங்களில் உண்டான ஒருவகை மரத்தின் பிசின். கருப்பூரத்தில் பல வகையுண்டு. ஆகையினால் இது 'தொடு கருப்பூரம்' என்று கூறப்பட்டது. கருப்பூர வகைக்குப் பளிதம் என்றும் பெயர் உண்டு. ஒருவகைப் பளிதம் தாம்பூலத்துடன் அருந்தப் பட்டது. அது மணமுள்ளது, விலையுயர்ந்தது.

கிழக்குக் கடற் கோடியில் கடல் கடந்த சாவக நாட்டுத் தீவுகளில் உண்டான இந்தப் பொருள்கள் தொண்டித் துறை முகத்தில் இறக்குமதியானதைச் சிலப்பதிகாரம் கூறுவதி லிருந்து அறிகிறோம். தொண்டித் துறைமுகத்தைப் பற்றி நாம் அறிவது இவ்வளவுதான்.

'தொண்டியோர்' என்பதற்கு அடியார்க்கு நல்லார் என்னும் உரையாசிரியர் தம்முடைய உரையில் 'சோழ குலத்தோர்' என்று உரை எழுதுகிறார். இது தவறு என்று தோன்றுகின்றது. தொண்டி இவர் காலத்தில் சோழர் ஆட்சிக்குக் கீழடங்கியிருக்கக் கூடும். ஆனால், சிலப்பதி கார்க் காலத்தில் தொண்டி, கூடல் (மதுரை) அரசனாகிய பாண்டியனுக்குக் கீழடங்கியிருந்தது. தொண்டியில் பாண் டிய குலத்து அரசன் ஒருவன் இருந்தான் என்று தோன்று கிறது. பாண்டி நாட்டின் முக்கியத் துறைமுகமாகிய கொற் கையில் பாண்டிய குலத்து இளவரசன் இருந்தது போலவே, தொண்டித் துறைமுகப் பட்டினத்திலும் ஒரு பாண்டிய இளவரசன் இருந்திருக்கக் கூடும்.

தொண்டித் துறைமுகப் பட்டினம் பிற்காலத்தில் சிறப்புக் குன்றி இக்காலத்தில் குக்கிராமமாக இருக்கிறது.

## மருங்கூர்ப் பட்டினம்

மருங்கூர்ப் பட்டினம் மருங்கை என்றும் கூறப்பட்டது. இது பாண்டி நாட்டின் கிழக்குக் கரையிலிருந்த துறைமுகம். பாண்டி நாட்டுப் புலவரான நக்கீரர், காயல்களும் (உப்பங் கழிகள்) தோட்டங்களும் உள்ள மருங்கூர்ப் பட்டினத்தின் கடைத்தெரு செல்வம் கொழித்திருந்தது என்று கூறுகின்றார்.

> ''விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்
> இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து
> எல்லுமிழ் ஆணவம்''
>
> (அகம், 227: 19-21)

அங்காடியில் குவித்து வைத்திருந்த இறால்களைக் கவர்ந்து கொண்டு போய்க் காக்கைகள் துறைமுகத்தில் நிற்கும் கப்பல்களின் பாய்மரக் கம்பத்தில் அமர்ந்து தின்றன என்றும் அவர் கூறுகிறார்.

> ''அகலங்காடி யசை நிழற் குவித்
> பச்சிறாக் கவர்ந்த பசுங்கண் காக்கை
> தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்
> மருங்கூர்ப் பட்டினம்''
>
> (நற்றிணை, 258: 7-10)

மருங்கூர்ப் பட்டினத்துக்கு மேற்கே அதைச் சார்ந்து ஊணூர் என்னும் ஊர் இருந்தது. ஊணூர் மதில் அரண் உடையதாக இருந்தது.

> ''கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்
> விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்
> இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினம்''
> (அகம், 227: 18-20)

ஊணூரைச் சூழ்ந்து நெல்வயல்கள் இருந்தன. 'முழங்கு கடல் ஓதம் காலைச் சொட்கும் பழம்பல் நெல்லின் ஊணூர்' என்று மருதன் இளநாகனுர் (அகம், 220) கூறுகிருர்.

சோழ நாட்டிலிருந்த பேர்போன காவிரிப்பூம் பட்டினத்தின் துறைமுகப் பகுதி மருவூர்ப்பாக்கம் என்றும் நார்ப் பகுதி பட்டினப்பாக்கம் என்றும் இருகூருகப் பிரிந்திருந்தது போல இவ்வூரும் மருங்கூர்ப் பட்டினம் ஊணூர் என்று இரு கூருகப் பிரிந்திருந்தன. காவிரிப்பூம் பட்டினத்தின் பட்டினப்




பாக்கம் மதிலையும் அகழியையும் கொண்டிருந்தது போல ஊணூரும் மதில் சூழ்ந்திருந்தது.

மருங்கூரும் ஊணூரும் சேர்ந்து நெல்லூர் அல்லது சாலியூர் என்று பெயர் பெற்றிருந்தது என்பதை மதுரைக் காஞ்சியினால் அறிகிறோம். தாலமி என்னும் கிரேக்கர் கூறுகிற சாலூர் (Salour) என்பது இந்தச் சாலியூர் ஆகும். மதுரைக் காஞ்சி இந்த நெல்லூரின் துறைமுகத்தைக் கூறுகிறது. 'தொடுவானம் பொருந்திய அச்சந்தருகின்ற பெரிய கடலிலே (அக்கரைத் தீவுகளிலிருந்து) அலைகளைக் கிழித்துக் கொண்டு காற்றின் உதவியினால் இக்கரையையடைவதற்குப் பாய்களை விரித்துக்கொண்டு வந்த பெரிய நாவாய்கள் இந்தத் துறைமுகத்திலே கூட்டமாக வந்து தங்கின. நாவாய்களிலிருந்து பண்டங்களை இறக்குமதி செய்தபோது முரசு முழங்கிற்று. கப்பல்கள் துறைமுகத்தில் தங்கியிருந்த காட்சியானது வெள்ளத்தை முற்றுகை செய்யும் மலைபோலத் தோன்றிற்று. இப்படிப்பட்ட வாணிக வளமுள்ள சாலியூரை (நெல்லூரை)க் கொண்ட பாண்டியன் நெடுஞ்செழியன்' என்று பொருளுள்ள செய்யுளைக் கூறுகின்றது மதுரைக் காஞ்சி:

'வான் இயைந்த இருமுந்நீர்ப்
பேஎ நிலைஇய பெரும் பௌவத்துக்
கொடும் புணரி விலங்கு போழக்
கடுங் காலொடு கரை சேர
நெடுங் கொடிமிசை இதை எடுத்து
இன்னிசைய முரச முழங்கப்
பொன் மலிந்த விழுப் பண்டம்
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய்
மழை முற்றிய மலை புரையத்
துறை முற்றிய துளங்கிருக்கைத்
தெண்கடற் குண்டகழிச்
சீர் சான்ற உயர் நெல்லின்
ஊர் கொண்ட உயர் கொற்றவ'

(75-88)

பாண்டிய நாட்டுக் கடற்கரை வளத்தையும் வாணிகத்தையும் மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் கூறுகிறார்.

கடலில் உண்டான முத்துக்களும் சங்குகளை அறுத்து உண் டாக்கின வளைகளும், கப்பல் வாணிகர் கொண்டு வந்த நவதானியங்களும், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்திய உப்புக் கண்டங்களும் (கருவாடு) ஆகியவற்றை நாவாய் களில் ஏற்றிக்கொண்டு போய் அயல் நாடுகளில் விற்று அங்கிருந்து குதிரை முதலான பொருள்களை ஏற்றிக்கொண்டு வந்ததைக் கூறுகிறார்.

'முழங்கு கடல் தந்த விளங்குகதிர் முத்தம்
அரம் போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை
பரதர் தந்த பல்வேறு கூலம்
இருங்கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்புப்
பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்
கொழுமீன் குறை இய துடிக்கட் டுணியல்
விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கலம் உய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியோடனைத்தும்
வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப.'

(315-324)

## கொற்கை

மருங்கூர்ப் பட்டினத்துக்குத் தெற்கே கொற்கைக் குடாக் கடலும் அதன் மேற்குக் கரையில் கொற்கைப் பட் டினமும் இருந்தன. கொற்கையை பெரிப்ளூஸ் என்றும் கிரேக்க நூல் கொல்கிஸ் (Kolklus) என்று கூறுகின்றது. தாலமியும் இதைக் கூறுகிறார். கொற்கைக் குடாக் கடல் அக்காலத்தில் நிலத்தின் உள்ளே ஐந்து மைல் ஊடுருவி யிருந்தது. இங்கு முத்துச் சிப்பிகளும் சங்கு வளைகளும் உண் டாயின. கொற்கை முத்து உலகப் புகழ்பெற்ற கொற்கைக் குடாக் கடலில் அக்காலத்தில் தாமிரபரணி ஆறு சென்று விழுந்தது. அந்த ஆற்றின் கரைமேல் கடற்கரைப் பக்கத் தில் பேர்போன கொற்கைப் பட்டினம் இருந்தது. இங்குப் பாண்டிய இளவரசன் இருந்தான். கி.பி. 10-ம் நூற்றாண் டுக்குப் பிறகு கொற்கைக் குடாக் கடல் மண்தூர்ந்துடைய மறைந்து போய் இப்போது நிலமாக மாறிவிட்டது. கொற் கைக் குடாக் கடல் நிலமாக மாறிப் போனதற்குக் காரணம்,

தாமிரபரணி ஆறு அடித்துக் கொண்டு வந்த மணலும் கடல் அலை அடித்துக் கொண்டு வந்த மணலும் ஆக இரண்டு புறத்திலும் மணல் தூர்ந்தபடியினுல்தான். மணல் தூர்ந்தது வெகு காலமாக நடந்து கொண்டு வந்து கடைசியில் கடலே மறைந்து போயிற்று. கொற்கைப் பட்டினம் இருந்த இடம் இப்போது கடற்கரைக்கு மேற்கே மூன்று மைல் தூரத்தில் மாறமங்கலம் என்னும் பெயர் பெற்றிருக்கின்றது. கி.பி. இரண்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் கொற்கையிலிருந்த பாண்டிய இளவரசன் வெற்றிவேற்செழியன்.

கொற்கைப் பட்டினம் துறைமுகப் பட்டினமாக இருந்ததுமல்லாமல், அங்கு முத்துக்களும் சங்குகளும் விற்கப்பட்டன. கொற்கைக் கடலில் முத்துச் சிப்பிகளும் சங்குகளும் உண்டானபடியால் இங்குமுத்துகளும் சங்குகளும் கிடைத்தன.

## குமரி

இது பாண்டிய நாட்டின் தெற்கே குமரிக் கடலில் இருந்தது. கன்னியாகுமரி என்றுங் கூறப்படும். இது துறை முகப் பட்டினமாகவும் புண்ணியத் தீர்த்தமாகவும் இருந்தது. இந்தத் துறைமுகத்தைத் தாலமி, பெரிப்ளூஸ் என்னும் கிரேக்கர்கள் குறிப்பிட்டுள்ளனர். கொமரா, கொமராய், கொமரியா என்று அவர்கள் குமரியைக் கூறியுள்ளனர். இத்துறைமுகத்தைக் 'குமரியம் பெருந்துறை' என்று மணி மேகலை கூறுகின்றது. பாண்டியனைக் 'கொற்கைக் கொண்கன் குமரித் துறைவன்' என்று சிலம்பு கூறுகின்றது. பிற்காலத்தில் இராமேசுவரம் புண்ணிய தீர்த்தமாக கருதப் படுவதற்கு முன்பு கொற்கைத் துறை புண்ணிய தீர்த்த மாகக் கருதப்பட்டு, கங்கையில் நீராடினவர் குமரிக்கு வந்து நீராடிச் சென்ருர்கள். பிற்காலத்தில் இந்தத் துறைமுகத் துக்கு வாணிகக் கப்பல்கள் வருவது நின்று போயிற்று. கொற்கைத் துறைமுகத்துக்கு அப்பால் கொற்கை என்னும் ஊர் இருந்ததென்றும், அங்குக் கோட்டைகள் அமைந்திருந்தன வென்றும் அங்கு, ஒரு கப்பல் தொழிற்சாலையிருந்ததென்றும் பெரிபுளூஸ் என்னும் கிரேக்க மொழி நூல் கூறுகின்றது.

# 7. தமிழகத்தின் மேற்குக்கரைத் துறைமுகங்கள்




பாரத தேசத்தின் மேற்குக் கரையில் இருந்த பழய காலத்துத் துறைமுகப் பட்டினங்களைக் கூறுவோம். அவை

குடகடலின் (அரபிக் கடலின்) கரையில் இருந்தன. அக் காலத்தில் வடக்கே இருந்த பேர்போன துறைமுகம் மின்ன கரம் என்பது. மின்னகரம் சிந்துநதி கடலில் சேரும் புகர் முகத்தில் இருந்தது. அதற்குத் தெற்கே புரோச் (Broach) என்னும் பாரிகச்சத் துறைமுகமும், சோபாரா 'சூரத்துத்' துறைமுகமும் இருந்தன. இந்தத் துறைமுகங்களில் அரா பிய, யவன வாணிகர்கள் மேற்கிலிருந்து வந்து வாணிகம் செய்தார்கள். இந்தத் துறைமுகங்கள் அக்காலத்தில் அப் பகுதிகளையரசாண்ட சதகர்ணி (சாத வாகன) அரசர் களுக்குரியவை. இந்தத்துறை முகங்களைக் கைப்பற்றச் சாகர் என்னும் அரசர்கள் சதகர்ணி அரசர்களோடு அடிக் கடி போர் செய்து கொண்டிருந்தார்கள். இத்துறைமுகங் கள் சில காலம் சதகர்ணிகளுக்கும் சில காலம் சாகர்களுக் கும் உரியதாக இருந்தன. கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டு களில் இவ்விதமாக இந்தத் துறைமுகப் பட்டினங்கள் இருவர் ஆட்சியிலும் மாறிக் கொண்டிருந்தன.

அக்காலத் தமிழகம், மேற்குக் கரையில் துளு நாட்டை யும் (தென் கன்னட வட கன்னட மாவட்டங்கள்) தன்ன கத்தே கொண்டிருந்தது. தமிழகத்தின் மேற்குக் கரையில் வடகோடியிலிருந்த அக்காலத்துத் துறைமுகப் பட்டினம் மங்களூர். மங்களூர் இப்போதும் சிறிய துறைமுகமாக இருக்கின்றது. ஆனால் சங்க காலத்தில் அது பெரிய பேர் போனத் துறைமுகமாக இருந்தது. துளு நாட்டை அக் காலத்தில் நன்னன் என்னும் பெயருள்ள வேள் அரசர்கள் அரசாண்டார்கள். மங்களூருக்குத் தெற்கேஇருந்த துறைமுகப் பட்டினம் நறவு. இதுவும் துளு நாட்டைச் சேர்ந்திருந்தது.

நறவுக்குத் தெற்கே தொண்டி, பரக்கெ, நீல்கண்ட முதலான துறைமுகங்கள் இருந்தன. இவை சேரநாட்டைச் சேர்ந்த துறைமுகங்கள். இத்துறைமுகங்களைப் பற்றிக் கூறுவோம்.

## மங்களூர்

சங்க காலத்தில் தமிழகத்தின் ஒரு பகுதியாக இருந்தது துளுநாடு. துளுநாட்டை நன்னன் என்னும் பெயருள்ள

அரசர் பரம்பரையரசாண்டு வந்தது. துளு நாட்டின் முக்கியத் துறைமுகமாக இருந்தது மங்களூர். நேத்திராவதி ஆறு கடலில் கலக்கிற இடத்தில் மங்களூர் இருந்தது. இப் போதும் மங்களூர் சிறு துறைமுகப் பட்டினமாக இருக்கிறது. மங்களூரில் இருந்த மங்கலாதேவி கோயில் பேர்போனது. சிலப்பதிகாரம் மங்கலாதேவி கோயிலைக் கூறுகின்றது.

மங்களூர் துறைமுகத்தில் யவன வாணிகர் வந்து வாணிகம் செய்தார்கள். தாலமி என்னும் யவனர் இந்தத் துறைமுகப்பட்டினத்தை மகனூர் என்று கூறியுள்ளார். மங்களூரைத்தான் இவர் இப்படிக் கூறியுள்ளார். பிளினி என்னும் யவனர் இதை 'நைத்ரியஸ்' (Nitrias) என்று கூறியுள்ளார். நைத்ரியஸ் என்பது நேத்திராவதியாறு. நேத்திராவதி ஆற்று முகத்துவாரத்தில் இருக்கிறபடியால் இதை நைத்ரியஸ் என்று கூறினர் போலும். மேலும், இவர் இந்த இடத்தில் கடற்கொள்ளைக்காரர் இருந்தனர் என்றும் கூறுகின்றார். மங்களூருக்கு மேற்கே கடலில் ஒரு சிறு தீவில் குறும்பர்கள் இருந்தனர். அவர்கள் கடம்ப மரத்தைக் காவல் மரமாக வளர்த்திருந்தார்கள். அவர்கள் வாணிகத்துக்காக வெளிநாடுகளிலிருந்து வரும் கப்பல்களைக் கொள்ளையடித்தனர். அதனால் சேரநாட்டுத் துறைமுகப் பட்டினங்களுக்கு யவனக் கப்பல்கள் வருவது தடைப்பட் டன. அப்போது, இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் தன் இளைய மகனை செங்குட்டுவன் தலைமையில் கடற் படையை யனுப்பிக் கடற்கொள்ளைக் குறும்பரையடக்கினான். இச் செய்திகளைப் பதிற்றுப்பத்து இரண்டாம் பத்து, ஐந்தாம் பத்துகளால் அறிகின்றோம்.

## நறவு

துளு நாட்டிலே மங்களூர்த் துறைமுகத்துக்குத் தெற்கே நறவு என்னும் துறைமுகப் பட்டினம் இருந்தது. இதுவும் துளு நாட்டைச் சேர்ந்தது. துளுநாட்டு நன்னன் ஆட்சியில் இது இருந்தது. நறவு என்னும் சொல்லுக்கு கள், மது என்னும் பொருளும் உண்டு. ஆகையால் நறவு

என்னும் பெயர் உள்ள இந்தப் பட்டினத்தைத் தமிழ்ப் புலவர் 'துவ்வா நறவு' (உண்ணப்படாத நறவு) என்று கூறினர். சேர மன்னர் துளு நாட்டு நன்னனை வென்று துளுநாட்டு ஆட்சியைக் கைக் கொண்டபோது, ஆடு கோட் பாட்டுச் சேரலாதன் (சேரன் செங்குட்டுவனுடைய மாற் ருந்தாயின் மகன்) இந்த நறவுத் துறைமுகப் பட்டினத்தில் இருந்தான் என்று பதிற்றுப் பத்து (6 ஆம் பத்து 10 ஆம் செய்யுள்) கூறுகின்றது. யவன நாட்டுக் கப்பல் வாணிகர் இங்கு வந்து வாணிகம் செய்தார்கள். அவர்கள் நறவை 'நவ்ரா' என்று கூறினர்கள்.

### தொண்டி

இது மேற்குக் கடற்கரையில் சேரநாட்டில் இருந்த தொண்டி. (பாண்டி நாட்டில், கிழக்குக் கடற்கரையிலும் ஒரு தொண்டி இருந்தது.) ஐங்குறு நூற்றில் நெய்தற் பத்தைப் பாடிய அம்மூவனர் தொண்டிப்பத்து என்னும் தலைப்பில் பத்துச் செய்யுட்களைப் பாடியுள்ளார். இவர் பாடிய தொண்டி இந்தச் சேரநாட்டுத் தொண்டியாகும். இந்தத் தொண்டிப் பட்டினம் கொங்கு நாட்டையரசாண்ட பொறையர்களின் ஆட்சியிலிருந்ததாகத் தெரிகின்றது. பொறையர் சேர அரசர்களின் இளைய வழியினர். கொங்கு நாட்டையரசாண்ட அவர்களுக்கு, உள் நாடாகிய கொங்கு நாட்டில் துறைமுகப் பட்டினம் இல்லாதபடியால், சேர நாட்டுத் துறைமுகப் பட்டினமாகிய தொண்டியை வைத் திருந்தனர் என்று தோன்றுகின்றது. சேரன் செங்குட்டு வனுடைய தம்பியாகிய (மாற்றாந்தாயின் மகன்) ஆடுகோட் பாட்டுச் சேரலாதன், வடக்கே தண்டாரணியத்திலிருந்து கொண்டு வந்த வருடைப் பசுக்களைத் தொண்டிக்குக் கொண்டு வந்து தானங் கொடுத்தான்.

> 'தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
> தொண்டியுட் டந்து கொடுப்பித்து.'
>
> (6 ஆம் பத்து. பதிகம்)

சங்க காலத்திலிருந்த பொய்கையார் என்னும் புலவர் இந்தத் தொண்டியில் வாழ்ந்தவர். (புறம், 48). தொண்டித்

துறைமுகத்தில் அக்காலத்தில் யவன வாணிகர் வந்து வாணிகம் செய்தனர். தாலமி (ptolemy) என்னும் யவனர் இந்தத் தொண்டியைத் தைண்டிஸ் (Tyndis) என்று கூறியுள்ளார். இங்கு நடந்த வாணிகத்தைப் பற்றி வேறொன்றும் தெரியவில்லை.

மாந்தை

சேரநாட்டுத் 'துறைமுகப் பட்டினமாகிய மாந்தை துறைகெழு மாந்தை', 'கடல்கெழு மாந்தை' என்று கூறப் படுகின்றது.¹ மாந்தை மரந்தை என்றும் கூறப்பட்டது. மாந்தைப் பட்டினத்தில், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பொன் வயிரம் மணி முதலான பெருஞ் செல்வத்தை ஆம் பல் கணக்கில் (ஆம்பல் என்பது கணிதத்தில் பெருந்தொகை யைக் குறிப்பது) புதைத்து வைத்திருந்தான் என்று மாமூலனார் கூறுகிறார். இந்தப் பெருஞ் சேரலாதன் கடற் கொள்ளைக்காரக் குறும்பரை அடக்கினவன்.

''வலம்படு முரசிற் சேரலாதன்
முந்நீரோட்டிக் கடம்பறுத் திமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்
பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்
பொன் செய்பாவை வயிரமொடு ஆம்பல்
ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றவண்
நிலந்தினத் துறந்த நிதியம்''

(அகம், 127: 3-10)

இந்தத் துறைமுகத்தைப் பற்றி வேறொன்றும் தெரிய வில்லை.

## முசிறித் துறைமுகம்

முசிறித் துறைமுகப்பட்டினம் சேர நாட்டுத் துறை முகப் பட்டினங்களில் பேர்போனது. அக்காலத்தில் அது, கிழக்குக் கடற்கரையில் உலகப் புகழ் பெற்றிருந்த காவிரிப் பூம்பட்டினம் போல மேற்குக் கரையில் உலகப் புகழ் பெற் றிருந்தது. மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து உண்டான

பேரியாறு மேற்குக் கடலில் விழுந்த இடத்தில் முசிறித் துறைமுகம் அமைந்திருந்தது. சேர நாட்டுத் தலைநகரமாக அக்காலத்தில் இருந்த வஞ்சி (கரூர்) நகரம், பேரியாறு கடலில் விழுந்த இடத்துக்கு அருகில் பெரியாற்றின் கரை மேல் இருந்தது, வஞ்சி நகரத்திலே சேர அரசர் வாழ்ந் திருந்தார்கள். (இந்தச் சேரர் வஞ்சி, கொங்கு நாட்டு வஞ்சி (கரூர்) அன்று. சேர நாட்டிலும் கொங்கு நாட்டிலும் வஞ்சி என்றும் கரூர் என்றும் பெயர் பெற்றிருந்த இரண்டு ஊர்கள் சங்க காலத்தில் இருந்தன.) சேர நாட்டுத் தலை நகரமான வஞ்சிமா நகரத்துக்கு மேற்கே கடற்கரையில் பேரியாறு கடலில் சேர்ந்த புகர் முகத்தில் முசிறித் துறை முகப் பட்டினம் இருந்தது.

முசிறித் துறைமுகத்தில் முக்கியமாக மிளகு ஏற்றுமதி யாயிற்று. யவனக் கப்பல்கள் மிளகை வாங்குவதற்காகவே முசிறிக்கு வந்தன. யவனர் முசிறியை **முசிறிஸ்** என்று கூறினார்கள். வால்மீகி இராமாயணம் முசிறியை **முரசி பதனம்** என்று கூறுகின்றது. முசிறி வட மொழியில் 'முரசி' ஆயிற்று. முசிறிக் கடலில் முத்துச் சிப்பிகளும் உண்டாயின. சிப்பியிலிருந்து முத்து கிடைத்தது. முசிறியில் உண்டான முத்துக்களைக் கவ்டல்லியரின் அர்த்த சாத்திரம் **கௌர் ணெயம்** என்று கூறுகின்றது. பேரியாற்றுக்குச் சூர்ணி யாறு என்றும் பெயருண்டு. சூர்ணியாற்றின் முகத்துவாரத் தில் உண்டானபடியால் இந்த முத்து **கௌர்ணெயம்** என்று பெயர் பெற்றது. சௌர்ணெயம் என்னும் பெயர் திரிந்து கௌர்ணெயம் என்றாயிற்று. முசிறிக் கடலில் உண்டான முத்துக்கள் முசிறிப் பட்டினத்தின் ஒரு பகுதியான **பந்தர்** என்னும் இடத்தில் விற்கப்பட்டன. முசிறிப் பட்டினத்தைச் சேர்ந்த பந்தரில் முத்துக்களும் கொடுமணம் என்னும் இடந் தில் பொன் நகைகளும் விற்கப் ட்டன என்று பதிற்றுப் பத்து கூறுகிறது.

'இன்னிசைப் புணரி இரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்
கமழுந தாழைக் கானலம் பெருந்துறை'

(6 ஆம் பத்து 5)

பந்தரிலும் கொடுமணத்திலும் முத்துக்களும் நன் கலங்களும் (நகைகள்) விற்கப்பட்டன என்று 7 ஆம் பத்து 7 ஆம் செய்யுள் கூறுகின்றது.

'கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்'

என்று 8 ஆம் பத்து (4: 5-6) கூறுகின்றது. பந்தர் என்பது அரபு மொழிச் சொல். பந்தர் என்றால் ஆவணம், கடை வீதி என்பது பொருள். அக்காலத்திலேயே அரபியர் இங்கு வந்து வாணிகஞ் செய்தார்கள்.

கி.மு. முதல் நூற்றாண்டில் தென்மேற்குப் பருவக் காற்றை ஹிப்பலஸ் என்னும் யவன மாலுமி அரபு வாணிகரிடமிருந்து அறிந்து கொண்டு, அக்காற்றின் உதவியினால் நடுக்கடலினூடே கப்பலை முசிறிக்கு ஓட்டிக் கொண்டு வந்தான். தென்மேற்குப் பருவக் காற்றின் உதவியை யவனர் அறிவதற்கு முன்பு கப்பல்களைக் கரையோரமாகச் செலுத்திக் கொண்டு வந்தனர். அதனால் நெடுங்காலம் பிரயாணஞ் செய்ய வேண்டியிருந்தது. பருவக்காற்றின் உதவி கண்டு பிடித்த பிறகு யவனக் கப்பல்கள் நேரே முசிறித் துறைமுகத்துக்கு விரைவாகவும் கால தாமதம் இல்லாமலும் வரத் தொடங்கின. இந்தப் பருவக் காற்றுக்கு ஹிப்பலஸ் என்ற பெயரை (அதைக் கண்டுபிடித்த ஹிப்பலஸ் என்பவன் பெயரை) யவனர் சூட்டினார்கள்.

யவனக் கப்பல்கள் பவழம், கண்ணாடி, செம்பு, தகரம், ஈயம் முதலான பொருள்களைக் கொண்டுவந்து முசிறியில் இறக்குமதி செய்து இங்கிருந்து பல பொருள்களை ஏற்றுமதி செய்து கொண்டு போயின. ஏற்றுமதியான பொருள்களில் முக்கியமானதும் அதிகமாகவும் இருந்தது மிளகுதான். யவனர் மிளகை ஏராளமாக ஏற்றுமதி செய்து கொண்டு போனார்கள். உரோம் நாட்டில் மிளகு பெரிதும் விரும்பி வாங்கப்பட்டது. யவனர் மிளகை ஆவலோடு விரும்பி வாங்கினபடியால் அதற்கு 'யவனப் பிரியா' என்று பெயர் உண்டாயிற்று. பெரிய யவனக் கப்பல் வாணிகர் பொன்னைக்

கொண்டு வந்து விலையாகக் கொடுத்து மிளகை வாங்கிக் கொண்டு போனார்கள். தாயங் கண்ணனார், யவனர் பொன்னைக் கொடுத்து மிளகை ஏற்றிக் கொண்டு போன தைக் கூறுகிறார்.

> 'சுள்ளியம் பேர்யாற்று வெண்ணுரை கலங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> வளங்கெழு முசிறி'
>
> (அகம், 149: 8-11)

சுள்ளியம் (பேரியாறு-பெரியாறு; நன்கலம்-நல்ல மரக்கலம்; கறி-மிளகு.)

முசிறித் துறைமுகம் ஆழமில்லாமல் இருந்தபடியால் யவனரின் பெரிய கப்பல்கள் கரைக்கு வர முடியாமல் கடலில் தூரத்திலேயே நின்றன. ஆகவே தோணிகளில் மிளகை ஏற்றிக் கொண்டுபோய் யவனக் கப்பல்களில் ஏற்றிவிட்டு அதன் விலையாகப் பொன்னை வாங்கிக் கொண்டு வந்தார்கள். பரணர் இதை இவ்வாறு கூறுகின்றார்.

> 'மனைக்குவைஇய கறிமூடையால்
> கலிச் சும்மைய கரைகலக்குறுந்து
> கலந்தந்த பொற்பரிசம்
> கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
>
> .. .. ..
>
> முழங்குகடல் முழவின் முசிறி'
>
> (புறம், 343: 3-10)

(மனைக்குவை இய-வீடுகளில் குவித்து வைக்கப்பட்ட; கறி மூடை-மிளகு மூட்டை; கலம்தந்த-யவனர் மரக்கலங்கள் கொண்டு வந்த; பொற்பரிசம்-விலையாகிய பொன்)

கிரேக்கரும் ரோமரும் மட்டும் மிளகை வாங்கவில்லை. அக்காலத்தில் உலகத்திலே எல்லா மக்களும் மிளகை வாங்கினார்கள். அக்காலத்தில் மிளகாய் கிடையாதபடியால் எல்லாரும் மிளகை உணவுக்காகப் பயன்படுத்தினார்கள். பாரத நாட்டு மக்களும் மிளகைப் பயன்படுத்தினார்கள். முசிறித்

துறைமுகத்திலிருந்து மிளகு கொண்டு போகப்பட்டபடி யால் மிளகுக்கு '**மரிசி**' என்று பெயர் உண்டாயிற்று. முசிறி என்னும் பட்டினத்தின் பெயர்தான் மரிசி என்று மருவிற்று. உலகப் புகழ் பெற்றிருந்த முசிறித் துறைமுகப் பட்டினம் கி.பி. 14 ஆம் நூற்றுண்டின் இடையில் வெள்ளப் பெருக்கினல் அழிந்து விட்டது. கி.பி. 1341 இல் பெய்த பெரு மழையின் காரணமாகப் பேரியாற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு முசிறிப் பட்டினம் வெள்ளத்தில் மூழ்கி மறைந்து போயிற்று. அதனல் அதனையடுத்துப் புதிய காயல்களும் துருத்திகளும் (மணல் தீவு) ஏற்பட்டன. முசிறித் துறை முகம் முழுகிப்போன படியால் அதற்கு அருகில் பிற்காலத்தில் கொச்சித் துறைமுகம் ஏற்பட்டது.

குறிப்பு: முசிறிப் பட்டினத்துக்கு முயிரிக்கோடு என்றும் மகோதை என்றும் மகோதைப் பட்டினம் என்றும் சங்க காலத்துக்குப் பிறகு பெயர் கூறப்பட்டது.

## வைக்கரை

இது முசிறிக்குத் தெற்கேயிருந்த துறைமுகப் பட்டினம். கோட்டயத்துக்கு அருகிலே இருந்தது. இந்தத் துறை முகத்தைத் தாலமி என்பவர் பக்கரே (Bakarei) என்று கூறுகிருர். இந்தத் துறைமுகத்தைப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியவில்லை.

## மேல்கிந்த

தாலமி என்பவர் இதை மேல்கிந்த (Mclkynda) என்றும், பெரிபுளூஸ் என்னும் நூல் நெல்கிந்த என்றும், பிளினி என்பவர் நியாசிந்த என்றும் கூறுகின்றனர். தமிழில் இதை என்ன பெயரிட்டுக் கூறினர்கள் என்பது தெரியவில்லை. இது வைக்கரைக்குத் தெற்கே இருந்தது. இதைப் பற்றியும் ஒன்றும் தெரியவில்லை.

## விழிஞம்

இலங்கோன் (Elankon) என்னும் துறைமுகப் பட்டினத்தைத் தாலமி என்னும் யவனர் கூறியுள்ளார்.

இது ஆயோய் (ஆய்) நாட்டில் இருந்ததென்று கூறுகின்றார்.
ஆய் நாடு பாண்டிய நாட்டில் இருந்தது. பொதிகை மலை
யை சூழ்ந்திருந்தது ஆய்நாடு. ஆய் மன்னர் பாண்டிய
ருக்குக் கீழடங்கிச் சிற்றரசராக இருந்தார்கள். ஆய் நாட்
டில் இருந்த துறைமுகத்தைத் தாலமி இலங்கோன் என்று
குறிப்பிடுவது விழிஞம் என்னும் துறைமுகப் பட்டினமாகும்.
விழிஞம் மிகப் பழமையான சரித்திரப் புகழ்பெற்ற துறை
முகப் பட்டினம்.

# 8. இலங்கைத் துறைமுகங்கள்

## மணிபல்லவம் (ஜம்புகொல பட்டினம்)

மணிபல்லவம் என்றும் ஜம்புகொல பட்டினம் என்றும் பெயர் பெற்ற மிகப் பழைய துறைமுகப் பட்டினம் இலங்கையின் வடகோடியில் இருந்தது. இது இப்போதைய யாழ்ப்பாணத்துக்கு வடக்கே இருந்த ஒரு சிறு தீவு. மணிமேகலைக் காவியம் இதை மணிபல்லவம் என்றும் இலங்கைப் பாலிமொழி நூல்கள் ஜம்புகொல பட்டினம் என்றும் கூறுகின்றன. சம்பில் துறை என்றும் இது கூறப்பட்டது. அக்காலத்தில் பேர்போன துறைமுகப் பட்டினமாக விளங்கிய இங்கு வாணிகப் பொருள்கள் ஏற்றுமதி இறக்குமதி செய்யும் இடமாக இல்லை. கப்பல் போக்குவரத்துக்குரிய துறையாகவும், தமிழ் நாட்டிலிருந்து கிழக்கே நெடுந்தூரம் போகிற கப்பல்கள் வந்து தங்கி குடிநீர் எடுத்துக் கொள்ளும் இடமாகவும் இருந்தது. இத்துறைமுகத்திலிருந்து தெற்கே இலங்கையின் அக்காலத்துத் தலைநகரமான அநுராதபுரத்துக்கு (அநுரைக்கு) நெடுஞ்சாலையிருந்தது.

இலங்கையை யரசாண்ட தேவனும்பிரிய திஸ்ஸன் (கி.மு. 247-97) என்பவர் இந்தியாவை அக்காலத்தில் அரசாண்ட அசோக சக்ரவர்த்தியிடம் தூதுக் குழுவை அனுப்பின போது அத்தூதுக்குழு மணிபல்லவத் துறைமுகத்திலிருந்து கப்பலேறிப் புறப்பட்டது. புறப்பட்டு ஏழு நாள் வடக்கே கடற்பிரயாணஞ் செய்து தாமலித்தி துறைமுகத்தையடைந்து அங்கிருந்து கங்கையாற்றில் புகுந்து பாடலிபுரத்துக்குச் சென்று அசோக சக்கரவர்த்தியைக்

கண்டது. (மகா வம்சம் XI: 23–24) பிறகு, மீண்டும் அதே வழியாகக் கப்பலில் பிரயாணஞ் செய்து ஜம்புகோல பட்டினத்தையடைந்தது. (மகாவம்சம் XI: 33)

அசோக சக்கரவர்த்தி புத்தகயாவிலிருந்த போதி மரத்தின் கிளையை வெட்டிச் சங்கமித்திரையின் தலைமையில் இலங்கைக்கு அனுப்பினபோது சங்கமித்திரையும் அவருடைய பரிவாரமும் போதி (அரச) மரக்கிளையுடன் மரக்கலம் ஏறி ஜம்புகோலப் பட்டினத்துக்கு வந்து இறங்கினர். (மகாவம்சம் XIX: 23) தேவனும்பிரிய திஸ்ஸன் அமைச்சர்களுடனும் பரிவாரங்களோடும் ஜம்புகோல துறைக்கு அருகில் பன்னசாலை (பர்ணசாலை - ஓலைக் கொட்டகை) அமைத்துக் கொண்டு அங்குத் தங்கியிருந்து போதி மரக் கிளையையும் சங்கமித்திரையையும் வரவேற்றான். அவன் தங்கியிருந்த இடம் சமுத்த பன்னசாலை (சமுத்திர பர்ணசாலை) என்று பெயர் பெற்றது (மகாவம்சம் XIX: 26). பிறகு அந்த அரசன் அந்த இடத்தில் மண்டபம் கட்டினான். (மகாவம்சம் XIX: 27, 28) போதி மரக்கிளையுடன் அனுப்பப்பட்ட எட்டு போதிமரக் கன்றுகளில் ஒன்றை அவன் அந்த இடத்தில் நட்டான். (மகாவம்சம் XIX: 60) பிறகு இந்த போதிமரத்துக்குக் கீழே புத்தருடைய பாத பீடிகையமைக்கப்பட்டது. இதற்கு மணிப்பல்லவங்கம் (மணிப்பலகை, மணிப்பீடம்) என்று பெயர். மணிப் பல்லங்கம் என்னும் பெயர் பிற்காலத்தில் மணி பல்லவம் என்று திரிந்து வழங்கிற்று என்று தோன்றுகின்றது. இந்தப் புத்த பீடிகையை மணிமேகலைக் காவியம், மணிப்பீடிகை என்றும் தருமபீடிகை என்றும் கூறுகின்றது.

காவிரிப்பூம் பட்டினத் துறைமுகத்திலிருந்து தெற்கே முப்பது யோசனை தூரத்தில் மணிப்பல்லவத் துறை இருந்தது (மணிமேகலை 6: 211-13). தமிழகத்திலிருந்து (சோழ நாடு பாண்டிய நாடுகளிலிருந்து) கிழக்கே வெகுதூரத்திலிருந்த சாவக நாட்டுக்கு (கிழக்கிந்தியத் தீவுகளுக்கு) வாணிகத்தின் பொருட்டுச் சென்ற தமிழக நாவிகர்கள் மணிபல்லவத் துறையில் தங்கி அங்குப் புத்தபாத பீடிகைக்கு எதிரில் இருந்த கோமுகி என்னும் ஏரியிலிருந்து குடிநீரைக்

கப்பல்களில் எடுத்துக் கொண்டு பிறகு பிரயாணந் தொடங்கினார்கள்.

பாண்டி நாட்டுக் கப்பல் வாணிகர் சாவகத் தீவுகளுக்கு வாணிகத்தின் பொருட்டுக் கடலில் சென்றபோது இடைவழியில் மணிபல்லவத் துறையில் தங்கிச் சென்றார்கள் (மணி 14: 79-84).கோவலன் மகள் மணிமேகலை பௌத்த மதத்தைச் சேர்ந்த பிறகு மணிபல்லவஞ் சென்று அங்கிருந்த புத்தபாத பீடிகையை வணங்கி மீண்டும் தன் ஊருக்குத் திரும்பி வந்தாள் (மணி 25: 120-127). இலங்கையின் வட பகுதியாகிய இப்போதைய யாழ்ப்பாண தேசம் அக்காலத்தில் நாகநாடு என்று பெயர் பெற்றிருந்தது. அந்த நாகநாட்டை அக்காலத்தில் அரசாண்ட வளை வாணன் என்னும் நாககுல மன்னன் மகள் பீலிவளை என்பவள் மணிபல்லவத் துறையிலிருந்து புறப்பட்டுக் காவிரிப் பூம்பட்டினத்துக்கு வந்து கடற்கரைச் சோலையிலே தங்கியிருந்தபோது அப்பட்டினத்தில் இருந்த வடிவேற்கிள்ளி என்னும் சோழன் அவளுடன் உறவு கொண்டான். சில காலங்கழித்து அவள் தன்னுடைய ஊருக்குத் திரும்பிப் போனாள். அங்கு அவள் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்து, அக்குழந்தையை மணிபல்லவத் துறையில் வந்து தங்கின கம்பலச் செட்டி என்னும் கப்பல் வாணிகனிடம் கொடுத்து அக்குழந்தையைச் சோழனிடம் சேர்க்கும்படி அனுப்பினாள். கம்பலச் செட்டி குழந்தையுடன் கப்பலில் புறப்பட்டுக் காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்தபோது இடைக் கடலில் கப்பல் கவிழ்ந்து குழந்தை இறந்து போயிற்று (மணி 25: 178-192). சோழ நாட்டிலிருந்து சாவக நாட்டுக்குச் சென்ற மணிமேகலை சாவக நாட்டு அரசன் புண்ணிய ராசனைக் கண்டு அவனோடு புறப்பட்டு மணிபல்லவத்துக்கு வந்து அங்கிருந்த புத்தபாத பீடிகையை வணங்கினாள் (மணி 25: 120-127).இலங்கையிலிருந்து சோழ நாட்டுக்கும் காஞ்சிபுரத்துக்கும் வந்த பௌத்தபிக்குகள் ஜம்புகோல பட்டினத்திலிருந்து கப்பலேறி வந்தார்கள். இவ்வாறு எல்லாம் பழைய நூல்களில் மணிபல்லவ-சம்புகோல பட்டினம் கூறப்படுகின்றது.

## மாதிட்டை

இது இலங்கையின் மேற்குக் கரையில் மன்னார் குடாக் கடலில் பாண்டி நாட்டுக்கு எதிர்க் கரையிலிருந்த பேர் போன பழைய துறைமுகப் பட்டினம். மாதிட்டை என்பது மகாதிட்டை என்றுங் கூறப்பட்டது. கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் இலங்கையை யரசாண்ட முதல் சிங்கள அரசனான விசயன், பாண்டியன் மகளை மணஞ்செய்து கொண்டான். அவனுடைய எழுநூறு தோழர்களும் பாண்டி நாட்டில் பெண் கொண்டு திருமணஞ் செய்து கொண்டார்கள். மண மகளிர் பாண்டி நாட்டிலிருந்து இலங்கைக்குக் கப்பலில் சென்ற போது அவர்களும் அவர்களுடன் சென்ற பரிவாரங் களும் பதினெட்டு வகையான தொழில்களைச் செய்தவர்களின் குடும்பங்களும் மாதிட்டைத் துறைமுகத்தில் இறங்கிச் சென்றார்கள் என்று மகாவம்சம் கூறுகின்றது. (மகாவம்சம் VII:58) கி.மு. முதல் நூற்றாண்டில் இலங்கையையர சாண்ட சோழ நாட்டுத் தமிழனாகிய ஏலேலன் (ஏலாரன்) மீது துட்டகமுனு என்னும் அரசன் இலங்கையில் போர் செய்தபோது ஏலேலனுக்கு உதவியாகச் சோழ நாட்டிலிருந்து படை திரட்டிக் கொண்டு போன பல்லுகன் என்னும் அரசன் மாதிட்டைத் துறைமுகத்தில் இறங்கினான். (மகாவம்சம் XXV:80) வட்டகாமணி அரசன் (கி.மு. 44-29) இலங் கையையரசாண்டபோது ஏழு தமிழ் நாட்டு வீரர்கள் படையெடுத்துச் சென்று இலங்கையில் போர் செய்தார்கள். அவர்கள் (கி.மு. 29) மாதிட்டைத் துறையில் இறங்கினார் கள் என்று மகாவம்சம் கூறுகின்றது. (மகா. XXXIII:39) அந்தத் தமிழர்கள் வட்டகாமணி அரசனை வென்று சிங்கள நாட்டைப் பன்னிரண்டு ஆண்டு (கி.மு. 29-17) வரையில் அரசாண்டார்கள்.

மாதிட்டை பிற்காலத்தில் மாதோட்டம் என்று பெயர் கூறப்பட்டது. தேவாரத்தில் மாதோட்டம் என்று கூறப்படு கின்றது. மாதோட்டத்தில் பாலாவி ஆற்றின் கரைமேல் உள்ள திருக்கேதீச்சுரத்தைத் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார். மாதிட்டையாகிய மாதோட்டம் மிகப் பழங்காலத்திலிருந்து முக்கியமான துறைமுகப் பட்டினமாக இருந்தது.

# 9. விளைபொருளும் உற்பத்திப் பொருளும்

## வெல்லமும் சர்க்கரையும்

**ச**ங்க காலத்திலே வெல்லமும் சர்க்கரையும் செய்யப் பட்டன. வெல்லமும் சர்க்கரையும் செய்வதற்குக் கரும்பு வேண்டும். கரும்பும் பயிர் செய்யப்பட்டது. ஆகவே அக் காலத்தில் கரும்பும் வெல்லமும் முக்கியமான விவசாயப் பொருளும் உற்பத்திப் பொருளுமாக இருந்தன. கொங்கு நாட்டில் தகடூர் வட்டாரத்தை யரசாண்ட அதியமான் அரச பரம்பரையில் வெகு காலத்துக்கு முன்பு இருந்த ஒருவன் தேவலோகத்திலிருந்து கரும்பைக் கொண்டு வந்து தமிழ் நாட்டில் பயிர் செய்தான் என்று கூறப்படுகின்றான்.

> 'அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்
> அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்
> நீரக இருக்கை ஆழி சூட்டிய
> தொன்னிலை மரபின் முன்னோர்'
>
> (புறம், 99: 1-4)

என்றும்,

> 'அரும் பெறல் அமிழ்தம் அன்ன
> கரும்பு இவண் தந்தோன் பெரும்பிறங்கடையே'
>
> (புறம், 392: 20-21)

என்றும் ஔவையார் கூறுவதிலிருந்து இதனை அறிகின்றோம். இதனால் கொங்கு நாட்டு அதியமான் அரசன் ஒருவன் ஏதோ தூர தேசத்திலிருந்து கரும்பைக் கொண்டு வந்து

தமிழ் நாட்டில் முதல் முதலாகப் பயிர் செய்தான் என்று தெரிகின்றது.

தமிழ் நாடெங்கும் கரும்புப் பயிர் செய்யப்பட்ட இடம் கரும்பின் பாத்தி என்றும் கரும்பின் கழனி என்றும் கூறப்பட்டது. கரும்பைப் **பழனவெதிர்** என்று ஒரு புலவர் கூறியுள்ளார். (பழனம்-கழனி. வெதிர்-மூங்கில். மூங்கில் மலைகளில் தானாகவே வளர்வது. கரும்பு, கழனிகளில் பயிர் செய்யப்படுவது. மூங்கிலைப் போலவே கரும்பும் கணு உள்ளது. ஆகையால் கழனிகளில் பயிர் செய்யப்படுகிற மூங்கில் என்று கரும்பு கூறப்பட்டது.) கரும்பு தமிழ் நாடு எங்கும் பயிரிடப்பட்டது.

> 'அகல்வயல் கிளைவிரி கரும்பின் கணைக்கால்
> வான்பூ' (அகம், 235 : 11-12)
> 'அகல்வயல் நீடுகழைக் கரும்பின் கணைக்கால்
> வான்பூ' (அகம், 217 : 3-4)
> 'விரிபூங் கரும்பின் கழனி' (2 ஆம் பத்து 3:13)
> 'தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பு.'
> (குறுந், 85:4)

கரும்பைச் சாறு பிழியும் எந்திரங்களும் கருப்பஞ் சாற்றை வெல்லங் காய்ச்சும் ஆலைகளும் ஊர்கள் தோறும் இருந்தன. பாண்டி நாட்டுத் தேனூரில் கரும்பைச் சாறு பிழியும் எந்திரமும் வெல்லங் காய்ச்சும் ஆலையும் இருந்தன.

> 'கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்
> தேர்வண் கோமான் தேனூர்'

என்று ஐங்குறுநூறு கூறுகின்றது.

வெல்லத்துக்கு **விசயம்** என்று பெயர் கூறப்பட்டது. வெல்லக்கட்டியைச் சுருக்கமாகக் கட்டி என்றும் கூறினார்கள். வெல்லம் 'கரும்பின் தீஞ்சேறு' என்றும் கூறப்பட்டது.

> 'எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை
> விசயம் அடூஉம் புகைசூழ் ஆலை தொறும்
> கரும்பின் தீஞ்சாறு விரும்பினர் பெறுமின்'
> (பெரும்பாண், 260-261)

என்றும்,

'ஆலைக் கலமரும் தீங்கதழக் கரும்பே!'
(மலைபடு கடாம்: 119)

என்றும்,

'மழை கண்டன்ன ஆலைதொறும் ஞெரேரெனக்
கழைகண் உடைக்கும் கரும்பின் ஏத்தமும்'
(மலைபடு கடாம் : 340-341)

என்றும் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

திருவிழாக் காலத்தில் வீடுகளை அலங்கரித்த போது வாழை மரத்தையும் கருப்பங் கழிகளையும் கட்டி அலங்காரம் செய்தார்கள்.

'காய்க்குலைக் கமுகும், வாழையும், வஞ்சியும்
பூக்கொடி வல்லியும், கரும்பும் நடுமின்'
(மணிமேகலை 1: 46-47)

வெல்லத்தை மக்கள் அதிகமாகப் பயன்படுத்தியமையால் வெல்லங் காய்ச்சும் தொழிலும் கரும்பு பயிரிடும் விவசாயமும் தமிழகத்தில் சிறப்பாக நடந்தன.

வெல்லம் சர்க்கரை விற்ற வாணிகருக்கு **பணித வாணிகர்** என்பது பெயர். மதுரைக்குப் பதின்மூன்று கல் தூரத்தில் அழகர் மலை என்னும் மலையும் கோயிலும் உள்ளன. அழகர் மலைக்கு அருகே கிடாரிப்பட்டி என்னும் ஊருக்கு அருகில் இந்த மலையின் மேல் இயற்கையாக அமைந்த ஒரு குகை இருக்கின்றது. இந்தக் குகையில் கி.மு. இரண்டாம் நூற்றுண்டில் பௌத்த, ஜைன மதத்து முனிவர்கள் இருந்து தவஞ் செய்தார்கள். அந்த முனிவர்கள் தங்குவதற்காக அந்தக் குகையைச் செப்பஞ் செய்து குகைக்குள் கற்படுக்கைகளைச் சில செல்வர்கள் அமைத்தார்கள். கற்படுக்கைகளையமைத்தவரின் பெயர்கள் அக் குகையிலே பிராமி எழுத்தினுல் எழுதப்பட்டுள்ளன. அப் பெயர்களில் ஒருவர் பெயர் **பணித வாணிகன் நெடுமூலன்** என்று எழுதப்பட்டிருக்கின்றது.* பணித வாணிகன் என்றுல் வெல்லக் கட்டி சர்க்கரை விற்கும் வாணிகன் என்பது பெயர். இந்தப் பிராமி எழுத்தின் அமைப்பைக் கொண்டு இது கிருத்து

* (M. E. R No. 75 of 1910)

வுக்கு முன்பு இரண்டாம் நூற்றுண்டில் எழுதப்பட்டதென்று ஆராய்ச்சி அறிஞர்கள் கூறுகிருர்கள். எனவே அந்தப் பணித வாணிகன் நெடுமூலன் 2200 ஆண்டுகளுக்கு முன்னே கடைச் சங்க காலத்தில் இருந்தவன் என்பது தெரிகின்றது.

அந்தக் காலத்தில் ஐரோப்பாக் கண்டத்தில் வாழ்ந்தவர் களுக்குக் கரும்பும் கரும்புக் கட்டியும் தெரியாது. அவர்கள் தேனையுண்டனர். தேனும் போதிய அளவு கிடைத்திருக் காது. கி.பி. 15 ஆம் நூற்றுண்டில் ஐரோப்பியருக்குக் கரும் பும் வெல்லமும் தெரிந்தன. ஐரோப்பாவில் விளைந்த பீட்ரூட் கிழங்கிலிருந்து சர்க்கரையைக் காய்ச்சும் விதத்தை அவர்கள் 18 ஆம் நூற்றுண்டில் அறிந்தனர். பாரத நாட்டிலும் தமிழகத்திலும் 2,000 ஆண்டுகளுக்கு முன்பே கரும்பும் கரும்புக் கட்டியும் தெரிந்திருந்தன. தமிழகத்தில் கரும்புப் பயிர் செய்வதும் கரும்புக் கட்டிக் காய்ச்சுவதும் சங்க காலம் முதல் நடைபெற்று வருகின்றன.

## கள்ளும் மதுவும்

ஆதிகாலம் முதல் உலகமெங்கும் மதுவும் கள்ளும் அருந்தப்பட்டன. தமிழகம் உட்பட பாரத நாடு முழு வதும் அக்காலத்திலிருந்து மதுபானம் அருந்தப்படுகின்றது. தமிழ் நாட்டிலே எல்லாத் தரத்து மக்களும் கள்ளையும் மது வையும் அருந்திஞர்கள் என்பதைச் சங்கச் செய்யுட்களி லிருந்து அறிகின்ரேம். முடியுடை மன்னரும் குறுநில அர சரும் புலவர்களும் போர் வீரர்களும் ஆண்களும் பெண் களும் செல்வரும் வறியவரும் எல்லோரும் மது அருந்திஞர் கள். பௌத்த, சமண மதத்தாரும் திருவள்ளுவர் போன்ற அறிஞர்களும் கள்ளுண்பதைக் கண்டித்த போதிலும் மக்கள் கள்ளையும் மதுவையும் அருந்தி வந்ததைச் சங்கச் செய்யுட் கள் சான்று கூறுகின்றன. இருக்கு வேதம் கூறுகிற 'சோம யாக'த்தைத் தமிழ் நாட்டு ஆரிய பிராமணர் தமிழ் நாட்டில் செய்ததாகச் சான்று இல்லை. ஆனல் வேள்வி (யாகம்) செய்து மது மாமிசம் அருந்தியதைச் சங்கச் செய்யுட்கள் கூறுகின்றன. சங்க காலத்தில் தமிழகத்தில் நடக்காத சோம யாகத்தைப் பிராமணர் பிற்காலத்தில் பக்தி இயக்கக்

காலத்தில் பெருவாரியாகச் செய்தனர். சோம பானத்தைக் கொண்டு சோமயாகம் செய்து சோமயாஜி என்று பெயர் பெற்ற நூற்றுக்கணக்கான சோமயாஜிப் பிராமணரைப் பாண்டியர் செப்பேடுகளும் பல்லவர் செப்பேடுகளும் கூறுகின்றன. சோமயாஜிப் பார்ப்பனன் ஒருவன் சோம பானத்தைக் குடித்துக் குடித்துத் தம்முடைய மனத்தைச் சுத்தப் படுத்திக் கொண்டதாக (மனோ அத்தர் ஆகியதாக!) ஒரு பாண்டிய செப்பேட்டுச் சாசனம் கூறுகின்றது. (தளவாய் புரச் செப்பேடு, வரி 138.) ஆனால் நம்முடைய இப்போதைய ஆய்வு சங்க காலத்தோடு மட்டும் நிற்கிறபடியால் அந்த ஆராய்ச்சிக்குப் போக வேண்டியதில்லை.

சங்க காலத்துத் தமிழகத்திலே கள்ளும் மதுவும் உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால் அவை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகவில்லை. உள் நாட்டிலேயே செலவாயின. கள், தேறல், தோப்பி, பிழி, நறவு, மகிழ், மட்டு முதலான பெயர்கள் மதுபானங்களுக்குப் பெயராகக் கூறப்பட்டுள்ளன. ‘தெண் கட்டேறல்’ (அகம், 336:6), ‘பாப்புக் கடுப்பன்ன தோப்பி’ (அகம், 348:7), ‘பாம்பு வெகுண்டன்ன தேறல்’ (சிறுபாண்-237), ‘தண்கமழ் தேறல்’ (புறம், 24), ‘மணங் கமழ் தேறல்’ (மதுரை, 780), ‘பூக்கமழ் தேறல்’ (பொருநர், 157), ‘இன்களி நறவு’ (அகம், 173:16), ‘தீந்தண் நறவம்’ (புறம், 292), ‘மண நாறு தேறல்’ (புறம், 397: 14), ‘அரவு வெகுண்டன்ன தேறல்’ (புறம், 736:14), ‘மகிழ்தரல் மரபின் மட்டு’ (புறம், 390:16) என்று சங்கச் செய்யுட்கள் மதுபானங்களைப் புகழ்கின்றன.

தென்னை பனை மரங்களிலிருந்து கள் இறக்கப்பட்டது. நெல், தினை முதலான தானியங்களிலிருந்து மது வகைகள் உண்டாக்கப்பட்டன. ‘கொழு மடல் தெங்கின் விளைபூந் தேறல்’ (மணி, 3:89) என்று தென்னங்கள் கூறப்படுகின்றது. ‘இரும் பனம் தீம்பிழி’ (நற், 38:3) என்றும், ‘பிணர்ப் பெண்ணைப் பிழி’ (பட்டினப், 89) என்றும், ‘நுளை மகள் அரித்த பழம்படு தேறல்’ (சிறுபாண், 58) என்றும், ‘இரும் பனம் தீம்பிழி யுண்போர் மகிழும்’ (நற், 38:8) என்றும் பனங்கள் கூறப்படுகின்றது.

நெல், தினை முதலான தானியங்களிலிருந்தும் மது பானங்கள் உண்டாக்கப்பட்டன. இவற்றிற்குத் தோப்பிக்கள் என்று பெயர் கூறப்பட்டது. இறைற வீடுகளில் காய்ச்சினார்கள். 'இல்லடு கள்ளின் தோப்பி' (பெரும் பாண், 142) 'துகளற விளைந்த தோப்பி' (அகம், 205) சாடிகளில் தோப்பிகள் காய்ச்சப்பட்டன. 'வல்வாய்ச் சாடியின் வழைச் சற விளைந்த வெந்நீரரியல் விரலலை நறும்பிழி' (பெரும்பாண், 281) என்று கூறப்படுகின்றது. 'தினைக் கள் உண்ட தெளி கோல் மறவர்' (அகம், 284:8) என்று தினையரிசிக்கள் கூறப்படுகின்றது.

மலை நாடுகளில் இருந்த குறவர் அங்குக் கிடைத்த பொருள்களிலிருந்து மதுவை உண்டாக்கிக் கொண்டார்கள். மலையுச்சியில் மலைப்பாறைகளில் மலைத் தேன் கிடைத்தது. மலைகளிலும் மலைச் சாரல்களிலும் பலா மரங்களும் பலாப் பழங்களும் கிடைத்தன. மலைகளில் மூங்கில் புதர்கள் வளர்ந்தன. குறவர் பலாச் சுளைகளிலிருந்து ஒரு வகையான மது பானத்தை உண்டாக்கினார்கள். 'தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்.' (அகம், 128:3, 182:3) மூங்கிற் குழாய்களில் மலைத் தேனைப் பெய்து வாயை யடைத்து நிலத்தில் புதைத்து வைத்து ஒருவித மதுபானத்தையுண்டாக்கினார்கள். 'வேய் பெயல் விளையுள் தேக்கட்டேறல் குறைவின்றிப் பருகி நறவு மகிழ்ந்து.' (மலைபடு கடாம், 171-172) (வேய்-மூங்கில்.) 'திருந்தமை விளைந்த தேக்கட்டேறல்.' (அமை-மூங்கில்) (மலைபடு, 523), 'நிலம் புதைப் பழுநிய மட்டின் தேறல்' (புறம், 120:12), 'வாங்கு அமைப் பழுநிய தேறல்.' (புறம், 129:2) (அமை-மூங்கில்) 'ஆம் பணை விளைந்த தேக்கட்டேறல்' (அகம், 368:14) (பணை-மூங்கில்). 'அமைவிளை தேறல் மாந்திய கானவன்.' (சிலம்பு, 27:217) பாரியின் பறம்பு மலையில் இருந்தவர்களும் மூங்கிற் குழையில் தேனைப் பதப்படுத்தி மதுவாக்கி உண்டனர். 'நிலம்புதைப் பழுநிய மட்டின் தேறல்.' (புறம், 120:12)

மலைவாழ் குறவர் பலாச் சுளையையும் தேனையும் கலந்து மூங்கில் குழையில் பெய்துப் பதப்படுத்திய மதுவை உண்டு மகிழ்ந்தனர்.

'தேன்தேர் சுவைய திரளமை மாத்துக்
கோடைக் கூழ்த்த கமழ் நறுந் தீங்கனி
பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுளை யளைஇ
இருளொடு கலந்த வண்டு மூசு அரியல்
நெடுகண் ஆடமைப் பழுநிக் கடுந்திறல்
பாப்புக்கடுப் பன்ன தோப்பிவான் கோட்டுக்
கடவுளோங்கு வரைக் கோக்கிக் குறவர்
முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி.'

(அகம், 348:2-9)

ரோமாபுரியிலிருந்து வாணிகத்துக்காக வந்த யவனர் மதுபானத்தையும் கொண்டு வந்தார்கள். அது திராட்சைப் பழச் சாற்றினால் செய்யப்பட்ட கொடிமுந்திரிச் சாறு **(Wine)**. அது விலையதிகமாகையால் அரசர் மட்டும் வாங்கி யருந்தினார்கள். இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனை நக்கீரர் வாழ்த்தினபோது, யவனர் தந்த தேறலை உண்டு மகிழ்ந்திருப்பாயாக என்று வாழ்த்தினார்.

'யவனர்
நன்கலந் தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்
ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினிது ஒழுகுமதி ஓங்குவாள் மாற.'

(புறம், 56)

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்திய போதும் 'மணங் கமழ் தேறலை' உண்டு மகிழ்ந்திருப்பாயாக என்று வாழ்த் தினார்.

'இலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்
மகிழ்தினிது உறைமதி பெரும''

(மதுரை. 779-81)

மாங்குடி மருதனார் இன்னொரு செய்யுளிலும் அப்பாண்டி யனை அவ்வாறே வாழ்த்தினார்.

'ஒண்டொடி மகளிர் பொலந்கலத் தேந்திய
தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினி தொழுகுமதி பெரும'

(புறம், 24:31-33)

சேரமான் மாவெண்கோவும் பாண்டியன் கானப் பேரெயில்கடந்த உக்கிரப் பெருவழுதியும் சோழன் இராச சூயம் வேட்ட பெருங்கிள்ளியும் ஒருங்கிருந்தபோது அவர் களை அவ்வையார்,

'பாசிழை மகளிர் பொலங்கலந் தேந்திய
நாரரி தேறல் மாந்தி மகிழ்சிறந்து'

(புறம், 367: 6-7)

இருப்பீர்களாக என்று வாழ்த்தினர். 'வேந்தர்க்கேந்திய தீந்தண் நறவம்' (புறம், 291-1)

அரிக்கமேடு என்னும் இடத்தை அகழ்ந்து பார்த்த போது அங்கு கி.மு. முதல் நூற்றாண்டில் யவனர் (கிரேக்க-ரோமர்) தங்கியிருந்த வாணிக நிலையம் கண்டுபிடிக்கப் பட்டது. அங்குக் கிடைத்த பல பொருள்களில் கிரேக்க நாட்டுச் சாடிகளும் கிடைத்தன. அந்தச் சாடிகள் உரோம் தேசத்தில் செய்யப்பட்டவை. அக்காலத்தில் யவனர் மது பானங்களை வைப்பதற்காக உபயோகப்பட்டவை. 'யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்' என்று சங்கச் செய்யுள் கூறியதற்குச் சான்றாக இந்த யவனச் சாடிகள் உள்ளன. பாலாறு கடலில் கலக்கும் இடத்தில் தொல்பொருள் ஆய் வாளர் நிலத்தை அகழ்ந்து பார்த்த போது அவ்விடத்தில் கிடைத்த பொருள்களுடன் யவனருடைய மதுச் சாடிகளும் கண்டெடுக்கப்பட்டன. மத்தியத் தரைக்கடல் நாடுகளில் செய்யப்பட்ட இந்த மதுச் சாடிகளுக்கு 'அம்பொரே' (Amphorac) என்பது பெயர். வட இந்திய அரசர்களும் யவன மதுவை வாங்கியுண்டனர். அசோக சக்கரவர்த்தி யின் தந்தையான பிந்துசார மன்னன் யவன மதுவை வர வழைத்து அருந்தினன் என்று கூறப்படுகின்றது.

அரசர், வீரர், புலவர், மாலுமிகள், உழவர் முதலான எல்லா வகையான மக்களும் அக்காலத்தில் மது அருந்

தினர்கள். அந்த மது வகைகள் தமிழ் நாட்டிலே உற்பத்தி யாகி உள்நாட்டிலேயே விற்பனை ஆயின. வெளி நாடு களுக்கு ஏற்றுமதியாகவில்லை. கள்ளையும் மதுவையும் விற்ற வர் பெண்டிர்.

## மிளகு (கறி)

சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் உணவுக்கு மிகவும் முக்கியமான பொருளாக இருந்தது மிளகு. ஆனால் மிளகு எல்லா நாடுகளிலும் உண்டாகவில்லை. சேர நாட் டிலே மலைச் சாரல்களில் (சையமலை என்னும் மேற்குத் தொடர்ச்சி மலைகளில்) மிளகுக் கொடிகள் வளர்ந்தன. சேர நாட்டில் வாழ்ந்த அக்காலத்துத் தமிழர், இக்காலத்து மலையாளிகளைப் போல, மிளகைப் பயிரிட்டு மிளகு உற்பத்தி செய்தார்கள். கிழக்கிந்தியத் தீவுகளாகிய சாவக நாட்டி லேயும் அக்காலத்தில் மிளகு உண்டாயிற்று. ஆனால் அந்த மிளகு சேர நாட்டு மிளகைப் போன்று சிறந்தவையல்ல. சேர நாட்டுக்கு வடக்கேயிருந்த துளு நாட்டிலும் (இப் போதைய தென் கன்னட மாவட்டம்) மிளகு உண்டாயிற்று. சங்க காலத்தில் சேர நாடும் துளு நாடும் தமிழ் பேசும் தமிழ் நாடாகவே இருந்தன. பிற்காலத்தில் சேர நாட்டில் பேசப்பட்ட தமிழ் மலையாள மொழியாகவும் துளு நாட்டில் பேசப்பட்ட தமிழ், துளு மொழியாகவும் மாறிப் போயின. துளு நாட்டிலும் சேர நாட்டிலும் மிளகு நன்றாக விளைந்தது. மிளகு, உணவைப் பக்குவப்படுத்துவதற்கு இன்றியமையாத பொருளாக இருந்தபடியால் அது உலக முழுவதும் தேவைப் பட்டது. (இக்காலத்தில் சமையலுக்கு உபயோகப்படுகின்ற மிளகாய் அக்காலத்தில் கிடையாது. அக் காலத்தில் அமெ ரிக்கா கண்டம் இருந்தது ஒருவருக்கும் தெரியாது. கி.பி. 15 ஆம் நூற்றாண்டில் அமெரிக்கா கண்டம் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டு அங்குத் தென் அமெரிக்காவிலிருந்து மிளகாய் கொண்டு வரப்பட்டது. இது நிகழ்ந்தது சமீப காலத்தில் தான்.) சேரநாட்டு மிளகு அக்காலத்தில் உலக முழுவதும் பேர் பெற்றிருந்தது. ஐரோப்பா கண்டத்திலிருந்த யவ னர்கள் சேர நாட்டு மிளகை அதிகமாக வாங்கிக் கொண்டு

போனுர்கள். அதனுல் மிளகுக்கு 'யவனப் பிரியா' என்று பெயர் உண்டாயிற்று. மிளகுக்குக் கறி என்றும் மிரியல் என்றும் பெயர் உண்டு. சோழ நாட்டுக்குச் சாவக நாட்டிலிருந்து மிளகு இறக்குமதியாயிற்று என்பதைப் பட்டினப் பாலையிலிருந்து அறிகின்ரேம்.

சங்கச் செய்யுட்களிலே சேர நாட்டு மிளகும் மிளகுக் கொடியும் கூறப்படுகின்றன. குடபுலத்தில் (சேர நாட்டில்) கறிக் கொடி (கறி=மிளகு) பலா மரங்களின் மேலே படர்ந்து வளர்ந்ததை நத்தத்தனுர் கூறுகிருர். 'பைங்கறி நிவந்த பலவின் நீழல்' (சிறுபாணுற்றுப் படை. அடி 43) மலைகளில் சந்தன மரங்களின் மேலேயும் மிளகுக் கொடிகள் படர்ந்து வளர்ந்தன. 'கறி வளர் சாந்தம்' (அகம், 2:6) மலைகளில் மிளகுக் கொடி வளர்ந்தது. 'கறிவளர் அடுக்கம்' (குறும், 288:1) (அடுக்கம்–மலை) கருவூர் கதப் பிள்ளைச் சாத்தனுரும் 'கறிவளர் அடுக்க'த்தைக் கூறுகிருர். (புறம், 168:2). 'கறிவளர் சிலம்பை' ஆவூர் மூலங் கிழார் கூறுகின்ருர். (அகம், 112:14) (சிலம்பு-மலை). மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனுர், 'துறுகல் நண்ணிய கறியிவர் படப்பை'யைக் கூறுகிருர் (அகம், 272:10) (படப்பை–தோட்டம்). நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் (அடி 309) கறிக்கொடியைக் கூறுகின்ருர்.

மிளகாய் இல்லாத அந்தக் காலத்திலே மிளகு உணவுக்கு மிகவும் பயன்பட்டது. உப்பு எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு இன்றியமையாத பொருளாக மிளகு இருந்தது. காய்கறிகளை உணவாகச் சமைத்த போது அதனுடன் கறியை (மிளகை)யும் கறிவேப்பிலையையும் பயன் படுத்தினுர்கள்.

> 'பசுங்காய்ப் போழொடு கறி கலந்து
> கஞ்சக நறுமுறி யளைஇ'

என்று பெரும்பாணுற்றுப்படை (வரி 307, 308) கூறுகின்றது. நமது நாட்டில் மட்டுமன்று, உலகத்திலே மற்ற நாடுகளிலும் மிளகு தேவைப்பட்டது. ஆகவே மிளகு

வாணிகம் மிகச் சிறப்பாக நடந்தது. மேற்குத் தொடர்ச்சி மலைகளையடுத்த சேர நாட்டிலும் துளு நாட்டிலுமே மிளகு உண்டானபடியால் இந்த இடங்களிலிருந்தே மிளகு மற்ற எல்லா நாடுகளுக்கும் சென்றது. பாண்டிநாடு, சோழநாடு, கொங்குநாடு, தொண்டைநாடு முதலான தமிழகத்து நாடுகளுக்கும் தமிழகத்துக்கு அப்பால் வடக்கேயுள்ள பாரத தேசத்து நாடுகளுக்கும், பாரசீகம் எகிப்து உரோமாபுரி கிரேக்கம் முதலான தேசங்களுக்கும் சேர நாட்டு மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டது. தமிழகத்தின் மேற்குக் கரை யோரங்களில் விளைந்த மிளகு கிழக்குக்கரை யோரத்திலிருந்த காவிரிப்பூம் பட்டினத்துக்கும் வண்டிகளிலும் பொதிமாடு பொதி கழுதைகளிலும் கொண்டுவரப்பட்டது. 'காலின் வந்த கருங்கறி மூடை' என்று இதனை கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறுகிறார் (பட்டினப்பாலை, அடி 186) (கால்-வண்டி, பொதிமாடு முதலியன. கறி மூடை = மிளகு மூட்டை) (வணிகச் சாத்து வணிகக் கூட்டம்). மிளகு பொதிகளைக் கழுதைகளின் முதுகின் மேல் ஏற்றிக்கொண்டு நெடுஞ்சாலை வழியே சென்றதையும் மிளகு மூட்டைகள் பலாக்காய் அளவாக இருந்ததையும் வழியில் இருந்த சுங்கச் சாவடி களில் அரச ஊழியர் சுங்கம் வாங்கினதையும் அந்தப் புல வரே கூறுகிறார்.

> 'தடவுநிலைப் பலவின் முழுமுதல் கொண்ட
> சிறுசுளைப் பெரும்பழம் கடுப்ப மிரியல்
> புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ்
> நோன்புறத்து
> அணர்ச்செவி கழுதைச் சாத்தோடு வழங்கும்
> உல்குடைப் பெருவழி.'
>
> (பெரும்பாண், 77-89)

(பலவின் முழுமுதல்-பலா மரத்தின் அடிப்புறம்; பலா மரத்தின் அடிப்பக்கத்தில் பலாப் பழங்கள் காய்ப்பது இயல்பு; கடுப்ப-போல; மிரியல்-மிளகு, கறி; நோன் புறம்-வலிமையுள்ள முதுகு; சாத்து-வணிகக் கூட்டம்; உல்கு-சுங்கம், சுங்கச் சாவடி.)

காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் மிளகு மூட்டைகள் தரைவழியாக வந்தன என்று கூறப்படுவதனால், இந்த மிளகு மூட்டைகள் மற்றப் பொருள்களோடு வெளி நாடுகளுக்குக் கப்பலில் ஏற்றியனுப்பப்பட்டன என்று கருத வேண்டியிருக்கின்றது.

அரபு தேசத்து அராபியர் பழங்காலத்தில் தமிழகத்தின் மேற்குக் கடற்கரைத் துறைமுகப் பட்டினங்களுக்கு வந்து மிளகை வாங்கிக் கொண்டுபோய் எகிப்து உரோமாபுரி முதலான மத்திய தரைக்கடல் பிரதேசங்களில் விற்றனர். கி.மு. முதல் நூற்றாண்டில், யவனர் (கிரேக்கரும் உரோமரும்), அராபியரிடமிருந்து மிளகு வாணிகத்தைக் கைப்பற்றினார்கள். அவர்கள் நேரடியாகத் தாங்களே கப்பல்களைச் சேர நாட்டுத் துறைமுகப் பட்டினங்களுக்குக் கொண்டுவந்து முக்கியமாக மிளகையும் அதனுடன் மற்றப் பொருள்களையும் ஏற்றிக் கொண்டு போனார்கள். அவர்கள் முக்கியமாக முசிறித் துறைமுகப் பட்டினத்துக்கு வந்தனர். அவர்கள் முசிறியை முசிறிஸ் (Muziri) என்று கூறினார்கள். கி.மு. முதல் நூற்றாண்டில் தொடங்கின யவனரின் கப்பல் வாணிகம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் நடந்தது. யவனர்கள் கிரேக்க மொழியில் அக்காலத்தில்எழுதி வைத்த 'செங்கடல் வாணிபம்' (Periplus of Erithe-rian Sea) என்னும் நூலிலும் பிளினி என்பார் எழுதிய நூலிலும் யவன-தமிழக் கடல் வாணிபச் செய்திகள் கூறப்படுகின்றன. யவனர்கள் தமிழகத்துக்கு வந்து சேரநாட்டு மிளகையும் கொங்கு நாட்டு நீலக் கல்லையும் பாண்டிநாட்டு முத்தையும் வாங்கிக் கொண்டு போனார்கள்.

யவன வாணிகர் மரக்கலங்களில் வந்து பொற்காசுகளைக் கொடுத்து மிளகை வாங்கிக்கொண்டுபோனதை அக்காலத்தில் நேரில் கண்ட தாயங்கண்ணனாரும் பரணரும் கூறுகிறார்கள்:

> 'சேரலர்
> சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> வளங்கெழு முசிறி' (அகம், 149: 8-11)

என்று தாயங் கண்ணனுர் கூறுகிருர். சேரர்களுடைய முசிறிப்பட்டினத்துக்கு யவன வாணிகர் வந்ததையும் அவர்களுடைய 'வினைமாண் நன்கலம்' அழகாக இருந்ததையும் அவர்கள் பொற் காசுகளைக் கொடுத்து மிளகை வாங்கிக் கொண்டு போனதையும் இவர் கூறுவது காண்க.

சேர நாட்டில் விளைந்த மிளகை வீடுகளில் மூட்டைக் கட்டி வைத்தார்கள். யவனக் கப்பல்கள் வந்தபோது மிளகு மூட்டைகளைப் படகுகளில் ஏற்றிக்கொண்டு கழிகளின் வழியே ஆற்றில் சென்று துறைமுகத்தில் தங்கியிருந்த யவனக் கப்பல்களில் ஏற்றுமதி செய்து அதற்கான பொற்காசுகளைப் பெற்றுக் கொண்டு வந்தனர் என்று பரணர் கூறுகிருர்.

'மனைக்குவைஇய கறிமூடையால்
கலிச்சும்மைய கரைகலக் குறுந்து
கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணியால் கரைசேர்க்குறுந்து'
(புறம், 343)

(மனைக்குவைய-வீடுகளில் குவித்து வைத்த; கறிமூடை-மிளகு மூட்டை. கலம்-(யவனரின்) மரக்கலம்; பொற் பரிசம்-பொற்காசு)

யவனக் கப்பல்கள் சேரநாட்டுக்கு வந்து வாணிகம் செய்தபடியால் சேர மன்னருக்குப் பொருள் வருவாய் அதிகமாயிற்று. இதனைக் கண்ட துளுநாட்டு அரசனுன நன்னன் இந்த வாணிகத்தைத் தன் நாட்டில் வைத்துக் கொள்ள எண்ணினுன். நன்னனுடைய துளு நாட்டில் அக்காலத்தில் முக்கியமான துறைமுகப் பட்டினமாக இருந்தது மங்கலபுரம் என்னும் மக்களூர். இந்தத் துறைமுகம் நேத்திராவதி ஆறு கடலில் கலக்கிற இடத்தில் இருந்தது. பிளினி என்னும் யவனர் அந்தத் துறைமுகத்தை நைத்ரியாஸ் (Nitrias) என்று கூறியுள்ளார். இவர் கூறுகிற நைத்ரியாஸ் என்பது நேத்திராவதி. நேத்திராவதி ஆறு கடலில் கலக்கிற இடத்தில் மங்களூர் இருந்தபடியால் இத்துறைமுகப் பட்டினத்தை அவர் நைத்ரியாஸ் என்று கூறினுர் என்று தோன்றுகின்றது. சேரநாட்டுக்கு வருகிற கப்பல்கள் துளு நாட்டு மங்களூர் துறைமுகத்தைக் கடந்துதான் வரவேண்டும். ஆனுல்

யவனக் கப்பல்கள் மங்களூர்த் துறைமுகத்துக்கு அதிகமாக வருவதில்லை.

யவனர் தமிழ்நாட்டுக்கு வாணிகம் செய்ய வந்தது முக்கியமாக மிளகுக்காகவே. யவனர் தமிழர்-கடல்வாணிகம் கி.மு. முதல் நூற்றுண்டிலிருந்து கி.பி. மூன்றும் நூற்றுண்டு வரையில் நடைபெற்றதைச் சங்கச் செய்யுள்களிலிருந்தும் யவனரின் நூல்களிலிருந்தும் அறிகின்றோம். இந்த வாணிகச் செய்தியைத் தமிழகத்தில் ஆங்காங்கே கண்டெடுக்கப்பட்ட பழங்காசுப் புதையல்களிலிருந்து கிடைத்த உரோம தேசத்துப் பழங்காசுகள் வலியுறுத்துகின்றன.

உலக முழுவதும் அக்காலத்தில் புகழ்பெற்று இருந்த மிளகை வட இந்தியரும் உபயோகித்தனர் என்பது சொல்லாமலே அமையும். வடநாட்டார் மிளகை மரிசி என்று சொன்னார்கள். வட மொழியிலும் (சமஸ்கிருதம்) மிளகுக்கு மரிசி என்பது பெயர். மரிசி என்பது முசிறி என்பதன் திரிவு. முசிறித் துறைமுகத்திலிருந்தே மிளகு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதனால், அந்தப் பட்டினத்தின் பெயர் மிளகுக்கு ஏற்பட்டது. முசிறி என்னும் சொல் முரசி என்று திரிந்து பிறகு மரிசி என்றாயிற்று.

கி.பி. 15 ஆம் நூற்றுண்டில் தென் அமெரிக்கா கண்டத்திலிருந்து மிளகாய் கொண்டு வரப்பட்டது. இப்போது மிளகாயும் உபயோகப்படுத்தப்படுகின்றது. ஆனால், மிளகின் பெருமையும் சிறப்பும் இன்றும் குறையவில்லை.

## அறுவை (துணி)

தமிழ் நாட்டில் பருத்திப் பஞ்சு விளைந்தது. பருத்தியை நூல் நூற்று ஆடை நெய்தார்கள். ஆகவே பருத்தி பயிரிடும் தொழிலும், பருத்தியிலிருந்து நூல் நூற்கும் தொழிலும், நூற்ற நூலைத் துணியாக நெய்யும் நெசவுத் தொழிலும், அதனை விற்கும் வாணிபத் தொழிலும் நடைபெற்றன. தமிழகத்தில் துணி விற்கப்பட்டதோடு மட்டும் அல்லாமல் வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. சங்கச் செய்யுள்களிலிருந்து அக்காலத்துப் பருத்தித் தொழிலை பற்றி அறிகிறோம்.

'கல் சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைப் தாழி முதற் கலித்த கோழிலைப் பருத்தி' (அகம், 129:6-8), 'பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும், புன்புலந்தழிஇய அங்குடிச் சீறூர்' (புறம், 304:7-8) என்றும், 'காஞ்சியின் அகத்துக் கரும்பருத்தியாக்கும் தீம்புனல் ஊரன்' (அகம், 156:6-7 என்றும், 'பருத்தி வேலிச் சீறூர் மன்னன்' (புறம், 299:1) என்றும் பருத்தி பயிரிடப்பட்டது கூறப்படு கின்றது. பருத்திக்காய் முற்றி முதிர்ந்து வெடித்துப் பஞ்சி வெளிப்பட்டபோது அவற்றைக் கொய்து கொண்டு போய் வ்ட்டில் வைத்தார்கள். 'கோடைப் பருத்தி வீடு நிறை பெய்த, மூடைப்பண்டம் இடை நிறைந்தன்ன' (புறம், 393:12-13)

'வில்' அடித்துப் பஞ்சியிலிருந்து கொட்டை நீக்கப் பட்டது. கொட்டை நீக்கப்பட்ட பஞ்சு வெண்மேகம் போலக் காணப்பட்டது. 'வில்லெறி பஞ்சியின் வெண் மழை தவழும்' (அகம், 133:6) கொட்டை நீக்கிய பஞ்சை நூலாக நூற்கிருர்கள். அக்காலத்தில் கையினுலே நூல் நூற்கப்பட்டது. நூலே நூற்றவர்கள் மகளிர். ஆண்மகன் ஆதரவு இல்லாத பெண்டிர் பஞ்சை நூலாக நூற்ருர்கள். அவர்கள் இரவிலும் சிறு விளக்கு வெளிச்சத்தில் நூல் நூற்ருர்கள். 'ஆளில் பெண்டிர் தாளிற் செய்த நுணங்கு நுண்பனுவல்' (நற்றிணை, 353: 1-2), 'பருத்திப் பெண்டின் சிறு தீ விளக்கம்' (புறம். 326:5).

நூலினுல் முரட்டுத் துணிகளும் மெல்லிய துணிகளும் நெய்யப்பட்டன. குளத்தில் படரும் பாசிபோன்ற (ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசிவேர்) போன்ற நூலினுல் முரட்டுத் துணிகள் நெய்யப்பட்டன. நுண்மையான நூல்களினுல் மெல்லிய துணிகள் நெய்யப்பட்டன. பால் ஆவிபோன்ற மெல்லிய துணிகளும் பாம்புத்தோல் போன்ற அழகான துணிகளும், காகிதம் போன்ற மெல்லிய துணிகளும் பல வகையாக நெய்யப்பட்டன. 'இழை மருங்கறியா நுழை நூற் கலிங்கம்' (மலைபடு, 156) 'பாம்புரித் தன்ன பொன் பூங் கலிங்கம், (புறம், 397: 15), 'போதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன அகன்றுமடி கலிங்கம்' (புறம், 393:17-18)

'நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து, அரவுரி யன்ன அறுவை' (பொருநர், 82-83) 'காம்பு சொலித் தன்ன அறுவை' (சிறுபாண், 236). இவ்வாறு பலதர மான ஆடைகள் நெய்யப்பட்டன.

அக்காலத்துத் தமிழர் சட்டை அணியவில்லை. அரை யில் ஓர் ஆடையும் தோளின்மேல் ஓர் ஆடையும் ஆக இரண்டு துணிகளை மட்டும் அணிந்தார்கள். இக் காலத்தில் உடுப்பதுபோல அதிகமாக ஆடைகளை அணியவில்லை. 'உண்பது நாழி உடுப்பவை இரண்டே' (புறம், 189:5) துணியைச் சட்டையாகத் தைத்து அணியும் வழக்கமும் அக் காலத்தில் இல்லை. அரச ஊழியர்களில் முக்கியமானவர் மட்டும் மெய்ப்பை (சட்டை அணிந்தார்கள்) பாண்டிய அரசனுடைய அரசாங்கத்து ஊழியர் மெய்ப்பை (சட்டை) அணிந்திருந்தனர். பாண்டியனுடைய பொற்கொல்லன் சட்டையணிந்திருந்தான். அவனைக் கோவலன் மதுரை நகரத் தெருவில் சந்தித்தான். 'மெய்ப்பைபுக்கு விலங்கு நடைச் செலவிற் கைக்கோற் கொல்லனைக் கண்டனனாகி' (சிலம்பு, 16:107-108) மெய்ப்பை-சட்டை; பாண்டியனு டைய தூதர்களும் கஞ்சுகம் (சட்டை) அணிந்திருந்தார்கள். (சிலம்பு 26:166-172). சேரன் செங்குட்டுவனுடைய தூதர்களும் அவர்கள் தலைவனாகிய சஞ்சயனும் தலைப்பாகை யும் கஞ்சுகமும் (சட்டையும்) அணிந்திருந்தனர். 'சஞ் சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற, கஞ்சுக முதல்வர் ஈரைஞ் ஞூற்றுவர்' (சிலம்பு, 26:137-138) செங்குட்டுவனுடைய ஒற்றரும் அவர்களின் தலைவனான நீலனும் கஞ்சுகம் (சட்டை) அணிந்திருந்தார். நீலன் முதலிய கஞ்சுக மாக்கள் (சிலம்பு, 28:80) அரசாங்கத்து முக்கிய ஊழியர் தவிர, சங்க காலத் தில் மற்ற யாவரும் சட்டையணியவில்லை.

தமிழகத்திலிருந்து வெளி நாடுகளுக்கும் துணி ஏற்று மதியாயிற்று. பாடலிபுரம் காசிபோன்ற கங்கைக்கரைப் பிரதேசங்களுக்குத் தமிழ்நாட்டுத் துணிகள் அனுப்பப் பட்டன. கவுடல்யரின் அர்த்த சாத்திரம் **மாதுரம்** என்னும் துணியைக் கூறுகின்றது. பாண்டி நாட்டு மதுரையிலிருந்து சென்றபடியால் அதற்கு மாதுரம் என்று பெயர் கூறப்பட்டது.

அர்த்த சாத்திரம் சந்திரகுப்த மௌரியன் காலத்தில் கி.மு. மூன்றும் நூற்றுண்டில் எழுதப்பட்டது என்று கூறப்படு கின்றபடியினுல் அக்காலத்திலேயே தமிழ்நாட்டு ஆடைகள் வட நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன என்பது தெரி கின்றது. தமிழ்நாட்டிலிருந்து ஆடைகள் சாவக நாட்டுக் கும் கிழக்கிந்தியத் தீவுகளாகிய இந்தோனேஷியாவுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்க வேண்டும். அக்காலத்தில் அந்நாடுகளில் பஞ்சும் துணியும் உற்பத்தி செய்யப்பட வில்லை. ஆனுல், தமிழகத்துத் துணிகள் அங்குக் கொண்டு போகப்பட்டதற்குச் சான்றுகள் இல்லை.

தமிழர் கலிங்க தேசத்துக்குக் கி.மு. மூன்றும் நூற் ருண்டிலேயே சென்று வாணிபம் செய்தனர் என்று ஹாத்தி கும்பாகுகைச் சாசனம் கூறுகின்றது. கலிங்க நாட்டுக்குச் சென்று வாணிகஞ் செய்த தமிழர் அங்கிருந்து பருத்தி யாடைகளைத் தமிழகத்துக்குக் கொண்டு வந்தனர். கலிங்க நாட்டிலிருந்து வந்த ஆடைக்குக் கலிங்கம் என்று பெயர் கூறப்பட்டது. தமிழகத்தில் கலிங்க ஆடைகள் அதிகமாக விற்கப்பட்டன. கலிங்கத் துணிகளுக்குச் சிறப்புப் பெயராக வழங்கப்பட்டது. கலிங்கம் என்ற பெயர் பிற்காலத்தில் எல்லாத் துணிகளுக்கும் பொதுப் பெயராக வழங்கப்பட்டது. சங்கச் செய்யுட்களில் கலிங்கம் என்றும் பெயர் பொதுவாக எல்லாத் துணிகளுக்கும் வழங்கப்பட்டதைக் காண்கின்ருேம்.

தமிழ் நாட்டிலே அக்காலத்திலும் பட்டாடைகள் உடுத்தப்பட்டன. செல்வர் பருத்தியாடையையும் பட் டாடையும் அணிந்தார்கள். 'பட்டு நீக்கித் துகில் உடுத் தும்' என்று பட்டினப்பாலை (அடி 105) கூறுகின்றது. 'கொட்டைக் கரைய பட்டுடை' என்று பொருநர் ஆற்றுப் படை (அடி 155) கூறுகின்றது. 'அரத்தப்பூம்பட்டு அரை மிசை உடீஇ, என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. (சிலம்பு, 4:86) பட்டுத்துணி தமிழகத்தில் உற்பத்தியாகவில்லை. அந்தக் காலத்திலே பட்டு சீன நாட்டில் மட்டும் உற்பத்தி யாயிற்று, வேறெங்கும் அக்காலத்தில் உற்பத்தியாகவில்லை. சீனர்கள் பட்டுத் துணியைச் சாவக நாட்டுக்குக் கொண்டு வந்து விற்ருர்கள். வாணிகத்துக்காகச் சாவக நாட்டுக்குச்

சென்ற தமிழர் அங்கிருந்து பட்டுத் துணிகளைத் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வந்தார்கள். தமிழர்களிடமிருந்து பட்டுத் துணிகளை யவனர் வாங்கிக் கொண்டு போனார்கள். சீன நாட்டுப் பட்டு சாவகத் தீவுக்கு வந்து அங்கிருந்து தமிழகத்துக்குக் கொண்டு வரப்பட்டு, இங்கிருந்து யவன நாட்டுக்குக் கொண்டு போகப்பட்டது. பாரசீகம் எகிப்து ரோமாபுரி முதலான நாடுகளுக்குப் (பட்டுத்துணி சீன நாட்டிலிருந்து மத்திய ஆசியா வழியாகவும் தரைவழியாகச் சென்றது). பாண்டி நாட்டுத் தொண்டித் துறைமுகத்திலே கிழக்குக் கடலிலிருந்து (சாவக நாட்டிலிருந்து வந்த பொருள் களில்) பட்டுத் துணியும் கூறப்படுகின்றது.

> 'ஓங்கிரும் பரப்பின்
> வங்க வீட்டத்துத் தொண்டியோர் இட்ட
> அகிலும் துகிலும் ஆரமும் வாசமும்
> தொகு கருப்பூரமும் சுமந்துடன் வந்த
> கொண்டலொடு புகுந்து'
>
> (சிலம்பு, 14: 106-110)

இவை கிழக்குக் கடல்களிலிருந்து கொண்டல் (கிழக்குக்) காற்றின் உதவியினால் கப்பல்களில் வந்தவை. இவற்றில் துகில் என்பது பட்டுத்துணி. கிழக்கிலிருந்து வந்த படைத் தமிழ் நாட்டிலிருந்து அரபியரும் யவனரும் வாங்கிக் கொண்டு போய் மேற்கு நாடுகளில் விற்றார்கள்.

தமிழ் நாட்டிலுண்டான பருத்தித் துணிகளுக்குச் சிவப்பு, நீலம், மஞ்சள் முதலான சாயம் ஊட்டினார்கள். ஆனால், வெண்மையான துணிகளையே தமிழர் பெரிதும் விரும்பினார்கள். வெள்ளையாடை சிறப்பாகவும் உயர்வாகவும் மதிக்கப்பட்டது. பிறந்த நாளாகிய வெள்ளணி நாளிலே வெள்ளாடையுடுத்துவது சிறப்பாக இருந்தது.

சங்க காலத்திலே பருத்திப் பயிர்செய்வதும் நூல் நூற்பதும் துணி செய்வதும் ஆடை விற்பதுமாகிய தொழில் சிறப்பாக நடந்தது. துணிகளை விற்ற வணிகருக்கு அறுவை வாணிகர் என்று பெயர் கூறப்பட்டது. மதுரையில் இருந்த இளவேட்டனார் என்னும் புலவர் அறுவை வாணிகம் செய் தார். ஆகையால் அவர் மதுரை அறுவை வாணிகன் இள

வேட்டனர் என்று பெயர் பெற்றார். அவர் இயற்றிய பன்னிரண்டு செய்யுட்கள் சங்க இலக்கியங்களில் தொகுக்கப்பட்டுள்ளன. (அகம், 56, 124, 230, 254, 272, 302 குறும், 185. நற்றிணை, 33, 157, 221, 344, புறம், 329)

## உப்பு

'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்பது பழமொழி. உணவுக்குச் சுவை அளிப்பது உப்பு. ஆகையால் இது 'வெண்கல் அமிழ்தம்' எனப்பட்டது. ஆதிகாலத்திலிருந்து உப்பு மனிதருக்கு உணவாகப் பயன்படுகின்றது. உணவுக்கு மட்டுமல்லாமல், ஊறுகாய், கருவாடு (உப்புக் கண்டம்) முதலானவைக்கும் உப்பு வேண்டப்படுகின்றது. ஆகவே உப்பை எல்லா நாடுகளிலும் உண்டாக்கினார்கள். தமிழகத்திலும் உப்பு செய் பொருளாகவும் வாணிகப் பொருளாகவும் உணவுப் பொருளாகவும் இருந்து வருகின்றது.

நெய்தல் நிலமாகிய கடற்கரை தமிழ் நாட்டைச் சூழ்ந்திருந்தபடியால் ஆங்காங்கே உப்பளங்கள் இருந்தன. ஆகையால் தமிழகத்துக்கு எக்காலத்திலும் உப்புப் பஞ்சம் ஏற்பட்டதேயில்லை. உப்பளங்களில் பாத்திகள் அமைத்துக் கடல் நீரைப் பாய்ச்சி உப்பு விளைத்தார்கள். பாத்திகளில் பாய்ச்சப்பட்ட கடல் நீர் வெயிலில் ஆவியாகிப் போய் உப்பு பூக்கும். இதுவே 'கடுவெயில் கொதித்த கல்விளை உப்பு' (நற்,345:8) ஏர் உழாமல் உவர் நிலத்திலே உப்பு விளைவித்தபடியால் அவர்கள் 'உவர்விளை உப்பின் உழா உழவர்' (நற், 831:1) என்று கூறப்பட்டார்கள்.

உப்பளங்களில் உப்பு விளைந்த பிறகு உப்பைக் குவியல் குவியலாகக் குவித்து வைத்தார்கள். பிறகு, உப்பை வாங்குவதற்கு வருகிற உப்பு வாணிகரை எதிர் பார்த்திருந்தார்கள்.

'உவர்விளை உப்பின் உழாஅ உழவர்
ஓகை உமணர் வருபதம் நோக்கி
கானல் இட்ட காவற் குப்பை'

(நற், 331:1-3)

(உவர்-உவர் நிலம், உப்பளம்; உமணர்-உப்புவாணிகர்; கானல்-கடற்கரை; குப்பை-குவியல்).

உமணர் (உப்பு வாணிகர்) மாட்டு வண்டிகளில் நெல்லை ஏற்றிக் கொண்டு போனார்கள். அக்காலத்தில் பெரிதும் பண்டமாற்று வாணிகம் நடந்தது. ஆகையால் காசு கொடுத்து வாங்காமல் பண்டங்களை மாற்றினார்கள். நெல்லுக்கு மாற்றிய உப்பை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு போனார்கள். அவர்கள் மனைவி மக்களொடு வந்து உப்பை வாங்கிக் கொண்டு குடும்பத்தோடு ஊர் ஊராக வண்டியை ஓட்டிக் கொண்டுபோய் உப்பை விற்றார்கள்.

'தந்நாடு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி
நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி
அவண் உறை முனிந்த ஒக்கலோடு புலம்பெயர்ந்து
உமணர் போகலும்.'

(அகம், 183: 1-5)

(தந்நாடு-உமணருடைய நாடு; பிறநாடு-(இங்கு) நெய்தல் நிலம்; கொள்ளை சாற்றி-விலைகூறி; ஒழுகை-வண்டி; அவண் -அங்கே; ஒக்கல்-சுற்றம்).

உமணர் உப்பு வண்டிகளை ஓட்டிக்கொண்டு கூட்டங் கூட்டமாகச் சென்றார்கள்.

'உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி
அதர்படு பூழிய சேண்புலம் படரும்
ததர்கோல் உமணர் போகும் நெடுநெறிக்
கணநிரை வாழ்க்கை'

(அகம், 390: 1-4)

கடற்கரைக்கு அப்பாலுள்ள உள்நாடுகளுக்கும் மலைநாடுகளுக்கும் எருதுகள் உப்பு வண்டியை இழுத்துக்கொண்டு போயின.

'கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்தாள் பகடு'

(புறம், 60: 8-9)

(கழி-உப்பங்கழி; கல்நாடு-மலைநாடு; சாகாடு-வண்டி; ஆழ்ச்சி போக்கும்-பள்ளத்திலிருந்து மேட்டின்மேல் செல்லும் பகடு-எருது).

உமணர் ஒரே ஊரில் தங்காமல் ஊர்கள் தோறும் சென்றனர். அவர்கள் குடும்பத்தோடு நிலையா வாழ்க்கையை நடத்தினுர்கள்.

'உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை
மலை உய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்
கணங்கொள் உமணர்'

(நற், 138:1-3)

பாரமான வண்டியை இழுத்துக் கொண்டு எருதுகள் மேட்டில் ஏறியும் பள்ளத்தில் இறங்கியும் செல்லும் போது வண்டியின் அச்சு முறிந்து விடுவதும் உண்டு. அதன் பொருட்டு ஆயத்தமாக சேம அச்சு கொண்டு போனுர்கள் (புறம், 102: 1-2). உமணர் பாதிரிப் பூவையும் அலரிப் பூவையும் தொடுத்துக் கட்டின பூமாலையைத் தலையில் அணிந்து காலில் செருப்பு அணிந்து கையில் தடி ஏந்திச் சென்ருர்கள்.

'அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ
எரியிதழ் அலரியொடு இடைபட விரைஇ
வண்தோட்டுத்தொடுத்த வண்டுபடு கண்ணித்
தோல்புதைச் சிற்றடிக் கோலுடை யுமணர்'

(அகம், 191:1-4)

உமணர் ஆங்காங்கே வழியில் தங்கி உணவு சமைத்து உண்டு ஒய்வு கொண்டு மீண்டும் பிரயாணஞ் செய்தார்கள் (அகம், 159: 1-4). சில இடங்களில் சமைக்கவும் உண்ணவும் நீர் கிடைக்காது. அவ்விடங்களை அகழ்ந்து குழி உண்டாக்கிச் சுரக்கும் நீரை உண்டனர் (அகம், 295: 9-14). தீக்குச்சி இல்லாத காலமாகையால் அவர்கள் தீக்கடைகோலினுல் தீயுண்டாக்கிச் சோறு சமைத்தார்கள் (அகம், 169:5-8).

போகிற வழியில் தங்கி ஊருக்குள் சென்று உப்பு விற்ருர்கள். உமண ஆடவர் ஊர்க்குள் சென்று உப்பு விற்பதில்லை. உமணப் பெண்கள் உப்பை ஊர்க்குள் கொண்டு போய் விற்ருர்கள். அவர்கள் காசுக்கு உப்பு விற்கவில்லை. உப்பை நெல்லுக்கு மாற்றினுர்கள்.

'நெல்லும் உப்பும் நேரே, ஊரீர்
கொள்ளீரோ வெனச் சேரிதொறும் நுவலும்'

(அகம், 390 : 8-9)

(சேரி-தெரு; நுவலும்-சொல்லும்)

'கதழ்கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எவ்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லின்நேரே வெண்கல் உப்பெனச்
சேரிவிலைமாறு கூறலின்'

(அகம், 140: 5-8)

ஆறுகளும் கால்வாய்களும் உள்ள ஊர்களில் படகுகளில் உப்பை ஏற்றிக் கொண்டு போய் விற்றார்கள். உப்பை நெல்லுக்கு மாற்றி அந்த நெல்லைப் படகில் ஏற்றிக் கொண்டு போனார்கள் என்று கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறுகின்றார்.

'கொழும் பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியின் அணைமுதற்பிணிக்கும்
கழிசூழ் படப்பை'

(பட்டினப்பாலை, 27-32)

மாட்டு வண்டிகள் போகமுடியாத பாறைகளும் மலைகளும் மேடுகளும் உள்ள ஊர்களுக்கு உப்பு மூட்டைகளைக் கழுதைமேல் ஏற்றிக் கொண்டுபோய் விற்றார்கள். அவர்கள் கூட்டமாகச் சேர்ந்து நல்ல நிமித்தம் பார்த்து வீரர்களையும் அழைத்துக் கொண்டு மலைநாடுகளுக்குப் போனார்கள். கொள்ளைக்காரர் இடைவழியில் வந்து கொள்ளையிடுவதும் உண்டு. ஆகையினால் அவர்கள் தங்களுடன் வீரர்களை அழைத்துக் கொண்டு போனார்கள்.

'அணங்குடை முந்நீர் பரந்த செருவின்
உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்
குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்
படையமைந் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்
நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்
குறைக்குளம்பு தைத்த கற்பிறழ் இயவு'

(அகம், 207:1-6)

(புள் ஓர்த்து-நன்னிமித்தம் பார்த்து; படை அமைத்து-வீரர்களை அமைத்து; கல் பிறழ் இயவு-பாறைக் கற்கள் உள்ள வழி.)

'பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவாள் வயவர் '

(அகம், 89: 12-13)

உப்பு மூட்டைகள் மட்டுமல்லாமல் மிளகு முதலான வேறு பண்டங்களைச் சுமந்து கொண்டு போகக் கழுதைகளை யும் அக்காலத்தில் பயன் படுத்தினார்கள்.

'இல்போல் நீழல் செல்வெயில் ஒழிமார்
நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்
புறநிறைப் பண்டத்துப் பொறையசாக் களைந்து'

(அகம், 343: 11-13)

உப்பு உற்பத்தியும் உப்பு வாணிகமும் செம்மையாக நடந்தன. தமிழகத்துக்கு உப்பு வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகவில்லை. தமிழ் நாட்டுக்கு வெளியே ஏற்று மதி செய்யவும் இல்லை. தமிழகத்திலே உண்டாக்கப்படடுத் தமிழகத்திலேயே செலவு செய்யப்பட்டது.

**வளை (சங்கு)**

சங்குக்குத் தமிழ் பெயர் வளைஎன்பது. தமிழகத்தின் மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருந்த படியால் வளை அதிகமாகக் கிடைத்தது. சங்குகளில் இடம்புரிச் சங்கு என்றும் வலம்புரிச் சங்கு என்றும் இருவகையுண்டு. வலம் புரிச் சங்கு கிடைப்பது அருமை. ஆகையால் வலம்புரிச் சங்குக்கு விலையதிகம். சங்குகளை வளைகளாக அறுத்து வளை யல் செய்தார்கள். அக்காலத்துத் தமிழ் மகளிர் எல்லோரும் சங்கு வளைகளைக் கையில் அணிந்தார்கள். கண்ணாடி வளை யல் அணிவது அக்காலத்து வழக்கம் அல்ல. சங்குவளை யணிவது மங்கலமாகக் கருதப்பட்டது. அரண்மனையில் வாழ்ந்த அரசகுமாரிகள் முதல் குடில்களில் வாழ்ந்த ஏழை மகள் வரையில் எல்லோரும் அக்காலத்தில் சங்கு வளைகளை அணிந்தார்கள். ஆகவே வளைகளை (சங்குகளை) வளையல்களாக அறுத்து வளையல் உண்டாக்கும் தொழில் அக்காலத்தில் சிறப் பாக நடந்தது. கடல்களிலிருந்து சங்குகள் எடுக்கப்பட்டன.

கொற்கைக் கடலில் முத்து உண்டானது போலவே சங்குகளும் உற்பத்தியாயின. பரதவர் கடலில் முழுகிச் சங்குகளை எடுத்தபோது, சங்கு முழங்கி ஊருக்குத் தெரிவித்தார்கள்.

'இலங்கிரும் பரப்பின் எறிசுறு நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்
ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்
கலிகெழு கொற்கை'

(அகம், 350: 11-13)

(வலம்புரி-வலம்புரிச் சங்கு; பரதவர்-கடற்கரையில் வசிக்கும் நெய்தல் நிலமக்கள்; கடலில் கப்பல் ஓட்டுவதும் முத்து சங்குகளைக் கடலில் முழுகி எடுப்பதும் இவர்கள் தொழில்; பணிலம் ஆர்ப்ப-சங்கு முழுங்க)

கொற்கைக் கடலில் மட்டுமன்று, கடலில் பல இடங்களிலும் கடலிலிருந்து சங்கு எடுக்கப்பட்டது. சங்குகளை (வலம்புரிச் சங்குகள், இடம்புரிச் சங்குகள்) சிறு வாளினால் அறுத்து அரத்தினால் அராவி அழகான வளையல்களைச் செய்தார்கள்.

'வல்லோன்
வாளரம் பொருத கோணேர் எல்வளை'

(நற்றிணை, 77: 8-9)

வளையல்களில் கொடிகள் பூக்கள் வரிக் கோடுகள் முதலியவை அமைத்து அழகாகச் செய்யப்பட்டன. வளையல் அறுக்கும் தொழில் ஆங்காங்கே நடந்தது. சங்கச் செய்யுள்களில் இத்தொழில் கூறப்படுகின்றது. 'அரம்போழ் அவ்வளை' (ஐங்குறுநூறு, நெய்தல் 106) 'கடற்கோடு அறுத்த அரம் போழ் அவ்வளை' (ஐங்குறு, வளைபத்து 48) 'கோடீர் எல்வளை' (ஐங்குறு, வளைப்பத்து) 'கோடீர் இலக்குவளை' (குறும், 31:5) (கோடு-சங்கு) சங்குகளை வளையாக அறுத்துத் தொழில் செய்தவர்களுக்கு வேளாப் பார்ப்பான் என்று பெயர்.

'வேளாப் பார்ப்பான் வாள்அரம் துமித்து
வளைகளைந் தொழிந்த கொழுந்து'

(அகம், 24: 1-2)

வேளாப்பார்ப்பான் என்பதன் பொருள் வேள்வி செய்யாத பார்ப்பான் என்பது. அதாவது விசுவப் பிராமணர். சங்குகளை வளையாக அறுக்கும் தொழிலும் சங்கு வளைகளை விற்கும் தொழிலும் அக்காலத்தில் சிறப்பாக நடந்தன. முக்கியமான நகரங்களில் சங்கறுக்கும் தொழில் நடந்தது. காவிரிப்பூம்பட்டினத்தில் ஒரு வீதியில் சங்குகளை வளையல்களாக அறுக்கும் தொழில் நடந்தது. 'அணிவளை போழுநர் அகன்பெரு வதியும்' (சிலம்பு, 5-47) சோழ நாட்டு வஞ்சிமா நகரத்தில்,

> 'இலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோடு
> இலங்குமணி வினைஞர் இரீஇய மறுகும்'
>
> (மணிமே, 28: 44-45)

இருந்தன.

சங்கு வளைகளை அணிவதை அக்காலத்து மகளிர் நாகரிகமாகக் கருதினார்கள். அன்றியும் அது மங்கலமாகவும் கருதப்பட்டது. கைம் பெண்கள் தவிர ஏனைச் சுமங்கலிப் பெண்கள் எல்லோரும் சங்கு வளைகளை அணிந்தார்கள். 'அணிவளை முன்கை ஆயிழை மடந்தை' (அகம், 361:4) 'சின்னிரை வால்வளைக் குறுமகள்' (குறும், 189:6) 'வளைக் கை விறலி' (புறம், 135:4) 'வல்லோன் வாளரம் பொருத கோணேர் எல்வளை அகன்தொடி செறித்த முன்கை' (நற், 77: 8-10) என்றெல்லாம் சங்க நூல்களில் அக்காலத்து மகளிர் வளையணிந்திருந்தது! கூறப்படுகின்றன. சொக்கப் பெருமான் வளையல் விற்றதாகத் திருவிளையாடற் புராணத்தில் (வளையல் விற்ற படலம்) கூறப்படுகின்றது. இடம்புரிச் சங்கினால் செய்த வளையல்களைச் சாதாரண நிலையில் உள்ள பெண்கள் அணிந்தார்கள். வலம்புரிச் சங்குகள் விலையதிகமானபடியால் செல்வச் சீமாட்டிகளும் இராணிகளும் அணிந்தார்கள். செல்வ மகளிர் பொற்றொடு (பொன் வளையல்) அணிந்து அதனுடன் வலம்புரிச் சங்கு வளையலையும் அணிந்தார்கள். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுடைய அரசியாகிய பாண்டிமாதேவி கைகளில் தங்க வளைகளை அணிந்திருந்ததோடு வலம்புரிச் சங்கு வளையையும் அணிந்திருந்தார்.

'பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து'
(நெடுநெல்வாடை, 141-142)

என்று நெடுநெல்வாடை கூறுகின்றது. காவிரிப்பூம்பட்டினத்திலே பேர்போன செல்வச் சீமானுகிய இருந்த மாநாய்கன் மகளான கண்ணகியும் வலம்புரிச் சங்கு அணிந்திருந்தாள். மதுரையில் கோவலனை இழந்து கைம்பெண் ஆனபோது கண்ணகி தன் கைகளில் அணிந்திருந்த சங்கு வளையைக் கொற்றவைக் கோயிலின் முன்பு தகர்த்து உடைத்தாள் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. 'கொற்றவை வாயிலில் பொற்றொடி தகர்த்து' (கட்டுரைக் காதை, 181) (பொற்றொடி-பொலிவினையுடைய சங்கவளை. அரும்பத உரை).

மணமகன், தான் மணக்க இருக்கும் மணமகளுக்குச் சங்குவளை கொடுப்பது அக்காலத்து வழக்கம். சங்குவளை அணியும் வழக்கம் தமிழகத்தில் மட்டுமல்லாமல், பாரத நாடு முழுவதிலும் அக்காலத்தில் இருந்தது. இற்றைக்கு 3000 ஆண்டுகளுக்கு முன்னே சிந்து வெளியில் இருந்த ஹரப்பா நகரத்துத் திராவிட நாகரிக மகளிரும் சங்கு வளைகளை அணிந்திருந்தனர் என்பது அங்கு அகழ்ந்தெடுக்கப்பட்ட மனித எலும்புக் கூடுகளுடன் சங்கு வளைகளும் இருந்ததனால் அறிகிறோம்.* கொற்கை காவிரிப்பூம்பட்டினம் உறையூர் முதலான ஊர்களில் நிலத்தை அகழ்ந்தெடுத்தபோது அங்கிருந்து கிடைத்த பழம் பொருள்களுடன் உடைந்து போன சங்கு வளையல் துண்டுகளும் கிடைத்தன. இதனால், சங்க செய்யுட்களில் கூறப்படுகிற அக்காலத்து மகளிர் சங்குவளைகளை அணிந்திருந்தனர் என்னும் செய்தி வலியுறுகின்றது.

சங்கு முழங்குவது மங்கலமாகக் கருதப்பட்டது. கோயில்களிலும் அரண்மனைகளிலும் சங்கு ஊதுவது வழக்கம். அரண்மனைகளிலே காலை வேளையில் முரசு கொட்டியும் சங்கு முழங்கியும் அரசரைத் துயிலெழுப்பினார்கள். அரண்மனைகளில் வலம்புரிச் சங்கு காலையில் முழங்கியதை,

'தூக்கணங் குரீஇத் தூங்கு கூடேய்ப்ப
ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி

---

* (P. 86 **Ancient India,** No 3 Jan 1947)

ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத்தோன்றினும்'

(புறம், 225: 11-14)

என்றும்,

'மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்
வால் வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய
காலை முரசங் கனைகுரல் இயம்ப'

(சிலம்பு, 14: 12-14)

என்றும் கூறுவதனால் அறிகின்றோம். (கோயில்-அரண்மனை.)

பற்பல நூற்றாண்டுகளாக மகளிர் சங்கு வளைகளை அணிந்து வந்த வழக்கம் சமீபகாலம் வரையில் இருந்தது. கி.பி. 18 ஆம் நூற்றாண்டு முதல், முஸ்லீம் தொடர்பு ஏற்பட்ட பிறகு கண்ணாடி வளையல் அணியும் வழக்கம் ஏற்பட்டது. ஆகவே பழைய சங்கு வளை அணியும் வழக்கம் பிற்காலத்தில் மறைந்து போயிற்று.

சங்க காலத்திலே கடலினடியிலிருந்து சங்கு எடுக்கும் தொழிலும் சங்குகளை வளையல்களாக அறுக்கும் தொழிலும் வளையல் விற்கும் வாணிகமும் மகளிர் வளையல் அணிந்த வழக்கமும் இருந்தன. காதுகளில் சங்குக் குழையணிவதும் விரல்களில் சங்கு மோதிரம் அணிவதும் கூட அக்காலத்து வழக்கமாக இருந்தது.

## முத்து

தமிழ் நாட்டுக் கடலிலே முத்து உண்டாயிற்று. கடலிலே உண்டாகிற முத்துச் சிப்பி என்னும் ஒருவகைக் கிளிஞ்சிலில் முத்து உண்டாயிற்று. முக்கியமாக ஆறுகள் கடலில் கலக்கிற புகர் முகங்களிலே முத்துச் சிப்பிகள் அதிகமாக உண்டாயின. பாண்டி நாட்டு முத்து பேர்போனது 'தென் கடல் பவ்வத்து முத்து' என்று புகழப்படுகின்றது.

முத்து நவரத்தினங்களில் ஒன்றாக மதிக்கப்பட்டது. ஆகவே அது விலைமதிப்புள்ளது. அரசர்கள் 'ஏகவடம்' என்னும் முத்து மாலைகளை அணிந்தார்கள். ஏகவடம் அரசர்களுக்குரிய அடையாள அணிகளில் ஒன்று. செல்வர் வீட்டுப் பெண்களும் அரச குமாரிகளும் இராணிகளும் முத்து

மாலைகளை அணிந்தார்கள். உரோம் தேசத்து மகளிர் தமிழ் நாட்டு முத்துக்களைப் பெரிதும் மதித்தனர். தமிழ் நாட்டுக்கு வந்த யவன வாணிகர் இங்கிருந்து வாங்கிக் கொண்டு போன பொருள்களில் முத்தும் ஒரு பொருளாக இருந்தது.

தமிழகத்து முத்துக்களில் பாண்டி நாட்டு முத்து உலகப் புகழ் பெற்றிருந்தது. கொற்கைக் குடாக் கடலில் விளைந்த முத்து சங்கச் செய்யுள்களில் புகழப்படுகின்றது. 'முத்துப் படு பரப்பிற் கொற்கை முன்றுறை' (நற், 23-6). 'கொற் கையம் பெருந்துறை முத்து' (அகம், 27:9) சங்க காலத்தில் பாண்டி நாட்டின் கிழக்குக் கரையிலிருந்த கொற்கைக் குடாக் கடல் பிற்காலத்தில் மணல் தூர்ந்து மறைந்து போயிற்று. அக்கடல் உள்நாட்டில் ஐந்து மைல் ஊடுருவிக் குடாக் கடலாக அமைந்திருந்தது. அக்காலத்தில் தாமிர பரணியாறு கொற்கைக் குடாக் கடலில் சென்று விழுந்தது. அந்தப் புகர் முகத்திலே முத்துச் சிப்பிகளும், இடம்புரி வலம்புரிச் சங்குகளும் உண்டாயின. ஆறுகள் கடலில் கலக் கிற புகர் முகங்களிலே முத்துக்களும் சங்குகளும் அதிகமாக உண்டாயின. தாமிரபரணி ஆறு அக்காலத்தில் கொற்கைக் கடலில் விழுந்த புகர் முகத்திலே உண்டான முத்தைத்தான் கவ்டல்லியரின் அர்த்த சாத்திரம் தாம்ரபர்ணிகம் என்று கூறுகின்றது. கொற்கைக் கடல் ஓரத்தில் தாமிரபரணி ஆறு கடலில் கலந்த இடத்தில் கொற்கைப் பட்டினம் இருந்தது. கொற்கைக் கடலில் முத்துச் சிப்பிகளும் சங்கு களும் அதிகமாகக் கிடைத்தபடியாலும் துறைமுகப் பட்டின மாக இருந்தபடியாலும் கொற்கைப் பட்டினத்தில் பாண்டி யனுடைய இளவரசர்கள் தங்கி வாழ்ந்தார்கள்.

முத்துச் சிப்பிகளையும் சங்குகளையும் மூழ்கி எடுக்கும் போது அச்செய்தியைச் சங்கு முழங்கித் தெரிவிக்கப்பட்டது.

> 'சீருடைய விழுச்சிறப்பின்
> விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்
> இலங்கு வளை யிருஞ்சேரிக்
> கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
> நற்கொற்கையோர் நசைப் பொருந'

என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் கூறப்படுகின்றான் (மதுரை, 134-138).

கொற்கைக் கடலில் மீன் பிடிக்கும்போது மீனுடன் முத்துச் சிப்பியும் கிடைத்தனவாம். மீன் பிடிப்போர் அச் சிப்பிகளைக் கொண்டுபோய் கள்ளுக் கடையில் கொடுத்து அதற்கு மாறாகக் கள்ளை வாங்கியுண்டனர்.

> 'பன்மீன் கொள்பவர் முகந்த சிப்பி
> நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்
> பேரிசைக் கொற்கை'
>
> (அகம், 296: 8-10)

பழயர் மகளிர் கொற்கைக் கடலில் கடல் தெய்வத்தை வணங்கிய போது முத்தையும் வலம்புரிச் சங்கையும் கடலில் இட்டு வணங்கினராம்.

> 'பாண்டியன்
> புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்றுறை
> அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து
> தழையணிப் பொலிந்த கோடேந்தல்குல்
> பழயர் மகளிர் பனித்துறை பரவ'
>
> (அகம், 201: 4-7)

ஒருவன் குதிரை மேல் அமர்ந்து கடற்கரை யோரமாகச் சென்றபோது குதிரையின் குளம்புகளில் முத்துக்கள் தட்டுப் பட்டனவாம்.

> 'இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்
> கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்
> நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை'
>
> (அகம், 130: 9-11)

உப்பு வாணிகப் பெண்கள் கொற்கைக் கடற்கரைக்கு வந்து உப்பு வாங்கின போது அவர்கள் வளர்த்த குரங்குகளும் அவர்களின் சிறுவர்களும் கிளிஞ்சில்களின் உள்ளே முத்துக் களையிட்டுக் கிலி கிலியாடினார்களாம்!

> 'நோன்பகட் டுமணர் ஒழுகையொடு வந்த
> மகாஅர் அன்ன மந்தி மடவோர்
> நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்

வாள்வாய் எருந்தின் வயிற்றகத் தடக்கித்
தோள்புற மறைக்கும் நல்கூர் நுசுப்பின்
உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற
கிளம்பூம் புதல்வரொடு கிலி கிலி யாடும்
தத்துநீர் வரைப்பிற் 'கொற்கை '

(சிறுபாண், 55-62)

இதிலிருந்து கொற்கைக் குடாக் கடலில் முத்துக்கள் மலிந் திருந்தன என்பது தெரிகின்றது.

மகளிர் கால்களில் அணிகிற சிலம்பு என்னும் அணியின் உள்ளே சிறுசிறு கற்களைப் பரல் கற்களாக இடுவது வழக்கம். கொற்கைக் கடலில் முத்துக்கள் அதிகமாகக் கிடைத்தபடி யால், பாண்டிய அரசருடைய அரச குமாரிகள் அணிந்த சிலம்புகளிலே முத்துக்களைப் பரலாக இட்டிருந்தனர். ஆரியப் படை கடந்த அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன் நெடுஞ் செழியனுடைய அரசியாகிய பாண்டிமா தேவியின் சிலம்பி னுள்ளே முத்துக்கள் பரலாக இடப்பட்டிருந்தன என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. (வழக்குரை காதை 69)

'தாம்ரபர்ணிகம்' என்னும் முத்தை அர்த்த சாஸ்திரம் கூறுவது போலவே பாண்டிய கவாடகம் என்னும் முத்தை யும் கூறுகின்றது. இந்தப் பெயரே இது பாண்டி நாட்டில் உண்டானது என்பதைத் தெரிவிக்கின்றது.

சேர நாடடுத் துறைமுகப்பட்டினமாகிய முசிறிப் பட்டினத்திலும் முத்துக்கள் கிடைத்தன. பேர்போன பெரியாறு முசிறிக்கு அருகில் கடலில் கலக்கிற இடத்தில் முத்துக்கள் உண்டாயின. அந்த முத்துக்கள் முசிறியின் ஓர் இடமாகிய பந்தர் என்னும் இடத்தில் விற்கப்பட்டன என்று பதிற்றுப்பத்து கூறுகின்றது. 'பந்தர் பயந்த பலர் புகழ் முத்தம்' (பதிற்று 8 ஆம் பத்து 4 ஆம் செய்யுள்) 7 ஆம் பத்து 7 ஆம் செய்யுளில் 'பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்' 'தெண்கடல் முத்தம்' என்று கூறுகின்றது. பந்தர் என்பது அரபு மொழிச் சொல். இதன் பொருள் அங்காடி என்பது.

கவ்டல்லியரின் அர்த்த சாத்திரம் சேர நாட்டு முத் தையுங் கூறுகின்றது. அந்த முத்தை அர்த்த சாத்திரம்

கௌர்ணேயம் என்று கூறுகின்றது. பெரியாற்றுக்குச் சூர்ணியாறு என்றும் ஒரு பெயர் உண்டு. பெரியாருகிய சூர்ணியாறு கடலில் கலக்கும் புகர் முகத்தில் உண்டான படியால் அந்த முத்து சௌர்ணேயம் என்று கூறப் பட்டது. சூர்ணியாற்றில் உண்டாவது சௌர்ணேயம்: (தாமிர பர்ணியாற்றில் உண்டான முத்து தாம்ரபர்ண்ணியம் என்று கூறப்பட்டது போல.) சௌர்ணேயம் என்றும் பெயர் மருவி கௌர்ணேயம் என்ருயிற்று.*

காவிரி ஆறு கடலில் கலக்கிற இடமாகிய காவிரிப்பூம் பட்டினத்திலும் அந்தக் காலத்தில் முத்தும் சங்கும் உண் டாயிருக்க வேண்டும். ஆறுகள் கடலில் கலக்கும் இடங் களில் முத்துச் சிப்பியும் சங்கும் உண்டாவது மரபு. ஆனல், காவிரி ஆற்று முகத்துவாரத்தில் முத்தும் சங்கும் உண் டாயிற்ரு என்பது பற்றி ஒன்றும் தெரியவில்லை.

யானைக் கோடு (தந்தம்)

மலைகளிலும் மலையைச் சேர்ந்த காடுகளிலும் யானைகள் இருந்தன. கொங்கு நாட்டைச் சேர்ந்த யானைமலைக் காடு களில் யானைகள் அதிகமாக இருந்தன. கொங்கு நாட்டு யானை மலைகளும் அதனைச் சேர்ந்த காடுகளும் அக்காலத்தில் உம்பற்காடு (உம்பல்-யானை) என்று பெயர் பெற்றிருந்தன. யானைகளைப் பிடித்துப் பழக்கி அவைகளைப் போர்க்களங்களில் போர் செய்வதற்குப் பயன்படுத்திஞர்கள். அக்காலத்து அரசர்கள் வைத்திருந்த நான்கு வகையான சேனைகளில் யானைப் படையும் ஒன்று. குட்டுவன் என்னும் சேர அரசன் மிகப்பெரிய யானைப் படையை வைத்திருந்தபடியால் அவன் ‘பல்யானைச் செல்கெழு குட்டுவன்’ என்று பெயர் பெற்ருன். (யானைச் செல்-யானைக் கூட்டம்) கொங்கு நாட்டை அக் காலத்தில் அரசாண்ட ‘பொறையர்’ என்னும் சேர அரசர் யானைகளை அதிகமாக வைத்திருந்தார்கள். அவர்களுடைய யானைகள் பசு மந்தைகளைப் போலக் காணப்பட்டனவாம்.

அக்காலத்தில் குறிஞ்சி (மலை)களில் வாழ்ந்த குறவர் கள் யானைகளை வேட்டையாடிக் கொன்று அவற்றின் கோடு

* சேரநாட்டு முத்து, மயிலை சீனி வேங்கடசாமி, பக்கம் 493-498 தெ. பொ. மீ. மணிவிழா மலர்.

களை (தந்தங்களை)ச் சேர்த்து வைத்தார்கள். அவர்களுக்குச் சோற்றுப் பஞ்சம் வந்த காலத்தில் தந்தங்களை விற்று உணவு வாங்கி உண்டனர். யானைகளை வேட்டையாடிக் கொன்றார்கள்.

புலியோடு போர் செய்து புண்பட்டு இளைத்துப் போன யானையைக் கானவர் அம்பு எய்து கொன்று அதன் கோடுகளைக் கைக்கொண்டார்கள்.

> 'புலியொடு பொருத புண்கூர் யானை
> நற்கோடு நயந்த அன்பில் கானவர்
> விற்சுழிப்பட்ட நாமப் பூசல்'
>
> (நற்றிணை, 65: 5-7)

கொல்லி மலையில் இருந்த குறவர் உணவு கிடைக்காமல் பசித்திருந்த போது தங்களிடமிருந்த யானைக்கோடுகளை விற்று உணவு அருந்தினார்களாம்.

> 'காந்தளஞ் சிலம்பில் சிறுகுடி பசித்தெனக்
> கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்துண்ணும்
> வல்வில் ஓரி கொல்லிக் குடவரை'
>
> (குறுந், 100: 3-5)

வேங்கடமலையில் வாழ்ந்தவர் ஒன்று சேர்ந்து யானையை வேட்டையாடிக் கொன்று அதன் கோடுகளைக் கொண்டு போய் மதுக் கடையில் கொடுத்து மது அருந்தினார்கள். மதுவை நெல்லுக்கு மாற்றுவது வழக்கம். இவர்கள் நெல்லுக்குப் பதிலாக யானைக் கோட்டைக் கொடுத்தனர்.

> 'வரிமாண் நோன் ஞாண் வன்சிலைக் கொளீஇ
> அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்
> அண்ணல் யானை வெண்கோடு கொண்டு
> நறவு நொடை நெல்லின் நாண்மகிழ் அயரும்
> .. .. .. .. ..
> விழவுடை விழுச்சீர் வேங்கடம்'
>
> (அகம், 61: 7-13)

மலைவாழ் குறவர்கள் அந்தந்த நாட்டு அரசருக்குப் பண்டங்களைக் காணிக்கை செலுத்தும்போது யானைத் தந்தங்களையும் கையுறையாகக் கொடுத்தார்கள். சேரன் செங்குட்டு

வன், பெரியாறு மலையிலிருந்து விழுகிற இடத்தில் மலையடி வாரத்தில் வழக்கமாகச் சென்று தங்கி வேனிற்காலத்தைக் கழிப்பது வழக்கம். அவன் மலையடிவாரத்துக்கு வரும் போது மலையில் வாழுங் குறவர்கள் அவனுக்குக் காணிக்கைச் செலுத்தினார்கள். மலைகளில் கிடைக்கும் பொருள்களாகிய சந்தனக்கட்டை, அகிற்கட்டை, தேன், பலாப் பழங்கள், மிளகு முதலிய பொருள்களையும் யானைத் தந்தங்களையும் அவர்கள் கொண்டுபோய்க் கொடுத்தார்கள் என்று சிலப் பதிகாரம் (25 : 37) கூறுகின்றது.

யானைத் தந்தங்களினால் பலவகையான பொருள்கள் செய்யப்பட்டன. அயிரைமலைக் கொற்றவைக்குத் தந்தத்தினால் செய்த கட்டில் (ஆசனம்) இருந்தது (பதிற்றுப் பத்து 8 ஆம் பத்து 9).

யானைக் கோட்டை ஈர்வாளினால் அறுத்தும் கடைந்தும் பொருள்களைச் செய்தார்கள். அந்தத் தொழில் மதுரையில் நடைபெற்றதைச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. 'வேதினத் துப்பவும் கோடுகடை தொழிலவும்' (சிலம்பு, 14 : 176) என்று கூறுகின்றது. அரும்பதவுரையாசிரியர் இதற்கு, 'வேதினத் துப்பவும்—ஈர்வாளால் வலியப் பெற்றனவும் என்றது ஈருங்கருவியாற் பண்ணப்பட்டன. கோடு— தந்தம்' என்று உரை எழுதுகிறார். சீப்பு சிமிழ் முதலான பொருள்கள் தந்தத்தினால் செய்யப்பட்டன.

யானைக் கோடுகளை வெளியூர் வாணிகர் வாங்கிக் கொண்டு போனார்கள். யவனர்களும் மற்றப் பொருள் களோடு யானைக் கோடுகளையும் வாங்கிக்கொண்டு போனார் கள். சங்க காலத்தில் யானைக்கோடு வாணிகப் பொருள் களில் ஒன்றாக இருந்தது. 'யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்' என்னும் பழமொழி யுண்டு. யானை இறந்தால் அதன் தந்தங்களும் எலும்புகளும் அதிக விலைக்கு விற்கப்பட்டபடியால், இறந்தும் ஆயிரம் பொன் என்று கூறப்பட்டது.

யானைத் தந்தங்களும் அக்காலத்தில் முக்கியமான வாணிகப் பொருளாக இருந்தன.

**நீலக்கல்**

கொங்கு நாட்டிலே சங்க காலத்தில் விலையுயர்ந்த மணிக்கற்கள் கிடைத்தன. சங்கச் செய்யுட்களில் அந்த மணிகள் கூறப்படுகின்றன. கொங்கு நாட்டில் கதிர்மணி கிடைத்ததைக் கபிலர் கூறுகின்றார்.

'இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடு'

(7 ஆம் பத்து, 6: 19-20)

அரிசில் கிழாரும் அங்குக் கிடைத்த திருமணியைக் கூறுகிறார். உழவர் ஏர் உழுதபொழுது அந்த மணிகள் வெளிப்பட்டனவாம்.

'கருவி வானந் தண்டளி சொரிந்தெனப்
பல்விதை யுழவர் சில்லே ராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
கழுவுறு கலிங்கம் கடுப்பச் சூடி
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடு'

(8 ஆம் பத்து, 6: 10-15)

கொங்கு நாடு, சங்க காலத்தில், வடக்கே மைசூர் வரையில் இருந்தது. கன்னட நாட்டில் பாய்கிற காவிரி யாறு வரையில் கொங்கு நாடு அக்காலத்தில் பரவியிருந்தது. அந்த வடகொங்கு நாட்டிலே புன்னாடு என்னும் ஒரு பகுதியில் அக்காலத்தில் கோமேதகச் சுரங்கம் இருந்தது. புன்னாட்டின் தலைநகரம் கட்டூர். அது கப்பணி ஆற்றின் கரை மேல் இருந்தது. கப்பணி ஆறு, காவிரியில் கலக்கிற உபநதிகளில் ஒன்று. கப்பணி ஆற்றின் கரைமேல் இருந்த கட்டூர், பிற்காலத்தில் கிட்டூர் என்று வழங்கப்பட்டது. அது பிற்காலத்தில் கிட்டிபுரம் என்றும் பிறகு தீர்த்திபுரம் என்றும் வழங்கப்பட்டது. கட்டூர் அல்லது கிட்டூரைத் தலைநகரமாகக் கொண்ட புன்னாட்டை அக்காலத்தில் குறுநில மன்னன் ஆண்டு வந்தான்.

நவமணிகளில் கோமேதம் என்பது ஒருவகை. கோமேதகங்களில் பல வகையுண்டு. நீலம், பச்சை, மஞ்சள்,

பழுப்புநிறம் முதலான வகைகள் கோமேதகத்தில் உண்டு. இவைகளில் நீலநிறமான கோமேதகத்தை உரோமர் ஆக்வா மரினுன் (Aqua Marine) என்று கூறினார்கள். அந்த நீலக்கல் கடல்நீர் போன்ற நிறம் உள்ளது. அது அக்காலத்தில் புன்னாட்டைத் தவிர வேறெங்கும் கிடைக்கவில்லை. ஆகவே யவனக் கப்பல் வாணிகர் தமிழகத்துக்கு வந்து அவற்றை வாங்கிக் கொண்டு போனார்கள்.



**பழந்தமிழர் வாணிகக் கடல்வழிகள்**

புன்னாட்டில் நீலக்கல் சுரங்கம் ஒன்று அக்காலத்தில் இருந்தது. அந்த நீலக்கற்கள் அக்காலத்தில் உலகத்திலே வேறெங்கும் கிடைக்காத அழகான கற்கள். புன்னாட்டு நீலக்கற்களை யவன வாணிகர் வாங்கிக் கொண்டுபோய் ரோமாபுரியில் விற்றார்கள். ரோமாபுரிச் சீமாட்டிகள் இந்த நீலக்கற்களைப் பெரிதும் விரும்பினார்கள். ரோம் தேசத்தார் இந்த நீலக்கற்களை ஆக்வா மரினு (Aqua Marine) என்று கூறினார்கள். கடல் நீரின் நிறம் போல இருந்தபடியால் இப்பெயர் கூறப்பட்டது. யவனர் இந்த நீலக்கல் சுரங்கத்தைப் பற்றியும் நீலக்கற்களைப் பற்றியும் எழுதியுள்ளனர். புன்னாட்டில் நீலக்கல் சுரங்கம் இருந்ததைப் பிளினி என்னும் யவனர் எழுதியுள்ளார். யவனர், புன்னாட்டை **பவ்னட** என்று கூறினார்கள். புன்னாடு உள்நாடு என்றும் அங்கு நீலக்கற்கள் கிடைத்தன என்றும் எழுதியுள்ளனர்.

புன்னாட்டில் நீலக்கல் சுரங்கம் இருந்தபடியால் இந் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ள அந்நாட்டுக்கு அருகில் இருந்த துளுநாட்டு நன்னன் விரும்பினன். அவ்வாறே அவன் சிற்றரசனுகிய புன்னாட்டு அரசன்மேல் போருக்குச் சென்றான். அதனை அறிந்த சேரநாட்டுக் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், தன்னுடைய சேனைத் தலைவனாகிய ஆய் எயினன் தலைமையில் சேனையை அனுப்பிப் புன்னாட்டை நன்னன் கைப்பற்றாதபடி தடுத்தான். இதைப் பரணர் கூறு கின்றார்:

'பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகிற பாழி யாங்கண்
அஞ்சலென்ற ஆஅய் எயினன்
இகலடு கற்பிற் மிஞிலியொடு தாக்கித்
தன்னுயிர் கொடுத்தனன்'

(அகம், 396: 2-6)

கொங்கு நாட்டிலே படியூரிலும் (சேலம் மாவட்டம்) வாணியம்பாடியிலும் (கோயம்புத்தூர் மாவட்டம்) கதிர் மணிகள் கிடைத்தன. இவைகளை யவனர் வந்து வாங்கிக் கொண்டு போனார்கள்.

# பெயர் அகராதி

## முக்கியமாக இடப்பெயர் குறிப்பிடப்படுகிறது.

### அ



### ஆ



### இ



### ஈ



### உ



### எ

## ஓ



## க



## கா



## கி



## கு



## கொ

## தொ



## ந



## நா



## நி



## நெ



## நே



## நை



## ப



## பா



## பி



## பு



## பூ

யா



ரோ



வ



வா



வி



வை



ஜா



ஸு



ஸெ



ஹ



ஹி



ஹோ

